

"ஆறனுச்சாமி! எடுக்கறதுன்னு எடுங்க........"

[பக்கம் 51.

# புதுமைப் பித்தன் கதைகள்

## 1523



நவயுகப் பிரசுராலயம் லிமிடெட்
ஜி. டி., மதராஸ்

 [ரூ. 2.

# பொருளடக்கம்


| எண் | பொருள் | | பக்கம் |
|---|---|---|---|
| 1. | ஒரு நாள் கழிந்தது | ... | 1 |
| 2. | விநாயக சதுர்த்தி | ... | 17 |
| 3. | துன்பக் கேணி | ... | 29 |
| 4. | சிற்பியின் நரகம் | ... | 70 |
| 5. | வேதாளம் சொன்ன கதை | ... | 80 |
| 6. | பிரம்ம ராக்ஷஸ் | ... | 91 |
| 7. | வாழ்க்கை | ... | 111 |
| 8. | தெரு விளக்கு | ... | 120 |
| 9. | கலியாணி | ... | 123 |
| 10. | கவந்தனும் காமனும் | ... | 146 |
| 11. | ஞானக் குகை | ... | 150 |
| 12. | திறந்த ஜன்னல் | ... | 159 |
| 13. | மனித யந்திரம் | ... | 163 |
| 14. | கட்டில் பேசுகிறது | ... | 177 |
| 15. | கடிதம் | ... | 181 |
| 16. | கனவுப் பெண் | ... | 188 |
| 17. | ஆண் சிங்கம் | ... | 196 |
| 18. | இது மிஷின் யுகம் ! | ... | 212 |
| 19. | அகல்யை | ... | 215 |
| 20. | சங்குத் தேவனின் தர்மம் | ... | 222 |
| 21. | பறிமுதல் | ... | 230 |
| 22. | காலனும் கிழவியும் | ... | 236 |
| 23. | கோபாலபுரம் | ... | 245 |
| 24. | கொன்ற சிரிப்பு | ... | 251 |
| 25. | பொன்னகரம் | ... | 258 |
| 26. | சாயங்கால மயக்கம் | ... | 262 |
| 27. | நினைவுப் பாதை | ... | 266 |
| 28. | மனக் குகை ஓவியங்கள் | ... | 273 |
| 29. | — — | ... | 279 |

# முன்னுரை

இலக்கியம் ஓர் அகண்ட நந்தவனம். அதில் ஒவ்வொரு சமயத்தில் ஒரு ஜாதி மலர் விசேஷமாய்க் காணப்படுகிறது. இடையிடையே பெரிய காவியங்கள் மலர்கின்றன, நாடகங்கள் பூத்துச் சொரிகின்றன, உள்ளக் கிளர்ச்சிகளை உணர்த்தும் அகத்துறைப் பாக்கள் பூக்கின்றன, நாவல்கள் காட்டுப் பூக்கள் போலக் கொள்ளை கொள்ளையாக விரிகின்றன.

இவைகளெல்லாம் ஏக காலத்திலும் பூக்கலாம். இவைகளில் நாவல் வனத்திலே திரிய அவகாசமில்லாத பொழுது சிறுகதை மலர்களின் மணத்தை நுகர்ந்து உலகக் கவலையை மறந்து ஜனங்கள் இன்புறுகிறார்கள்.

ஜனங்கள் சிறுகதை மலர்களின் மணத்தை அதிகமாய் விரும்பவே, இலக்கிய நந்தவனத்தில் அந்தப் பூச்செடிகள் அதிகமாய்ப் பயிரிடப்பட்டன. அவைகளைப் பயிரிட்டுப் பாதுகாப்பது மிகவும் சிரமம். எனினும் நம் தேசத்திலும், முக்கியமாகத் தமிழ் நாட்டிலும் ஏராளமான கதைகள் மலர்ந்து பரிமளிக்கின்றன. கம்பனுக்குப் பின் ஒரு மகா கவியைக் காணோம். "தாயுமானவர் இல்லையா? இராமலிங்க சுவாமிகள் இல்லையா? பாரதியார் இல்லையா?" என்று சிலர் வினவலாம். கம்பனின் காம்பீரியக் கவிப் பிரவாகத்தைப் பார்த்த கண்களுக்கு இவர்களெல்லாம் அழகாய்ச் சலசலவென ஓடுகிற சிற்றோடைகள்தான். பெரிய காவியங்கள் தோன்றாதது போலவே சிறந்த நாடகங்களும் தோன்றவில்லை. உயர்ந்த நாவல்களும் இல்லை. ஆயினும் நம் நாட்டு மறுமலர்ச்சியில் சிறுகதை மணம் கமழ்கிறது. இது ஓர் அதிசயம்.

கதை மலர்களில் நம் நாட்டு வித்துக்களிலிருந்து வெடித்து வெளிக் கிளம்பினவைகள் எத்தனை? வெளி நாட்டு வித்துக்கள் நம் நாட்டு உரம் பெற்று வளர்ந்தனவா? அல்லது அந்நிய நாட்டு மலர்கள்தான் நம் நாட்டு மலர்கள் போலப் போலிச் சோபையைக் காட்டுகின்றனவா? உற்று நோக்கினுல் கதை மலர்களில் இந்த மூன்று ரகங்களும் விரவிக் கிடப்பதைக் காணலாம்.

அழகான கதைகள் மலர்வதென்றால் அதற்கு வளம் மிகுந்த ஒரு வளர்ப்புப் பண்ணை வேண்டும். அப் பண்ணையில் உருவிலா, மணமிலாப் பூக்கள் பல பூத்து, வாடி, மண்ணோடு மண்ணாக மக்கி எருவாகி யிருக்கவேண்டும். இதில் ஆச்சரியமில்லை. முன் பூத்து வாடிய மலர்களே இப்பொழுதுள்ள கதைகளுக்கு உரமாகியிருக்கின்றன. நம்முடைய சாரமற்ற கதைகளே இனிப் பூக்கும் வாடாத மலர்களுக்கு எருவாகிவிடுகின்றன.

தமிழ் இலக்கியத்தில் சமீப காலத்தில் அலர்ந்துள்ள கதை மலர்கள் பல. அவற்றில் பெரும்பாலானவை இன்னும் புஸ்தக ரூபத்தில் வரவில்லை. என் கைக்குக் கிடைத்த கதைகளில் அதிக அழகாய் அமைந்த சிலவற்றைக் கீழே குறிப்பிடுகிறேன்:

கொட்டுகிற மழையிலே, இருளை வெட்டுகிற மின்னலிலே, காற்று விம்மி விம்மி அடிக்க, முடிவில் உயிரை மாய்த்துக்கொண்ட ருக்மணியின் சோகத்தைத் தன் ஆயிர இலை வாய்களினுல் ஓலமிட்ட 'குளத்தங்கரை அரசமரம்' மனத்தை விட்டு அகலுமோ? கடை, ரயில்வே ஸ்டேஷன், சினிமா முதலிய இடங்களில் சிந்தை தேக்கிய முகத்துடன் ராமநாதய்யர் தேடியும் காணுத 'தேவானை' யின் கஷ்டத்தைப்பற்றி வாசித்த எவர் உள்ளந்தான் உருகாது? "அருள் சுரந்தது; ஆனுல் மார்பில் பால் சுரந்ததோ!" என்று பூர்த்தியாகிற ஒரு தாயின் கதை நம் உள்ளத்தைக் கவராமல் போகாது.

முருகனும் கிருஷ்ணனும் இறுதியில் ஒருவருக் கொருவர் பார்த்துக் கண்ணீர்விட்ட காட்சியைத் தருகிற 'கலைஞன் தியாகம்' நம் அகக் கண்முன் ஓடிவரும். "நீ வச்சுக்கக் கூடாதா அத்தெ?" என்று குழந்தை கேட்க, ஒரு விதவை யின் மனத்தில் துயின்றுகொண்டிருந்த ஆயிரம் உணர்ச்சி கள் குமுறி வருகிறதைச் சித்திரிக்கும் 'பூச்சூட்டல்', தொலை யாத இருட்டில் புழுங்கிக் கலங்கும் குஞ்சம்மாவின் உள்ள உணர்ச்சிகளை நயம்படக் காட்டும் 'விடியுமா?', ராதாவின் மாமா சந்திரன் நினைவு அலைகளை யெழுப்பும் 'ஞாபகம்', சுழித்தோடுகிற துங்கபத்திரா நதிக்கரையில் சின்னபின்ன மாய்க் கிடக்கும் சிற்பங்களை ராமராயனின் சிதைந்த காதல் மாளிகையெனக் கூறும் 'ராமராயன் கோயில்', கணவனுக்கு அனைத்தையும் அர்ப்பணம் செய்யும் காமாட்சி அம்மாளின் தியாகத்தைக் காட்டும் 'போன் வளையல்', ஜானகிராமய்யர் அம்புஜவல்லி இவர்கள் அகத்தில் அருவிபோல் ஓடுகிற அன்பைக் காட்டும் 'பெற்றோர்கள்', தனக்குத் தகுந்த கண வன் வராது ஏங்கி வாடும் பார்வதியின் வேதனையைக் காண் பிக்கும் 'என்று வருவானோ?'—இக் கதைகள் என் அறிவு வட்டத்திற்குள் மிதந்து வருகின்றன. இவை தவிர வேறு பல அழகிய தமிழ்க் கதைகளும் இருக்கலாம். பல இளம் எழுத்தாளர்களின் கதைகள் அவ்வப்பொழுது பத்திரிகை களில் வெளிவருகின்றன. இவையெல்லாம் தொகுக்கப் பெற்றுப் புத்தகங்களாக வெளிவந்தால்தான் எல்லோரும் இவற்றை நன்கு அநுபவிக்கவும், இவற்றின் வளத்தைப் பற்றி நிர்ணயிக்கவும் சந்தர்ப்பம் வாய்க்கும். எந்த இடத் தில் அழகும் உண்மையும் தாண்டவமாடுகின்றனவோ அவ்விடத்தைக் கைகூப்பித் தொழவேண்டும்; அதுதான் கோயில்.

நம் தமிழிலே நல்ல கதைகள் வருவதற்கு மூல காரணம் மேனாட்டாரின் அருமையான கதைகளை வாசித்தது தான் என்று இலக்கிய உலகில் திரியும்போதெல்லாம் நாம் உணர்கிறோம்.

சிறு கதைக்கு உருக் கொடுத்தது, இலக்கணம் வகுத்தது முதலியன மேனாட்டார் செய்த வேலைகள். அவர்கள் வகுத்த இலக்கணத்திற்கிணங்க நம் நாட்டில் கதைகள் இல்லாமற் போகவில்லை. கலித்தொகை, புறநானூறு முதலிய சில நூல்களில் அநேக சந்தர்ப்பங்கள், நிகழ்ச்சிகள் சிறு கதைச் சுருதியில் செல்லுகின்றன. ஏசுநாதர் உபதேசக் கதைகள் போலவே உபநிஷத்துக்களில் காணப்படும் கதைகளை வாசிக்குந்தோறும் எத்தனை மொழிகடந்த பாவ கர்ப்பங்களாக அவைகள் இருக்கின்றன என்று நாம் ஆச்சரியத்தை அடைகின்றோம்.

ஆனால், பெரும்பாலும் கதைகள் பஞ்சதந்திரக் கதைகள் போலவே நீதிகளைக் கற்பிக்கக்கூடியவைகளாக இருக்கின்றன. கதைகளில் நீதிகள் வரக்கூடாது என்பதில்லை; ஆனால், வெறும் நீதிகளுக்காகவோ, வேறு குறிப்பிட்ட நோக்கங்களுக்காகவோ கதைகள் கட்டப்பட்டால் அவை இலக்கியக் கலையின் உயர்ந்த பீடத்திலிருந்து இறங்கிவிடுகின்றன. இக்கதைகளில் கலை வேறு நோக்கங்களுக்காகப் பயன்படுத்தப்பட்டிருக்கிறதாகவே கொள்ளப்படும். ஒரு சங்கீதம் போல, ஒரு நாட்டியம் போல, ஓர் ஓவியம் போலக் கதைகளையும் அநுபவிக்கவேண்டும் என்று மேனாட்டார் காண்பித்தனர். கதையின் மர்மங்களும், இலக்கணங்களும், இரகசியங்களும் தெரிந்தால்தான் அந்தத் துறையில் நாம் பயமின்றி இறங்கலாகும்.

சிறு கதையின் இலக்கணங்களை முற்றிலும் சொல்லப் புகுந்தால் அதுவே ஒரு பெரும் புஸ்தகமாக விரியும்.

இங்கு கதையின் ஜீவநாடியை மட்டும் தொட்டுக் காட்டி மேலே செல்வேன்.

சிறு கதை ஒரு குறுகிய நாவலில்லை. அநேக பாத்திரங்களையும் அநேக சம்பவங்களையும் சித்திரிக்கவேண்டியிருப்பதால் ஒரு நாவலுக்கு அகன்ற சித்திரக் கிழி வேண்டும். ஒரு நிகழ்ச்சிதான் சிறு கதைக்குள்ள வட்டம். அவ்வட்டத்திற்குள் எவ்வளவு அலங்காரம் செய்யலாமோ அவ்வளவு அலங்காரந்தான் செய்யலாம். ஒரு நாவலில் கூட்டலாம், கழிக்கலாம்; ஆனால் கதா பாவம் கெட்டுப் போகிறதில்லை. ஒரு சிறு கதையில் ஒரு பதத்தை எடுத்தாலும் கதை பழுதுபட்டுப் போய்விடும்.

நாடகத்தைப் போலவே சிறு கதையிலும் ஒவ்வொரு பதத்திற்கும் ஒரு பிரயோஜனம் இருக்கவேண்டும். வார்த்தைகளில் சிக்கனம் வேண்டும். வர்ணனைக்காகவே வர்ணனையும், ஹாஸ்யத்திற்காகவே ஹாஸ்யமும் சிறு கதையில் இடம்பெற முடியாது. ஹாஸ்யமான விஷயம் கதைப் போக்கின் ரஸத்தை அதிகப்படுத்துகிறதா என்று பார்க்க வேண்டும். இல்லாவிட்டால் அதை அடியோடு தள்ளிவிட வேண்டும். விகடத்திலேயே பயிற்சி செய்கிற உள்ளத்தை உடையவருக்கு அசந்தர்ப்பமான இடங்களில் ஹாஸ்யம் வெடித்துவிடும். வீணை போல் ரஸமாய் ஒலித்துக்கொண்டிருக்கிற கதைப்போக்கின் நடுவில் ஹாஸ்யப் பேச்சு வந்தால், தீஞ்சுவை அமிர்த தாரையைப் பருகி வெறிகொள்ளும் ரஸிகர் செவியில் கோரமான கொம்பு ஊதி முழக்குவது போல ஆகும்.

நம்முடைய நோக்கமென்ன, நாம் எந்தச் சுருதியிலே கதையின் மூர்ச்சனையைக் கூட்டியிருக்கிறோம் என்ற விஷயத்தைத் தீர்மானம் செய்துகொண்டு அதற்கு அனுகுணமான ஸ்வரங்களைத் தயாரிக்கவேண்டும். ஒரு ஸ்வரம் அதிகமாய்ப் போனால் வேறு ராகத்தின் இயல்பு வந்துவிடும். ஆரபி

தேவகாந்தாரத்தில் கரைந்துவிடுகிறது. மத்யமாவதி சுத்த சாவேரியாக மாறிவிடுகிறது. ராகத்தைப் போலவே சிறு கதை விஷயத்திலும் சர்வ ஜாக்கிரதையாகப் பழக வேண்டும். சிறு கதையில் ஒரு ரஸந்தான் நரம்பு போல ஊடுருவி ஓடவேண்டும். கதையைப் படித்து முடித்து விட்டால் ஒரு பாவந்தான் மனத்தில் நிற்கவேண்டும். கதை ஓர் ஒருமை எண்ணத்திலோ, நிகழ்ச்சியிலோ, நோக்கத்திலோ, அல்லது சூழ்நிலையிலோ * இருக்கவேண்டும். அநேக வருஷங்களை உள்ளடக்கி வைத்துக்கொள்ளலாம் ஒரு கதை. ஆனால் அநேக வருஷ சம்பவங்கள் ஒரு ரஸத்தையே தொட்டுக்கொண்டு போகவேண்டும். உதாரணமாக, மாபஸான் எழுதிய 'லா பரூரே' (Maupassant's 'La Parure') என்ற கதையை எடுத்துக்கொள்வோம். அது வெகுநாள் நீண்ட சோக நாடகத்தைச் சித்திரிக்கிற ஒரு கதை. ஆனால் அதனுடைய ஒருமை அணுவளவும் மாறவில்லை.

கதை முடிவில் எழும் நாதத்திற்குக் கதை முழுவதுமே எதிரொலி கொடுக்கவேண்டும். "எனக்கு விடுமுறை நாட்கள் வந்துவிட்டன" என்று டாக்டர் தாகூர் எழுதிய முடிவும், "எனக்கு வாய்விட்டு அழுவதற்குக் கூடவா இப் பரந்த உலகில் இடமில்லை?" என்று காதரின் மான்ஸ்பீல்டு கொடுத்த முடிவும் என் மனத்தில் மின்னிக்கொண்டேயிருக்கின்றன.

சிறு கதைக்கு விஷயங்கள் எவை? உலக நாடக மேடையில் நடக்கிற சம்பவங்கள் முழுவதுந்தான். ஒரு கைஜாடை, ஒரு கண் சிமிட்டல், ஒரு நடை வீச்சு, தியாகம், வீரம், காதல் — எல்லா அநுபவங்களும், எல்லா ரஸங்களுமே கதையின் எல்லைக்கு உட்பட்ட விஷயங்களாகும். சுருங்கச் சொல்லுமிடத்து அனந்தமான தந்திகள்

* சூழ்நிலை - சுற்றுச்சார்பு - Atmosphere.

அடங்கிய வாழ்க்கை வீணையில் ஒரு தந்தியைப் பேசவைப்பதுதான் சிறு கதை. என்ன, கதைக்கு லட்சணம் கூறப் புகுந்து கவிதையின் லட்சணமல்லவா கூறப்படுகிறது என்று சிலர் கருதலாம்.

ஆம், கதைக்கும் கவிதைக்கும் அதிக வித்தியாசமில்லை. சிறு கதைச் சைத்திரிகனைக் கொஞ்சம் ஊடுருவிப் பார்த்தால் அவன் ஒரு கவி என்பது புலனாகும். கவியுள்ளம் படைத்தவன்தான் சரியான கதை எழுத முடியும். அகத்துறைக்கான* ஒரு நிலையை (lyric) அடைந்துவிடுகிறது உண்மையான சிறு கதை. அகத்துறைப் பாவைப் போலவே சிறு கதையிலும், தெளிவாக, உணர்ச்சி பொங்க வருணிக்கப்படும் ஓர் அநுபவத்தை மாற்றக்கூடிய அல்லது குழப்பக் கூடிய வேறு எந்த அம்சமும் இருக்க இடமில்லை.

புகழ்பெற்ற பிரெஞ்சுக் கதாசிரியரான மாபஸானின் கதைகளைப்பற்றிக் கூறப்பட்டிருக்கும் ஒரு விஷயம் இங்கு கவனிக்கத் தக்கது: அகத்துறைக்கான வடிவை அடைய வேண்டுமென்று மாபஸான் கதைகளை எழுதவில்லை. கதைகளுக்கு வேண்டிய பாகங்களை வைத்துக்கொண்டு மற்றப் பாகங்களை நிர்த்தாட்சண்யமாக அவர் கழித்துவிட்டபடியால் அவர் கதைகள் அந்நிலையை அடைந்துவிட்டன. இவ்வாறு அடையாவிட்டால் உயர்ந்த லட்சியத்திலிருந்து கதைகள் இறங்கிவிட்டன என்றே சொல்லிவிடலாம்.

காதலும், கடிதமும், கண்ணீரும் சிதறிக் கிடக்கிற எத்தனையோ கதைகளை வாசித்துச் சலித்துப் போயிற்று என் உள்ளம். காதல் மனித வாழ்க்கையில் ஒரு மூலை, ஒரு கோணம். மூலை முழு வீடாகுமா? மேலும், தீண்டாமை, கதர், கோயில் திறப்பு, சமுதாய அக்கிரமங்கள், ஜாதிக் கட்டுப்பாடுகள், விதவையின் துயரம் இவைகளுக்

* அகத்துறை யென்பது காதலை மட்டும் குறிப்பதாக இங்கு கொள்ளப்படவில்லை. உள்ளத்தின் உணர்ச்சிகள் அனைத்தையும் அது தழுவும்.

குத்தான் கதைகள் எழுந்தனவா?—அல்லது கதைகளுக்காகத்தான் இவைகள் உண்டாயினவா?

சமூகக் கதைகளில் உருக்கமில்லாமல் போகவில்லை. நம் நாட்டு நிலைக்கு அவைகளும் வேண்டியவைதான். ஆனால் சமுதாயம் முன்னேற்ற மடைந்துவிட்டால், பிறகு அவைகள் ரஸமற்றுச் சப்பென்று போய்விடும். நிரந்தரமாக எக்காலத்திலும் நம் உள்ளத்தை அவைகள் தொட்டுக்கொண்டிருக்க முடியாது.

* * *

காதற் கதைகள், சீர்திருத்தக் கதைகள் இவற்றுக்கெல்லாமிடையே வேறொரு குரல் கேட்கிறது. அது என்ன என்று திரும்பிப் பார்த்தால் மேஜைமீது 'புதுமைப் பித்தன்' சிறுகதைப் புத்தகம் விரிந்து கிடக்கிறது. சிறு கதை மர்மங்களை நன்கறிந்துள்ள 'புதுமைப் பித்த'னின் கதைகளுக்கிடையே திரியும்பொழுது ஒரு கவி-யுலகிலே திரிகிற உணர்ச்சி எனக்கு வருகிறது. இவருடைய கதை ஒவ்வொன்றும் ஒரு தனி அநுபவ முத்திரை பெற்றிருக்கிறது. ஒவ்வொன்றிலும் உண்மையின் நாதம் தொனிக்கிறது. இவருடைய சில கதைகளை ரஸம் ததும்புகிற பாடல்கள் என்றே சொல்லிவிடலாம்.

ஜேம்ஸ் ஸடீபன்ஸ் (James Stephens) என்பவர் பாடியுள்ள ஒரு பாட்டை எடுத்துக்கொள்வோம். அதன் கருத்து வருமாறு:

குளிர்காலம்; வெட்டுகிற வாடை; இருள் சூழ்ந்த உலகம். ஒரு தனியிடத்தில் ஓர் ஏழைப் பெண். உடையோ அள்ளு கந்தல். குழந்தையை அன்புடன் அணைத்து முத்தமிட்டுப் பால் தருகிறாள். பனி, வாடை, இருள் என்ற சூழ்நிலையின் மத்தியில் அக்காட்சியைக் கண்ட கவியின் மனத்திலே பாய்கின்றது ஓர் உணர்ச்சி. உலக இருளையும் குளிரையும் நீக்கும் அன்பொளியல்லவோ அவளிடத்தில்

இருக்கிறது என்று தன் உள்ளத்தைக் கொட்டிவிடுகிறான் கவி.

இந்த அளவுகூடப் போதும் ஒரு சிறு கதைக்கு. இப் பாட்டையே சிறு கதையாக அமைத்துவிடலாம்.

'புதுமைப் பித்தன்' வேறொரு சுருதியில் ஒரு கதையைப் பாடுகிறார். வேகம் ஒன்றுதான்; ஆனால் உணர்ச்சி வேறு.........ஒரு தெரு விளக்கு. அதன் ஒரு பக்கத்துக் கண்ணாடி உடைந்துவிடுகிறது. விளக்கை எடுத்துவிடுகிறார்கள் அதிகாரிகள். பிச்சையெடுக்கப் போயிருந்த ஒரு கிழவன் அங்கு வருகிறான். விளக்குக்குக் கிழவன், கிழவனுக்கு விளக்கு என்று முன்னிருந்த நிலை போய்விடுகிறது. கிழவனுடைய உள்ளம் அஸ்தமனத்தை அடைந்துவிடுகிறது. மறுநாட் காலையில் ஒரு கிழவனின் சவம் அங்கு கிடக்கிறது. இந்தக் கதையில் நான் கிழவனுடைய மரணத்தைப் பார்க்கவில்லை: ஆதாரமற்று இருளில் திரிந்து மடியும் அநாதைகளின் சோக நாடகத்தைத்தான் பார்க்கிறேன்.

"பற்றுக்கோலை யாரோ தட்டிப் பிடுங்கிக்கொண்ட குருடனின் நிலை.

"அன்று அவனுக்கு உலகம் சூனியமாய், பாழ்வெளியாய், அர்த்தமற்றதாய் இருந்தது."

மனிதன் நவீன நாகரிகத்தில் யந்திரமாகிவிடுகிறான் என்பதை விஷயமாக்கி இரண்டு கதைகளை ஆசிரியர் தந்திருக்கிறார்:

ஒருவர் ஹோட்டலுக்குள் போகிறார். அங்கே ஒருவன் பம்பரம் போல ஆடுகிறதைக் காண்கிறார். ஜனங்கள் அலைகள் போல வருவதும் போவதுமாக இருக்கிறார்கள். அவ்வளவு ஜன அலைகளுக்கும் அவன் ஈடு கொடுக்கிறான். நவநாகரிகம் அவனை ஒரு யந்திரமாக்கி வைத்திருக்கிறது. ஆனால், அவனுடைய மனித உணர்ச்சி முற்றிலும் போய்விடவில்லை என்பதற்கு ஓர் அறிகுறி தெரிகிறது. நாற்காலியி

விருந்து எழுந்திருந்தவரின் கைக்குட்டை கீழே விழுந்து விட்டது.

"ஸார், உங்கள் கைக்குட்டை கீழே விழுந்துவிட்டது!"

இவ்வாறு கூறி அவன் குனிந்து கைக்குட்டையை எடுத்துக் கொடுக்கிறான். அமைதியான நீர் நிலையில் தொப் பென்று ஒரு கல் விழுந்து தரங்கங்களை எழுப்புவதுபோல அவன் மனத்தில் கைக்குட்டை தொனி அலைகளைக் கிளப்பு கிறது. இச்சித்திரம் வளமுள்ள கற்பனையின் தொழிலைத் தவிர வேறு எதா யிருக்கமுடியும்?

நல்லதாயிருந்தாலும் சரி, கெட்டதாயிருந்தாலும் சரி, பழக்கம் ஒரு விலங்குதான். மலைக் காற்றைப் போலத் திரிய வேண்டுமென்கிற இச்சையை அது தடை செய்துவிடுகிறது. நெடுநாளாகக் கேடு செய்வதே தொழிலாகவுடைய ஒருவன் மனம் திருந்தி மேலேறவேண்டுமென்று கருதினாலும், நெடுங் காலமாக நல்ல வழியிலேயே சென்றுகொண்டிருக்கும் வேறொருவன் இழிதொழிலில் இறங்கவேண்டு மென்று கரு தினாலும், இருவருக்கும் முடியாமல் போகிறது. இருவரும் இரு பழக்கத் தளைகளைத் தாண்ட முடியாமல் நின்றவிடத் திலேயே நிற்கிறார்கள். இவ்விரு தளைகளில் ஒன்று இரும் புத் தளை, மற்றது பொன் தளை. ஆயினும் இரண்டும் தளை கள் என்பதில் சந்தேகமில்லை. உலகத்தில் ஒரு பாகம் மேலே மிகப் பகட்டாய் டால் வீசுகிறது. அடியிலே இருள் சூழ்ந்த பயங்கரமான பாதாளம். இந்தக் கருத் துக்களை வைத்து 'மனித யந்திரம்' என்று ஒரு கதை அமைக்கப்பட்டிருக்கிறது. இக்கதையில் விளங்கும் மீனாட்சி சுந்தரம் பிள்ளை மறக்க முடியாத பாத்திரமாகக் காட்சி யளிக்கிறார்.

ஆபீஸ் கிளார்க் ஒருவன் சோர்ந்து வீடு திரும்புகிறான். ஓர் இருண்ட சந்து வழியாக அவன் போக நேர்கிறது. அங்கே "அலங்கோலமான ஸ்திதியில் ஒரு பெண். பதி

றுறு பதினேழு வயதிருக்கும். காலணு அகலம் குங்குமப் பொட்டு, மல்லிகைப்பூ, இன்னும் விளம்பரத்திற்குரிய சரக்குகள்.

" 'என்னப்பா சும்மா போறே? வாரியா?' "

வாலிபன் திடுக்கிட்டு மடியிலிருந்த சில்லறைகளை யெல்லாம் இறைத்துவிட்டு ஓடுகிறான். இது வெறும் புனை கதையா? நமது நகரங்களில் போகக்கூடாத சந்துகளில் தட்டுத் தடுமாறிப் போய்விட்டால் இதே கோரமான காட்சி தான். நல்லோர் நெஞ்சு படபடக்கும்படியான சம்பவங்கள். இத்தகைய பரிதாபகரமான காட்சிகளை நினைக்கும்போ தெல்லாம் சமூகத்தின் நெஞ்சு துடிக்கவேண்டும். நம் படபடப்பு கதையில் காணும் வாலிபனுடைய படபடப்போடு ஒன்றாய்க் கலக்கும். உலகத்தின் வறுமையையும் கசப்பை யும் காட்ட இந்த ஒரு காட்சி போதும். உலகத்தை வாட்டு கிற வறுமைத் தீ ஆத்ம குணங்களையெல்லாம் எரித்து மனிதன் உள்ளத்தைச் சுடுகாடாக்கிவிடுகிறது. பொன்னகரத்திலும் இதே செய்தி. வறுமையிலே தன்னுடைய கற்பை விற்றுப் புருஷனுக்குக் கஞ்சி வார்க்கிறாள் ஓர் ஏழை ஸ்திரீ. கதையின் முடிவு இதுதான்:

"இருவரும் இருளில் மறைகிறார்கள். அம்மாளு முக்கால் ரூபாய் சம்பாதித்துவிட்டாள். ஆம், புருஷனுக்குப் பால் கஞ்சி வார்க்கத்தான். என்னமோ கற்பு, கற்பு என்று கதைக்கிறீர்களே, இதுதானய்யா பொன்னகரம்!"

இந்தக் கதையில் வருகிற அம்மாளுவை நினைக்கிற பொழுது விக்டர் ஹியூகோ * சிருஷ்டித்த பாண்டைன் (Fantine) என்ற பெண்ணின் ஞாபகம் வருகிறது.

'காலனும் கிழவியும்' என்ற கதை பயங்கரமான ஒரு ஹாஸ்ய ரஸம் தோய்ந்தது. கிழவிக்குத்தான் வெற்றி. அவள் வெற்றிச் சிரிப்பு நம் செவியில்கூட விழுகிறது. யமனிடம் கிழவி கர்ச்சிக்கிறாள்:

---

* Victor Hugo.

"உன்னாலே என் உசிரெத்தானே எடுத்துக்கிட்டுப் போக முடியும்? இந்த உடலைக்கூடத் தூக்கிட்டுப் போவ உனக்குத் தெறமை யிருக்கா? யோசிச்சுப் பாரு. ஒண்ணெ வேறெயா மாத்த முடியும். உன்னாலே அழிக்க முடியுமா?"

'ஞானக் குகை' என்ற கதையில் ஓர் ஊமைக்கு ஞானம் வந்த வரலாறு கூறப்படுகிறது. திடீரென ஆயிரம் தீ நாக்குகளாக எழுந்த அகண்ட ஞானத் தீச்சுடரைப் பையன் தேகம் தாங்கவில்லை. கருகிச் சாம்பலாகிவிடுகிறான் என்று நாம் ஊகிக்கிறோம். ஆனால் அப்பையனுடைய ஊரார்களுக்கு இச்செய்தி ஓர் ஆச்சரியம், ஒரு புதிர். ஞானம் உதயமாகும் ஸ்தலம் ஒரு மலையென்று சிருஷ்டித்தது மிகவும் பொருத்தமே. எங்கே அமைதியும் அன்பும் கொஞ்சுகின்றனவோ அங்கேதான் ஞானமுண்டாகிறது மனிதனுக்கு.

'சிற்பியின் நரக'த்தில் கலையின் தத்துவம் விளங்குகிறது. இலக்கியமும் சிற்பமும் இரு வேறு கலைகளாயினும் இலக்கிய ஆசிரியரும் சிற்பியும் ஒன்று போலவே விளங்குகிறார்கள். இருவரும் தத்தம் அநுபவத்தை வெளியிடுகிறார்கள். இலக்கிய ஆசிரியர் கவிதை, கதை முதலியவற்றின் மூலமாயும், சிற்பி சித்திரம் அல்லது சிலை மூலமாயும் தாம் பெற்ற அநுபவத்தை உலகிற்கு வழங்குகிறார்கள். ஆசிரியர் பாஷையைக் கருவியாகவும், சிற்பி துணி, கல் அல்லது உலோகத்தைக் கருவியாகவும் உபயோகப்படுத்தினாலும் அவர்களுக்குள் ஒருமைப்பாடு இருக்கிறது. இக்காரணத்தாலேயே கவிதை 'பேசுஞ் சிலை' என்றும், சிலை 'மோனக் கவிதை' என்றும் சொல்லப்படுகின்றன. ஆசிரியர், சிற்பி இருவருடைய படைப்புக்களும் அவர்கள் பெற்ற அநுபவங்களை நமக்கு அப்படியே கொடுக்கின்றன. நாமும் அதே அநுபவங்களை அவர்களுடைய உணர்ச்சியிலேயே தோய்ந்து அநுபவிக்கவேண்டும் என்பதுதானே அந்தச்

சிருஷ்டியின் ரகசியம். இதை விட்டு, ஓர் உயிர்ச் சித்திரக் கதையையோ அல்லது அற்புதச் சிற்பத்தையோ சைத்திரிகனின் மனத்திற்கு வேறுபட ஜனங்கள் பிரயோகித்தால் அதைவிட அவனுக்கு வேறு நரகம் வேண்டாம். கலையைப் படைத்தவனின் நோக்கத்திலிருந்து மாறுபட்டு அதை இழிவான நிலையில் உபயோகித்தாலும், மேல் நிலையில் உபயோகித்தாலும் அவனுக்கு ஒன்றுதான். கலையின் லட்சியம் மோட்சங்கூட இல்லை.

சிற்பியின் கனவில் தோன்றும் சாயைகள் இங்கு நோக்கத்தக்கன:

"அந்தகார வாசலில் சாயைகள்போல் உருவங்கள் குனிந்தபடி வருகின்றன; குனிந்தபடி வணங்குகின்றன.

" 'எனக்கு மோட்சம்!' 'எனக்கு மோட்சம்!' என்ற எதிரொலிப்பு. அந்தக் கோடிக்கணக்கான சாயைகளின் கூட்டத்தில் ஒருவராவது சிலையை ஏறிட்டுப் பார்க்கவில்லை.

"இப்படியே தினமும்..............................."

இந்தக் கதையில் காவிரிப்பூம்பட்டினத் துறைமுகத்துச் சூழ்நிலையை நாம் நன்குணர்கிறோம். துறைமுகத்தில் கடலொலியைப் பரிகசிக்கிற பல தேசத்து வியாபாரிகளின் ஆரவாரம் இன்னும் நம் செவியில் ஒலிக்கிறது.

சூழ்நிலையைச் சரிவரக் கதைகளில் கொண்டுவருகிற ஆற்றல் ஆசிரியருக்கு இருக்கிறது. பல இடங்களில் திருநெல்வேலி வேளாளர் வாழ்க்கைச் சித்திரம் அவர்களுடைய நடையுடை பாவனைகளோடு அப்படியே பிரத்தியட்சமாகிறது. சிறுகதை உலகத்தில் இவர் தகுதியான ஓர் இடம் பெறுவதற்கு 'நினைவுப் பாதை' ஒன்று போதும். வைரவன் பிள்ளை மனைவி வள்ளியம்மை ஆச்சி இறந்துவிடுகிறாள். இரண்டாம் நாள் கிரியை. இன்னும் விடியவில்லை. காலப் பனி மூட்டத்தைத் தாண்டி வைரவன் பிள்ளை மனம் ஒரு கனவு உலகத்தில் திரிகிறது. மணக்கோல வள்ளியம்மை

அவர்முன் நிற்கிறாள். கிரியைச் சங்கு ஊதப்படுகிறது. கனவு கலைகிறது. முன்போலப் பாழ் உலகந்தான்...கதையில் சங்கைக் கொண்டுவருவது ஆசிரியருடைய சாமர்த்தியத்தைக் காட்டுகிறது. வெறும் சங்கின் முழக்கமென்று நீங்கள் இதைக் கருதவேண்டாம். இன்பக் கனவு உலகத்தில் திரியும் மாந்தர்களைப் பயங்கரமான பிரத்தியட்சத்திற்குத் திருப்புகிற உலகத்தின் இரக்கமற்ற ஒலிதான் அது.

'துன்பக் கேணி' ஒரு குறுநாவல் திட்டத்திற்கு வளர்ந்து போனாலும் அதில் ஒருமை நிற்கிறது. எல்லா நிகழ்ச்சிகளும் சோகப் பூச்சைப் பூசிக்கொண்டு தோன்றுகின்றன.

இக்கதையைப் படிக்கும்பொழுது லவலின் போவிஸ் (Llewelyn Powys) எழுதிய கருங்காலியும் தந்தமும் (Ebony and Ivory) என்ற புத்தகத்திலுள்ள ஒரு நிகழ்ச்சி என் ஞாபகத்திற்கு வருகிறது. கறுப்புக்கு வெள்ளை தந்தது பரங்கிப் புண்தான். அவன் தந்தான் அவன் வாங்கிக்கொண்டான் என்று போவிஸ் கதையை முடிக்கிறார். இந்த முறையில்தான் 'துன்பக் கேணி'யும் செல்லுகிறது.

'மனக் குகை ஓவியங்க'ளில் காணப்படுகிற சித்திரங்கள் ஆசிரியரின் மனக்குகைச் சுவர்களில் வரையப்பட்ட சித்திரங்க ளென்றே நான் சொல்லுவேன். மனத் தடுமாற்றம், சர்ச்சைகள், பாரமார்த்திக விஷயத்தில் சூனியம், வாழ்வில் நம்பிக்கை-வரட்சி இவைகளைத்தான் சித்திரங்கள் காண்பிக்கின்றன.

"சிற்றம்பலமான அவனது உள்ளத்திலே தேவரீர் கழலொலி என்ன நாதத்தை எழுப்புகிறது தெரியுமா?......துன்பம் நம்பிக்கை-வரட்சி, முடிவற்ற சோகம்......"

'புதுமைப் பித்தன்' நடையிலே ஆங்கில இலக்கியத்தில் காணப்படும் சொல்லடுக்குகள், உருவகங்கள், வாக்கிய ரசனை தென்பட்டாலும் அந்த இழைகள் இவர் காவியப் பட்டிலே நன்றாய் அழகுபெற நெய்யப்பட்டிருக்கின்றன.

'புதுமைப் பித்தன்' முகம் எனக்குத் தெரியாது. ஆனால் அவர் அகத்தை நான் அறிகிறேன். அவருடைய கதைகள் அவர் உள்ளத்து ரகசியங்களை எனக்குப் பறையடிக்கின்றன.

ஒரு கவியுள்ளம் - சோகத்தினால் சாம்பிய கவியுள்ளம் - வாழ்க்கை முட்களில் விழுந்து இரத்தம் கக்குகிற உள்ளம் - கதைகள் மூலம் பேசுகிறது. இதுதான் நான் கண்டது இந்தக் கதைக் கொத்திலே.

திருவல்லிக்கேணி,
2—2—1940.

ரா. ஸ்ரீ. தேசிகன், எம். ஏ.

கதை 1

## ஒரு நாள் கழிந்தது




" சாமி! போன மாசத்திலே தீர்க்கலியே.........
பாக்கியை முடிச்சு கணக்கைத் தீர்த்திடுங்க......"

" உங்களிடம் ஏதாவது சேஞ்ஜ் இருக்கிறதா ?.........
திங்கட்கிழமை கொடுத்துவிடுகிறேன்!"

---

" கமலம்! அந்தக் கூஜாவிலே தண்ணீர் எடுத்தா! வெற்றிலைச் செல்லம் எங்கே? வச்சது வச்ச இடத்தில் இருந்தால்தானே?"—என்று முணமுணத்தார் முருக தாசர்.

கையில் இருக்கும் கோரைப் பாயை விரிப்பதே ஒரு ஜால வித்தை. நெடுநாள் உண்மையாக உழைத்தும் பென்ஷன் கொடுக்கப்படாததால், அது நடு மத்தியில் இரண்டாகக் கிழிந்து, ஒரு கோடியில் மட்டிலும் ஒட்டிக்கொண்டிருந்தது. அதை விரிப்பது என்றால், முதலில் உதறித் தரையில் போட்டுவிட்டு, கிழிந்து கிடக்கும் இரண்டு துண்டுகளையும் சேர்த்துப் பொருந்த வைக்கவேண்டும். அதுதான் பூர்வாங்க வேலை. பின்பு, விடுதலை பெற முயற்சிக்கும் அதன் கோரைக் கீற்றுகள் முதுகில் குத்தாமல் இருக்க, ஒரு துண்டையோ, அல்லது மனைவியின் புடவையையோ, அல்லது குழந்தையின் பாவாடையையோ, எதையாவது எடுத்து மேலே விரிக்கவேண்டும்.

முருகதாசரைப் பொறுத்தவரை—அது அவரது புனைபெயர்—அது இரண்டு பேர் செய்யவேண்டிய காரியம்.

மறுபடியும், "கமலா!" என்று கூப்பிட்டார்.

சமையல்+உக்ராண+ஸ்நான அறை, மூன்று நான்கு கட்டுகள் தாண்டி, துண்டாக, அலாதியாக இருப்பதால், இவருடைய பாய் விரிப்புக் கஷ்டங்கள் அந்த அம்மையாருக்கு எட்டவில்லை.

சென்னையில் 'ஒட்டுக் குடித்தனம்' என்பது ஒரு ரசமான விஷயம். வீட்டுச் சொந்தக்காரன், குடியிருக்க வருகிறவர்கள் எல்லாரும் 'திருக்கழுக்குன்றத்துக் கழுகு' என்று நினைத்துக்கொள்ளுவாரோ என்னமோ!

'குடித்தனக்காரர் குடியிருக்க இரண்டு ரூம் காலி' என்று வெளியில் போட்டிருந்த போர்டை நம்பித்தான் முருகதாசர் வீடு - வேட்டையின் போது அங்கே நுழைந்தார்.

உள்ளே வீட்டின் பாக வசதிதான் விசித்திரமாக இருந்தது. முன் பக்கம், ஒற்றைச் சன்னல் படைத்த ஒரு சிற்றறை. அதற்கப்புறம், எங்கோ பல, கட்டுகள் தாண்டி, மற்றொரு அறை. அதுதான் சமையல் வகையராவுக்கு. முதல் அறை படிக்க, படுக்க, நாலு பேர் வந்தால் பேச—இவை எல்லாவற்றிற்கும் பொது இடம். முதலில், முருகதாசர் பொருளாதாரச் சலுகையை உத்தேசித்தே, அதில் குடியிருக்கலாம் என்று துணிந்தார். அதனால், தமக்கும் தம் சகதர்மிணிக்கும் இப்படி நிரந்தரமான 'பிளவு' இருக்கும் என்று சிறிதும் எட்டி யோசிக்கவில்லை; மேலும் அவர், யோசிக்கக்கூடியவரும் அல்லர்.

பக்கத்தில் இருந்த அரிக்கன் விளக்கை எடுத்துக்கொண்டு, அவர் சமையல் பகுதியை நோக்கிப் பிரயாணமானார்.

இடைவழியில், குழாயடியில் உள்ள வழுக்குப் பிரதேசம், அடுத்த பகுதிக்காரர் விறகுக் கொட்டில் முதலிய விபத்துக்கள் உள்ள 'பிராட்வேயை' எல்லாம் பொருட்படுத்தாது, ஒருவாறு வந்து சேர்ந்தார். சமையல் அறை வாசலில் ஒரே புகை மயம். "கமலம்!" என்று கம்மிய குரலில் கூப்பிட்டுக்கொண்டு, உள்ளே நுழைந்தார்.

உள்ளே புகைத் திரைக்கு அப்பாலிருந்து, "வீடோ லட்சணமோ! விறகைத்தான் பாத்துப் பாத்து வாங்கிக் கொண்டு வந்தியளே! ஒங்களுக்கின்னு தண்ணீலே முக்கிக் குடுத்தாளு? எரியவே மாட்டுதில்லே! இங்கே என்ன இப்பொ? விறகு வாங்கின சீரைப் பாத்து மகிழ வந்திட்டியளாக்கும்!" என்று வரவேற்புப் பத்திரம் வாசிக்கப் பட்டது.

"தீப்பெட்டியை இப்படி எடு! அதுக்காகத்தான் வந்தேன்!" என்று நடைப் பக்கமாகப் பின் நோக்கி நடந்தார்.

"இங்கே குச்சியுமில்லே, கிச்சியுமில்லே! அலமுவெ தீப்பெட்டி வாங்க அனுப்பிச்சேன். மண்ணெண்ணெய் விளக்கெ நீங்கதான் துடைச்சுக்கொள்ளணும்!" என்றாள் கமலம்.

"குழந்தையை அந்தியிலே வெளியிலே அனுப்பிச்சையே, நான் வந்த பிறகு வாங்கிக்கொள்ளப் படாதா?" என்று அதட்டினார் முருகதாசர்.

"ஆமாம், சொல்ல மறந்தே போயிட்டுதே......செட்டியார் வந்துவிட்டுப் போனார்; நாளை * விடியன்னே வருவாராம்!" என்றாள் கமலா.

முருகதாசர் இந்தப் பாசுபதாஸ்திரத்தை எதிர்பார்க்கவில்லை.

---

* விடியுமுன் என்பதன் மரூஉ.

"வந்தா, வெறுங் கையை வீசிக்கிட்டுப் போகவேண்டியதுதான்! வர்ரதுக்கு நேரம் காலம் இல்லெ?" என்று முணுமுணுத்துக்கொண்டே வெளியேற முயற்சித்தார்.

"அங்கே, எங்கே போயிட்டிஹ, ஒங்களைத்தானே! கொஞ்சம் நல்லெண்ணெ வாங்கிகிட்டு வாருங்களேன்!"

"எங்கிட்ட இப்பொ துட்டுமில்லெ, காசுமில்லெ!" என்று திரும்பி நின்று பதிலளித்தார் முருகதாசர்.

"அதுவும் அப்படியா! இன்னு இந்த * மிளவொட்டியிலே† மூணு துட்டு இருக்கு; அதெ எடுத்துகிட்டுப் போங்க!"

"வந்தத்துக்கு ஒரு வேலையா? அங்கே ஒரு பாடு எழுதித் தொலெக்கணும்; இங்கே உனக்கு இப்பத்தான் எண்ணெ புண்ணுக்கு - பகலெல்லாம் என்ன செய்துகிட்டு இருந்தே? இருட்னம் பொறவா எண்ணெ வாங்றது! எல்லாம் நாளைக்குப் பாத்துக்கலாம்!"

"சோம்பல் வந்தா சாத்திரமும் வரும், எல்லாம் வரும். ஏன் அண்ணைக்குப் போய் வாங்கிட்டு வரலியா—எல்லாம் ஒங்களுக்குத்தான். இப்பத்தான் அப்பளக்காரன் வந்து கொடுத்துட்டுப் போனான்; பிரியமா சாப்பிடுவே ளென்று சொன்னேன். பின்னெ அந்தச் சின்னக் கொரங்கே என்ன இன்னும் காணலெ! போனாப் போனதுதான்; நீங்கதான் சித்த பாருங்களேன்!"

இவ்வளவிற்கும் அவர் இருந்தால்தானே! விறகுப் பிரதேசத்தைத் தாண்டி வழுக்குப் பிரதேசத்தை எட்டிவிட்டார். புகையையும் பேச்சையும் தப்பி வந்தால் போதும் என்றாகிவிட்டது. முருகதாசரின் ஆஸ்தான அறையின்

---

* மிளவொட்டி (மிளகுப் பெட்டி) ஐந்தறைப் பெட்டி என்பது சகஜமான பெயர்.

† மூணு துட்டு - ஓர் அணு; ஒரு துட்டு என்பது பாண்டி நாட்டில் நான்கு தம்பிடி.

ஒரு விசித்திரம் என்ன வென்றால், சென்னையில் 'லைட்டிங் டைம்' அட்டவணையைக்கூட மதிக்காமல், அது இருண்டு விடும்.

இம்மாதிரி மண்ணெண்ணெய் நெருக்கடி ஏற்படாத காலங்களில், அந்த அறைக்குத்தான் முதலில் இராத்திரி. ஆனால், எண்ணெய் நெருக்கடிக் காலங்களில், சிவபிரானின் ஒற்றைக் கண் போன்ற அந்த அறையின் சன்னல், எதிர்ப் பக்கம் நிற்கும் மின்சார விளக்குக் கம்பத்திலிருந்து கொஞ்சம் வெளிச்சத்தைப் பிச்சை வாங்கும். கார்ப்பொரேஷன் தயவு வரும்வரை, ஸ்ரீ முருகதாசர், வேறு வழியில்லாமல், தெரு நடையில் நின்று அலமுவின் வருகையை எதிர்நோக்கியிருக்கவேண்டியதாயிற்று.

முருகதாசர் வானத்தை அளக்கும் கதைகளைக் கட்டுவதில் மிகவும் சமர்த்தர்; 'சாகா வரம் பெற்ற' கதைகளும் எழுதுவார். அந்தத் திறமையை உத்தேசித்து, ஒரு விளம்பரக் கம்பெனி மாதம் முப்பது ரூபாய்க்கு வானத்தையளக்கும் அவரது கற்பனைத் திறமையைக் குத்தகை எடுத்துக்கொண்டது. அதனால் அவர், வீர புருஷர்களையும், அழியாத சித்திரங்களையும் எழுத்தோவியமாகத் தீட்டுவதை விட்டு விட்டு, சோயாபீன் முதல், மெழுகுவர்த்தி வரையிலும், வெளிநாடுகளிலிருந்து வந்து குவியும் பண்டங்களின் காவியங்களை இயற்றிக்கொண்டிருக்கிறார். 'டபாஸா' வீரிய மாத்திரையின்மீது பாடிய பரணியும், தேயிலைப் பானத்தின் சுய சரிதையும், அந்தத் தமிழ் தெரியாத வெள்ளைக்காரனையும் இவர்மீது அனுதாபம் காட்டும்படி செய்துவிட்டன. அதற்காகத்தான் அந்த முப்பது ரூபாய்!

வீட்டு எதிரில் நிற்கும் மின்சார விளக்கின் உதவியைக் கொண்டும் பிள்ளையவர்களால் அலமுவைக் கண்டுபிடிக்க இயலவில்லை. வெற்றிலை, வேலை, குழந்தை வாராத காரணம்—

எல்லாம் அவரது மனத்தில் கவலையைக் கொண்டு கொட்டின. நடையிலிருந்து கீழே இறங்கிச் சந்தின் மூலை வரை சென்று பார்த்து வரலாமா என்று புறப்பட்டார்.

பக்தி மார்க்கத்தில் ஏகாக்கிரக சிந்தையைப் பற்றிப் பிரமாதமாக வர்ணிக்கிறார்கள். மனம் ஒரே விஷயத்தில் லயித்துவிட்டால் போதுமாம். பிள்ளையவர்களைப் பொறுத்த வரை, அவர் இந்தப் 'பணம்' என்ற மூன்றெழுத்து மந்திரத்தில் தீவிர சிந்தை செலுத்துபவர். பணத்தை வாரிச் சேர்த்துக் குபேரனாகிவிடவேண்டும் என்ற எண்ணம் ஒன்றுமில்லை. கவலையில்லாமல் ஏதோ சாப்பிட்டோம், வேலை பார்த்தோம், வந்தோம் என்று இருக்கவேண்டும் என்பதற்காக, எத்தனையோ வித்தைகளையெல்லாம் செய்துவிட்டார். அவருடைய குடும்பத்தின் வரவு செலவு திட்டத்தை மட்டிலும், அவரால் எப்பொழுதும் சமன் செய்ய முடியவில்லை. நிதி மந்திரியாக இருந்தால், பட்ஜட்டில் துண்டுவிழுவதற்குப் பொருளாதாரக் காரணங்கள் காட்டிவிட்டு, உபமான்யங்களைத் தைரியமாகக் கேட்கலாம். கவலையில்லாமல், கொஞ்சமும் உடம்பில் பிடிக்காமல், கடன் கேட்டுப் புறப்படுவதற்கு முடியுமா? குடும்பச் செலவு என்றால், சர்க்கார் செலவாகுமா?

கவலை இருக்கப்படாது என்ற உறுதியின் பேரில்தான் நம்பிக்கை என்ற இலட்சியத்தை மட்டும் திருப்தி செய்விக்க, 'சாகா வரம் பெற்ற' கதைகளை எழுதுவதைக் கொஞ்சம் கட்டிவைத்துவிட்டு, இந்த 'லிப்டன் தேயிலை', காப்பி, கொக்கோ, ஆகியவற்றின் மான்மியங்களை அவர் எழுத ஆரம்பித்தார். ஒரு பெரிய நாவல் மட்டிலும் எழுதிவிட்டால், அது ஒரு பொன் காய்க்கும் மரமாகிவிடும் என்று அவர் நெஞ்சழுத்தத்துடன் நினைத்த காலங்களும் உண்டு. இப்பொழுது அது ஒரு நெடுந்தூர இலட்சியமாகவே மாறிவிட்டது.

# ஒரு நாள் கழிந்தது

முன்பாவது, அதாவது நம்பிக்கைக் காலத்தில், ஏதோ நினைத்ததைக் கிறுக்கிவைக்கக் காகிதப் பஞ்சமாவது இல்லாமல் இருந்தது. அப்பொழுது ஒரு பத்திரிகை ஆபீஸில் வேலே. ஆனல், இப்பொழுது காசு கொடுத்து வாங்கா விட்டால் முதுகில்தான் எழுதிக்கொள்ளவேண்டும். முருகதாசர் நல்ல புத்திசாலி; அதனல்தான் முதுகில் எழுதிக்கொள்ளவில்லை. யாராவது ஒரு நண்பரைக் கண்டு விட்டால் போதும்; தமது தூர இலட்சியத்தைப்பற்றி அவரிடம் ஐந்து நிமிஷமாவது பேசாமல் அவரை விடமாட்டார். நண்பர்கள் எஸ். பி. ஸி. ஏ. (ஜீவஹிம்சை நிவாரணச் சங்கம்) யின் அங்கத்தினர்களோ என்னவோ, அத்தனையையும் சகித்துக்கொண்டிருப்பார்கள்......

சந்தில் திரும்பிப் பார்த்தால் அலமுவின் ராஜ்யம் நடந்துகொண்டிருந்தது.

"ஏட்டி, என்ன ! நீயோ, உன் லட்சணமோ ?" என்று ஆரம்பித்தார் முருகதாசர்.

ஒரு ரிக்ஷா வண்டி. ஏர்க்கால் பக்கத்தில் வண்டிக்காரன் உட்கார்ந்துகொண்டிருக்கிறன். அலமு, ஒரு சண்டெலி மாதிரி, ஜம்மென்று மெத்தையில் உட்கார்ந்திருக்கிறள். ரிக்ஷாக்காரனுடன் ஏதோ நீண்ட சம்பாஷணை நடந்துகொண்டிருந்தது போலும் !

"ஏட்டி !" என்றர் முருகதாசர் மறுபடியும்.

" இல்லே யப்பா ? நீ இனிமே என்னே அலமுன்னு கூப்'டுவேன்னியே!" என்று சொல்லிக்கொண்டே, வண்டியிலிருந்து இறங்கப் பிரம்மப் பிரயத்தனம் செய்துகொண்டிருந்தாள்.

"தீப்பெட்டி எங்கடீ?" என்றர் முருகதாசர்.

"கடைக்காரன் குடுக்கமாட்டேங்கறன், அப்பா!"

"குடுக்காதெ போனு நேரே வீட்டுக்கு வாரது! இங்கெ என்ன இருப்பு ?"

"அப்படிக் கேளுங்க சாமி! நம்ம கொளந்தென்னு மெரட்டாமே சொல்லிப் பாத்தேனுங்க. வீட்டுக்கு வண்டியிலே கொண்டாந்துவுடணுமுண்ணு மொண்டி பண்ணுதுங்க. எனக்கு காலுலே சுளுக்கு. அந்தச் சின்னும்பயலே காணும்..." என்று நீட்டிக்கொண்டே போனான் ரிக்ஷாக்காரன்.

"அப்பா, அவன் பங்கஜத்தெ மாத்ரம் கூட்டிக்கிட்டே போரானே!" என்றாள் அலமு. பங்கஜம் எதிர் வீட்டு சப் ரிஜிஸ்திரார் குழந்தை. அது ரிக்ஷாவிலும் போகும், மோட்டாரிலும் போகும்! அந்த விஷயம் ரிக்ஷாவுக்குத்தான் புரியுமா, குழந்தைக்குத்தான் புரியுமா?

"அலமு! ராத்திரிலே கொழந்தைகள் ரிக்ஷாவிலே போகப்படாதுடீ! எறங்கி வா!" என்று குழந்தையைத் தூக்கிக்கொண்டு, வாடிக்கைக் கடைக்காரனிடம் சென்றார் முருகதாசர்.

பிள்ளையவர்கள் கடையை எட்டு முன்பே, கடைக்காரன், "சாமி! இந்த மாதிரி யிருந்தா கட்டுமா? போன மாசத்திலே தீர்க்கலியே! நானும் சொல்லிச் சொல்லிப் பார்த்தாச்சு. பாக்கியை முடிச்சு, கணக்கெத் தீர்த்துடுங்க! எனக்குக் குடுத்துக் கட்டாது. நான் பொளைக்க வந்தவன்!" என்றான்.

"நானும் பிழைக்க வந்தவன்தான். எல்லாரும் சாகவா வருகிறார்கள்! பின்னெ பின்னெதான் இருக்கும். நான் என்ன கொடுக்க மாட்டேன் என்று சொல்லுகிறேனா?"

"போங்க சாமி! அது ஒண்ணுதான் பாக்கி! ரூ. 2-5-4 ஆச்சு: எப்ப வரும்?"

"தீப்பெட்டியெக் குடு, சொல்றேன்!"

"பெட்டிக் கென்ன பிரமாதம்! இந்தாருங்க, எப்ப வரும்?"

"எப்பவா? சம்பளம் நாளைக்குப் போட்டுருவாங்கன்னு நினைக்கிறேன்; நாளை இல்லாவிட்டால் திங்கள்கிழமை."

"திங்கக்கிழமெ நிச்சயந்தானே? நான் சீட்டுக் கட்டணும்!" என்றான்.

"சரி, பார்க்கிறேன்!" என்று திரும்பினார் தாசர்.

"பார்க்கிறேன்னு சொல்லவேண்டாம், நிச்சயமாக வேணும்!"

ஒரு கவலை தீர்ந்தது...அதாவது திங்கட்கிழமை வரை·

பாதி வழியில் போகையில், "அப்பா!" என்றது குழந்தை.

அவர் எதையோ நினைத்துக்கொண்டிருந்ததால்,தன்னையறியாமல் கொஞ்சம் கடினமாக, "என்னடி!" என்றார்.

"நீதான் கோவிச்சுக்கிறியே, அப்பா! நான் சொல்ல மாட்டேன், போ!"

"கோவம் என்னடி, கோவம்! சும்மா சொல்லு!"

"அதோ பார், பல்லு மாமா!"

முருகதாசரின் நண்பர் சுப்பிரமணிய பிள்ளைக்குக் கொஞ்சம் உயர்ந்த பற்கள். அவை, வெளியே நீண்டு கொண்டு, தமது இருப்பை அனுவசியமாக உலகத்திற்கு அறிவித்துக் கொண்டிருந்தன. அதனால் அலமு அவருக்கு இட்ட காரண இடுகுறிப் பெயர் அது.

"எங்கடி!"

"அதோ பார், வீட்டு நடேலே! என்னை எறக்கி விடப்பா!" என்று, அவரது கையிலிருந்து வழுகி விடுவித்துக் கொண்டு, வீட்டிற்கு ஓட ஆரம்பித்தது.

"மெதுவா! மெதுவா!" என்றார் பிள்ளை; குழந்தையா கேட்கும்?

"மாட்டேன்!" என்றது. அதற்கப்புறம் ஏக களேபரம். பாவாடை தடுக்கியதோ என்னமோ! அலமு வலு கட்டாயமாக அங்கப் பிரதக்ஷணம் செய்ய ஆரம்பித்தாள்.

பிள்ளையவர்கள் ஓடிப்போய்க் குழந்தையை வாரி எடுத்தார். ஆனால் இவர் பதட்டத்திற்கு ஏற்ப, அங்கு குழந்தைக்கு ஒன்றும் ஏற்படவில்லை.

"தோளுக்கு மேலே தொண்ணூறு, தொட்டுப் பாத்தா ஒண்ணுமில்லே!" என்று பாடிக்கொண்டு குழந்தை எழுந்தது.

"என்ன ஸார், குழந்தையை நீங்க இப்படி விடலாமா?" என்று சொல்லிக்கொண்டே சுப்பிரமணியம் அவர்கள் பக்கம் வந்தார்.

"என்ன ஸார் செய்யட்டும்! என்ன சொன்னாலும் கேட்கிறதில்லை என்ற உறுதி மனசிலே ஏறிப்போயிருக்கு. வெளியிலே புறப்பட்டாச்சா, அப்புறம் தேடிக்கொண்டு பின்னோடே பத்துப் பேர். இவளைக் கடைக்கனுப்பிச்சுட்டா, தாயார். இவ்வளவு நேரம் அந்த ரிக்ஷாக்காரனோடே தர்க்கம் — என்ன செய்கிறது! வாருங்கள் ஸார், உள்ளே! ஒன் மினிட்! விளக்கை ஏத்துகிறேன்."

குழந்தை அலமு அதற்குள் வீட்டிற்குள், "பல்லு மாமா வந்துட்டார்!" என்று பொதுவாக உச்ச ஸ்தாயியில் விளம்பரம் செய்துகொண்டு ஓடிவிட்டாள்.

"குழந்தை துருதுருவென்று வருகிறதே!பள்ளிக்கூடத்திற்காவது அனுப்பக் கூடாதா?" என்றார் நண்பர்.

"ஆமாம் ஸார், தொந்தரவு சகிக்கலே. அங்கேதான் கொண்டு தள்ளணும். வயசு கொஞ்சம் ஆகட்டுமே என்று பார்க்கிறேன்," என்றார் முருகதாசர், விளக்குத் திரியை உயர்த்திக்கொண்டே.

"நேத்து பீச்சுக்குப் போயிருந்தேன்! சுந்தரத்தைப் பார்த்தேன்........." என்று ஆரம்பித்தார் சுப்பிரமணிய பிள்ளை.

"அந்த ராஸ்கல் வந்துட்டானு! என்றைக்கும் அவன் தொல்லேதான் பெரிய தொல்லேயாக இருக்கிறது. இங்கே வந்தான்னு ஆபீஸுக்கு வந்து யாருக்காவது வத்தி வச்சுட்டுப் போயிடாது.........மின்னே வந்தப்போ, என்ன எழவு சொன்னுனே, அந்த ஆர்ட்டிஸ்ட் 'பதி' இருந்தானே அவனுக்குச் சீட்டுக் கொடுக்க வழி பண்ணிட்டான்........." என்று படபடவென்று பேசிக்கொண்டே போனுர் முருக தாசர்.

"அப்படிப் பாத்தா உலகத்திலே யார்தான் ஸார் நல்லவன்! அவன் உங்களேப் பத்தி ரொம்பப் பிரமாதமாக அல்லவா கண்ட இடத்திலெல்லாம் புகழ்ந்துகொண்டிருக்கிறுன்?"

"சவத்தெ தள்ளுங்க, ஸார்! பேன் பார்த்தாலும் பார்க்கும், காதை அறுத்தாலும் அறுக்கும். அவன் சங்காத்தமே நமக்கு வேண்டாம்......நீங்க என்ன சொல்ல வாயெடுத்தீர்கள்?"

"அதுதான், உங்களெப் பத்தித்தான் ஒரு இங்கிலீஷ்காரனிடம் பிரமாதமாகப் பேசிக்கொண்டிருந்தான்......"

'இவ்வளவுதானு! கதையை எழுதரேன், அல்லது கத்தரிக்காயை அறுக்கிறேன், இவனுக்கென்ன?...''

அதே சமயத்தில் வெளியிலிருந்து, "முருகதாஸ்! முருகதாஸ்!" என்று யாரோ கூப்பிட்டார்கள்.

"அதுதான்! அவன்தான் வந்திருக்கிறுன் போலிருக்கிறது! பயலுக்கு நூறு வயசு......"

"'சைத்தான் நினேக்கு முன்னுல் வந்துநிற்பான்' என்பதுதான்!" என்று முணுமுணுத்தார் முருகதாசர்.

பிறகு அவர் எழுந்து நின்று வெளியில் தலேயை நீட்டி "யாரது?" என்றுர்.

"என்ன! நான்தான் சுந்தரம், இன்னும் என் குரல் தெரியவில்லையா?" என்று உரத்த குரலில், கடகடவென்று சிரித்துக்கொண்டு, உள்ளே நுழைந்தார் வந்தவர். அவருடைய சிரிப்புக்கு இசைந்தபடி காலில் போட்டிருக்கும் ஜோடு தாளம் போட்டது.

"என்ன சுந்தரமா? வா! வா! இப்பொத்தான் உன்னைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தோம். நீயும் வந்தாய்! காப்பி போடச் சொல்லட்டுமா? அலமு! அலமு!" என்று உரக்கக் கூவினார் முருகதாசர்.

எங்கிருந்தோ, "என்னப்பா!" என்று அலமுவின் குரல் வந்தது.

"அம்மாவை மூணு கப் காப்பி போடச் சொல்லு. சீக்கிரம் ஆகணும்!"

"நீ என்ன பத்திரிகையையே விட்டுவிட்டாயாமே! இப்பத்தான் கேள்விப்பட்டேன்."

"வயிற்றுப் பிழைப்பிற்கு எதில் இருந்தால் என்ன? சீலைப்பேன் குத்துகிறதும் ஒரு 'பிஸினஸ்' ஆக இருந்து, அதில் ஒரு 'சான்ஸ்' கிடைத்தால், அதையும் விட்டா வைக்கிறது? நான் பத்திரிகையை விட்டுவிட்டா, கதை எழுதாமல் இருந்துவிடுவேனா? ஒரு பெரிய நாவலுக்குப் 'பிளான்' போட்டிருக்கேன். தமிழன்களுக்கு அதிர்ஷ்டம் இருந்தால், எனக்குக் காகிதம் வாங்கவாவது காசு கிடைக்கும் அதில் 'சென்ட்ரல் ஐடியா' என்ன தெரியுமா?......"

"நீங்க நேற்று பொருட்காட்சிக்குப் போனீர்களாமே!" என்று பேச்சை மாற்ற முயன்றார் சுப்பிரமணிய பிள்ளை. இந்த விஷயத்தைத் தொட்டுவிட்டால், முருகதாசர், கீறல் விழுந்த கிராமபோன் பிளேட் மாதிரி, விடாமல் திருப்பித் திருப்பி அதையே கதைத்துக்கொண்டிருப்பார்!

"அப்பா! காப்பியாயிட்டுது. நீதான் வந்து எடுத்துக் கிட்டுப் போகணும். சுடுது!" என்று சொல்லிக்கொண்டு, நிலைப்படி இரண்டு பக்கத்தையும் தொட்ட வண்ணமாய், ஒற்றைக் காலை ஆட்டிக்கொண்டு நின்றாள் அலமு.

"அம்மா எங்கே?"

"அம்மா சாத்தெ வடிச்சுக்கிட்டிருக்கா, அப்பா!"

"சரி! இதோ வாரேன், போ!"

"வாயேன்!"

"வர்ரேன்னு, போடீ உள்ளே!"

"காப்பி ஆறிப்போயிடும், அப்பா!"

"இதோ ஒரு நிமிஷம்!" என்று சொல்லிக்கொண்டு உள்ளே சென்றார்.

"மாமா! நீ என்ன கொண்டாந்தே!" என்று கேட்டுக் கொண்டு, சுப்பிரமணிய பிள்ளை மடியில் உட்கார்ந்து, கழுத்திலிருக்கும் நெக் டையைப் பிடித்து விளையாட ஆரம் பித்தாள் அலமு.

"அதெப் பிடித்து இழுக்காதே! மாமாவுக்கு கழுத்து வலிக்கும்!" என்றார் சுந்தரம் பிள்ளை.

"வலிக்காதே!" என்று மறுபடியும் ஆரம்பித்தாள்.

முருகதாசரும், மேல் துண்டின் உதவியால் ஒரு செம்பை ஏந்திய வண்ணம், உள்ளே நுழைந்தார்.

"என்னப்பா, மூணு டம்ளர் கொண்டாந்தே! எனக் கில்லையா?"

"உனக் கென்னடி இங்கே! அம்மாகூடப் போய்ச் சாப்பிடு."

"மாட்டேன்," என்று ஒரு டம்ளரை எடுத்து வைத் துக்கொண்டது குழந்தை.

முருகதாசர் காப்பியை ஆற்றி, சுந்தரம் கையில் ஒரு டம்ளரைக் கொடுத்தார்.

சுந்தரம் வாங்கி மடக் மடக்கென்று மருந்து குடிப்பதுபோல் குடித்துவிட்டு, "காப்பி வெகு ஜோர்!" என்று சர்டிபிகேட் கொடுத்தான்.

மற்றொரு டம்ளர் சுப்பிரமணிய பிள்ளையிடம் கொடுக்கப்பட்டது. "மாமா ! எனக்கில்லையா ?" என்று அவரிடம் சென்று ஒண்டினாள் அலமு.

"வாடி, நாம் ரெண்டு பேரும் சாப்பிடுவோம் !" என்றார் முருகதாசர்.

"மாமாகூடத்தான் !" என்றது குழந்தை. சுப்பிரமணிய பிள்ளை கையிலிருந்த டம்ளரில் அலமுவைக் குடிக்கச் செய்தார்.

பாதியானதும், "போதும் !" என்றது குழந்தை.

"இந்தாருங்க ஸார்!" என்று மற்ற டம்ளரையும் நீட்டினார் முருகதாசர்.

"வேண்டாம் ! வேண்டாம்! இதுவே போதும் !" என்றார் சுப்பிரமணிய பிள்ளை.

"நான் சென்ஸ் !" என்று சொல்லிவிட்டு, குழந்தை எச்சிற்படுத்தியதைத் தாம் வாங்கிக்கொண்டார் தாசர்.

"நேரமாகிறது, மவுண்டில் ஒரு நண்பரைப் பார்க்க வேண்டும்!" என்று எழுந்தார் சுந்தரம். "அதற்குள்ளாகவா? வெற்றிலை போட்டுக்கொண்டு போகலாம்!" என்றார் முருகதாசர்.

"கையில் எடுத்துக்கொண்டேன். நேரமாகிறது! அப்புறம் பார்க்கிறேன்!" என்று சொல்லிக்கொண்டு வெளியேறினார் சுந்தரம்.

கையில் இருந்த புகையிலையை வாயில் ஒதுக்கிவிட்டு, சிறிது சிரமத்துடன், தமக்கு நேரமாவதைத் தெரிவித்துக் கொண்டார் சுப்பிரமணிய பிள்ளை.

தொண்டையைச் சிறிது கனைத்துக்கொண்டு, "சுப்ர மண்யம், உங்களிடம் ஏதாவது சேஞ்ஜ் இருக்கிறதா? ஒரு மூன்று ரூபாய் வேண்டும்!" என்றார் முருகதாசர்.

"ஏது அவசரம்?"

'சம்பளம் போடலே; இங்கு கொஞ்சம் அவசியமாக வேண்டியிருக்கிறது.........திங்கட்கிழமை கொடுத்து விடு கிறேன்!"

"அதற்கென்ன?"...பர்ஸை எடுத்துப் பார்த்துவிட்டு, "இப்போ என் கையில் இதுதான் இருக்கிறது!' என்று ஓர் எட்டணாவைக் கொடுத்தார் சுப்பிரமணியம்.

"இது போதாதே!" என்று சொல்லி, அதையும் வாங்கி வைத்துக்கொண்டார் முருகதாசர்.

"அப்பொ .." என்று மீண்டும் ஏதோ ஆரம்பித்தார்.

"பார்ப்போம்! எனக்குக் கொஞ்சம் வேலையிருக் கிறது," என்று சுப்பிரமணியமும் விடைபெற்றுச் சென் றார்.

முருகதாசர், தமது ஆஸ்தான அறையின் சிம்மா சனமான பழைய கோரைப் பாயில் உட்கார்ந்துகொண்டு, அந்த எட்டணாவைத் திருப்பித் திருப்பிப் பார்த்துக் கொண்டு, நீண்ட யோசனையில் ஆழ்ந்திருந்தார்.

"அங்கெ என்ன செய்யறீங்க?" என்ற மனைவியின் குரல்!

"நீதான் இங்கே வாயேன்!"

கமலம் உள்ளே வந்து, "அப்பாடா!" என்று உட் கார்ந்தாள். அவர் கையில் இருக்கும் சில்லறையைப் பார்த்து விட்டு, "இதேது?" என்றாள்.

"சுப்பிரமணியத்திடம் வாங்கினேன்!"

"உங்களுக்கும்......வேலை யில்லையா?" என்று முகத்தைச் சிணுக்கினாள் கமலம். பிறகு திடீரென்று எதையோ எண்ணிக்கொண்டு, "ஆமாம், இப்பத்தான் நினைப்பு வந்தது நாளைக்குக் காப்பிப் பொடி யில்லை, அதெ வச்சு வாங்கி வாருங்களேன்!" என்றாள்.

"அந்தக் கடைக்காரனுக்காக அல்லவா வாங்கினேன்; அதைக் கொடுத்துவிட்டால்?"

"திங்கட்கிழமை கொடுப்பதாகத்தானே சொன்னீர்களாம்!"

"அதற்கென்ன இப்பொழுது?"

"போய்ச் சீக்கிரம் வாங்கி வாருங்கள்!"

"திங்கட்கிழமைக்கு?"

"திங்கட்கிழமை பார்த்துக் கொள்ளுகிறது!"



## கதை 2

# விநாயக சதுர்த்தி

*" இந்தத் தேவடியாத் தொழில் உனக்கு எதுக்கு ?
அதையுமா விற்றுவிட்டாய் ! அதுக்கு விலையா ?
.........விலையா ?......... "*

---

அன்று விநாயக சதுர்த்தி. நான், பலசரக்குக் கடையிலிருந்து சாமான்கள் கட்டிவந்த சணல் நூல்களை யெல்லாம் ஒன்ருகச் சேர்த்து முடித்து, வீட்டின் கூடத்தில் நாற்கோணமாகக் கட்டினேன். அப்புறம் மாவிலைகளை அதில் தோரணமாகக் கோத்துக்கொண்டிருந்தேன். ஆமாம், பட்டணத்திலே மாவிலைகூடக் காசு கொடுத்துத்தான் வாங்க வேண்டும். 'என்ன, மாவிலைக்குமா விலை?' என்று பிரமித்துப் போகாதீர்கள் ! மாவிலைக்கு விலையில்லை யென்று வேண்டுமானல் வைத்துக்கொள்ளுங்கள். ஆனல், மரத்தில் ஏறிப் பறித்து, வீடு தேடிக் கொணர்ந்து கொடுப்பதற்குக் கூலி கொடுக்க வேண்டுமா, இல்லையா ? நாங்கள் படித்த பொருளாதார சாஸ்திரப்படி, இந்த 'உழைப்பின் மதிப்பை' அந்த இலையின்மேல் ஏற்றிவைத்துப் பார்க்கவேண்டும். இதுதான் 'விலை' என்பது ! நீங்கள் கிராமாந்தரங்களில் இருந்தால், எவனுடைய மாமரத்திலேனும், வழியிற் போகும் எவனை யாவது ஏறச் சொல்லி, "டேய், ரெண்டு மாங்குழை பறித்துப் போடடா !" என்று செரல்லிவிடுவீர்கள். சில பிள்ளைகள் தாங்களே மரத்திலேறிப் பறிப்பார்கள்; சிலர் மரத்தோடு கட்டிவைக்கப்படுவதும் உண்டு. இந்த 'ரிஸ்க்' எல்லாம் நினைத்துத்தான் பட்டணவாசிகள், மண் முதல் மாங்

குழை வரை, எல்லாப் பொருள்களையும் விலை கொடுத்து வாங்க முயற்சிக்கிறார்கள். இதுதான் அழகு, நாகரிகம்! பட்டணத்திலே, ஆந்தைகள் வசிக்கும் பொந்துகள் மாதிரியுள்ள வீடுகளில், கும்பல் கும்பலாய் வசிக்கும் நாங்களும் இந்த நாகரிகத்தின் சிறு சிறு துணுக்குகள்தானே!...... நிற்க.......நான் தோரணத்தைக் கட்டிக்கொண்டிருந்தேன். அதாவது, காசு கொடுத்து வாங்கின மாவிலைகளில் 'வேஸ்டேஜ்' (கழிவு) இல்லாமலிருக்க, எல்லாவற்றையும் சேர்த்து வைத்துத் தொடுத்துக்கொண்டிருந்தேன். எனக்குப் பல் முளைத்த மாதிரி, அவை கோணல் மாணலாகத் தொங்கின.

நான் தோரணம் கோத்துக்கொண்டிருக்கிறேன்.........

பக்கத்திலே பிள்ளையார், பச்சைக் களிமண் ஈரமும், எண்ணெய்ப் பசையும் பள பளக்க, சர்க்கரைப் பொட்டலம், காகிதக் குடை, நாவற்பழம், புளி வகையராக்களுடன், அரங்கத்தில் பிரவேசிக்கக் காத்திருக்கும் ராஜபார்ட் போல, ஏன், "சிம்மாசனம் காலியாகட்டுமே, ஏறி உட்காருவோம்!" என்று காத்திருக்கும் பட்டத் திளவரசன் போல, பரிதாபகரமாகக் காத்துக்கொண்டிருக்கிறார்.

என் மனம் ஒரு ரசமான பேர் வழி. இந்த மாதிரியான சோம்பேறி வேலை எனக்குக் கிடைத்துவிட்டால், அது கண்டபடி ஓட ஆரம்பித்துவிடும்.

"உனக்கு ஒரு ரசமான கதை சொல்லட்டுமா?" என்றது.

"'பிரேக்' கழன்று போய்விட்டது. இனி வெறிதான்!" என்று திட்டப்படுத்திக்கொண்டேன்.

"ஆமாம்! வண்ணாரப்பேட்டையிலே சுப்பு வேளான் இருந்தானே, ஞாபகம் இருக்கிறதா?" என்றது.

ஒரு வரிசைத் தோரணத்துக்கு இலைகளை வைத்துச் சரிக்கட்டிவிட்டேன்.

"அவன்தான் ஆக்கு! - கண்டசியிலே வெள்ளைக் களி மண்ணையே தின்று செத்தானே, அந்த மருத வேளான் மகன்!" என்றது மறுபடியும்.

அப்படியே நான் எங்கள் ஊருக்குச் சென்றுவிட்டேன். அந்தத் தாமிரவருணி ஆற்றின் கரை, தூரத்திலே மேற்குத் தொடர்ச்சி மலை, சமீபத்தில் சுலோசன முதலியார் பாலம், சின்ன மண்டபம், சுப்பிரமணிய சாமி கோவில், சாலைத்தெரு, பேராச்சி கோவில், மாந்தோப்பு, பனை விடலிகள், எங்கள் வீடு—எல்லாம் அப்படி அப்படியே என் கண் முன்பு தோன்றலாயின.

"ஆமாம், எல்லாம் வாங்கிக்கொண்டு வந்தீர்களே! பிள்ளையாருக்கு விளாம் பழம் எங்கே?" என்று கேட்டுக் கொண்டே, சர்க்கரைப் பொட்டலத்தை எடுத்தாள் என் மனைவி.

"கூடைக்காரி வருவாளே! வாங்கினாப் போகிறது!" என்று சொல்லி, ஒரு முரட்டு மாவிலையை எடுத்து, பத்து அங்குல இடத்தையும் அதொன்றினால் மறைத்து 'அலங்காரம்' செய்ய முயற்சித்தேன்.

"கூடைக்காரி வந்தால்தானே! நீங்கள் போய் எட்டிப் பாருங்களேன்!" என்றாள் சகதர்மிணி.

"திட்டமாக வருவாள், நான் சொல்லுகிறேன் பார்!" என்றேன். என் வாழ்க்கையில் ஒரு நாளாவது தீர்க்க தரிசி, அல்லது 'பலிக்காவிட்டால் பணம் வாபீஸ்!' என்று விளம்பரம் செய்யும் ஜாமீன் ஜோஸியராக ஆகிவிடுவது என்று, (சந்தர்ப்ப விசேஷத்தால்) என் சோம்பலை வியாக்கியானம் செய்தேன்.

பக்கத்திலே இருக்கும் பரிவாரங்களில் ஒன்றைப் பறிகொடுத்தார் விநாயகர்.

"சுப்பு வேளான் குடும்பத்துக்கே சாபம், தெரியுமா?" என்றது என் மனசு.

"அதென்ன ?"

"கும்பினிக்காரன் வந்த புதுசு. அந்தக் காலத்திலே சுலோசன முதலியார் பாலம் கட்டலே. நம்ம சாலைத் தெருதான் செப்பரை வரைக்கும் செல்லும். அங்கே தான் ஆற்றைக் கடக்கவேண்டும். கொக்கிரகுளத்திலே இப் பொழுது கச்சேரிகள் இருக்கே, அங்கேதான் கும்பினியான் சரக்குகளைப் பிடித்துப் போடும் இடம். அந்த வட்டாரத் திலே நெசவும், பாய் முடைகிறதும்—இந்தப் பத்தமடைப் பாய் இருக்கே அது—ரொம்பப் பிரபலம். அப்பொழுது ஒரு இருநூறு முந்நூறு வண்ணான்களைக் குடியேற்றி வைத்தான் கும்பினிக்காரன். 'குஷ்டந் தீர்ந்த துறை' என்ற பேர் 'வண்ணாரப் பேட்டை' என்று ஆயிற்று!"

"இதோ, இதைப் பாருங்கள். இந்த உப்புப் போதுமா என்று பாருங்கள்!" என்று கையில் கொஞ்சம் உப்பைக் கொணர்ந்தாள் பத்தினி.

"இதெல்லாம் உன் 'டிபார்ட்மெண்டு'. என்னைக் கேட்டால்...............?" என்று சிரித்துக்கொண்டு, அவளைப் பார்த்தேன்.

"என்னிக்குமா உங்களைக் கேக்கறேன் ? ஏதோ கேட்டால்..........."

அவள், காலையில் ஸ்நானம் செய்து, தலையை ஈரங் காயாமல் எடுத்துக் கட்டியிருந்தாள். அவ்வளவு அவசரம்! நெற்றியில் விபூதி, அதற்கு மேல் குங்குமம்.........பறந்து பறந்து வேலை செய்வதால் முகத்தில் ஒரு களை............ வேகத்திலும் ஓர் அழகு இருக்கத்தான் செய்கிறது என்று நினைத்தேன்............

## விநாயக சதுர்த்தி

"ஏடி, கமலா! கொஞ்சம் அந்தச் செல்லத்தை எடுத்துவை!" என்று கேட்டேன்.

"ஆமாம், அடுப்பிலே பாகு என்னமா காய்கிறதோ! இந்தச் சமயத்தில்தான் உங்களுக்கு..." என்று சொல்லிக் கொண்டு வெற்றிலைப் பெட்டியை எடுத்து வைத்துவிட்டு, உள்ளே சென்றாள்.

அப்பொழுது எங்கிருந்தோ மெல்லிய தளிர்க் காற்று வீட்டிற்குள் பிரவேசித்து உலாவியது. மாவிலைக் கும்பலில் உட்கார்ந்துகொண்டு வெற்றிலையை மடிக்க ஆரம்பித்தேன். எனக்கு வெற்றிலை போடுகிறதென்றால் ஒரு தனிப் பிரயோக முறை. அந்தச் சடங்கில் ஒரு சிறிதும் வழுவிவிட்டால் இலட்சியம் நிறைவேறிய மாதிரியே இருக்காது.

வெளியே வெய்யில் ஏற ஏற, உள்ளே பிள்ளையார் காய ஆரம்பித்தார். எப்படியானாலும் சுய குணத்தைக் காண்பிக்காமல் இருக்க முடியுமா?

"அப்பொ பாளையங்கோட்டையிலே இருந்த தோட்டை கூட இடியலே. மதுரை வரைக்குந்தான் ரயில் வந்திருக்கும். இந்தப் பக்கத்திலே எல்லாம் வண்டிப் பாதை தான்....

"இப்பொ மாதிரியா? சாயங்காலம் நாலு மணிக்கப்புறம் அந்தப் பக்கத்திலே போகிற தென்றால் யாருக்கும் பயந்தான். இப்பொழுது கட்டடமும் பங்களாவும் இருக்கிற இடமெல்லாம் அப்பொழுது * உடங்காடு...

"அப்பா! அந்தக் காலத்திலே ஒரு மருத வேளார் இருந்தார். நல்ல மனுஷர். சோழியப் பிராமணன் மாதிரி உச்சிக் குடுமியும் பூணூலும் இருந்தாலும், முகத்திலே ஒரு களை இருக்கும். அவருக்கு ரொம்பக் காலமா பிள்ளை

* உடை மரம் - கருவேல மரம்.

யில்லே. இப்போ சின்ன மண்டபத்துக்குப் போகிற பாதை யில் இருக்கே ஒரு பிள்ளையார், அதை அந்தக் காலத்திலே தான் பேச்சியா பிள்ளை வைத்து ஒரு 'அரசுக் கலியாணம்' நடத்திவைத்தார். அந்தப் புதுப் பிள்ளையாரை இருபது வருஷம் சுற்றி வந்ததின் பயனுக, ஒரு பிள்ளை பிறந்தது மருத வேளாருக்கு. ஆண் குழந்தைதான். அழகுன்னு, சொல்லி முடியாது! உன் மனைவிக்கு இருக்கே அப்படி அழகான கண்கள்! அவனுக்குச் சுப்பிரமணியன் என்று பெயரிட்டார். பிள்ளை வெகு துடி... ..ஆனல், நாலு காரி யம் உருப்படியாப் பண்ணத் தெரியாது......எப்பப் பார்த் தாலும் விளையாட்டுத்தான். என்ன செல்லம் கொடுத்தா லும், 'அடியாத மாடு படியாது' என்பது வேளாளரின் கொள்கை. அதிலேயே அவர் நம்பிக்கை இழக்கும்படி நடந்துகொண்டான் என்றால், பயல் எவ்வளவு துடியாக இருந்திருக்க வேண்டும்!

"சாயங்காலமும் வேளார் குளித்துவிட்டுப் பிள்ளை யாரைச் சுற்ற வருவார். அப்பொழுது படித்துறைப் பக்கம் உட்கார்ந்திருக்கும் பிள்ளையாருடனும், சாயங்கால பூஜைக் கென்று கோவிலுக்குத் தண்ணீர் எடுக்க வரும் விசுவநாத தீட்சதரிடமும் அவர் தம் குறைகளைச் சொல்லி அழுவார். அன்று பேச்சியாபிள்ளையும் அங்கு வந்திருந்தார். அவர் வேளாரைக் கண்டதும் ஆவேசமாய்ப் பேச ஆரம்பித்தார்.

'என்ன வே! இண்ணைக்கி அந்தப் பய சுப்பு நம்ப தோட்டத்திலே இறங்கி நாலு மாங்கா களவாடிக்கிட்டு ஓடிட்டானுமே...!' 'ஓய்' என்ற விளியிடைச் சொல், 'வேய்' ஆகி, பின் வெறும் 'வே' என்று குறுகிவிட்டது: 'வே' போட்டுப் பேசுகிறவர் காசியிலிருந்தாலும் சரி, அவர் தென் பாண்டி நாட்டு ஆசாமி என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

"என்ன எசமான் செய்ய! கண்டிச்சுப் பாத்தாச்சு. மண்ணெடுக்கப் போடான்னு போரதில்லே. சக்கரத்துக் கிட்டயே வரமாட்டான். படிக்கவாவது போட்டுப் பார்த்தேன்... ..வாத்யாரய்யா அவனுக்குக் குளிர் விட்டுப் போச்சு என்று சொல்லிக் கைவிட்டுவிட்டார். என் விதி! பயலுக்குத் தொழில் தெரியாமலா இருக்கு?........வீடு முழுக்கலும், ஒரு நாளைக்குப் பாத்தா, யானையும் குதிரையுமா பண்ணிப் போட்டுவிடுவான்......'இதெல்லாம் சுட்டுக் கொண்டா. வர்ணம் பூசித் தாரேன். கொலுவுச் சாமானு விக்கலாண்டா!' இன்னு, 'அதெல்லாம் எனக்குத் தெரியாது!' என்று சொல்லி, மறுபடியும் வெறும் களிமண்ணுக்கிவிடுகிறான். 'அட! சும்மாவாவது வீட்டோட கெட!' என்றால் கேட்கிறானு?......எப்பப் பார்த்தாலும் சண்டை, சண்டை, சண்டை! எப்பப் பார்த்தாலும் போராட்டந்தான்! அதோ போகுது பாருங்க, அந்தக் களுதெ! கூப்புட்டு, எசமான் மின்ன வச்சுக் கேக்கரேன்... ஏலே அய்யா, சுப்பு!' என்று குரலெடுத்துக் கூப்பிட்டார் வேளார்.

"'பயல் கெடக்கிறான் வே! சவத்தெ தள்ளும்! நாலு காயிலே என்ன பெரமாதம்! இவன் எடுக்காட்டா, அணில் கொத்தித் தள்ளுது .....நான் சொல்றது என்னன்னு, இந்த வயசிலேயே இது ஆகாது!' என்றார் பேச்சியாபிள்ளை.

"'பிள்ளைவாள்! நீங்க சொல்றது நூத்துக்கொரு வார்த்தை' என்றார் விசுவநாத தீட்சதர்.

"'ஆமாம் எசமான்!' என்று ஏங்கினார் மருத வேளார்..."

"நீங்கதான் ஏன் சும்மா இருக்கிறீர்கள்? பிள்ளையாரை எடுத்து வைத்தால் ஆகாதோ?" என்று சொல்லிக் கொண்டு வந்தாள் என் மனைவி.

"அதெல்லாம் முடியாது. நான் நாஸ்திகன். அதெல்லாம் குடும்ப விளக்கு குல விளக்கு 'டிபார்ட்மெண்ட்'!" என்றேன் நான்.

"மஹா 'டிபார்ட்மெண்'டைக் கண்டுவிட்டீர்களாக்கும்! சோம்பல் என்றால், அப்படிச் சொல்றதுதானே! எல்லா நாளுமா.........கை வேலையா இருக்கே!" என்று, பெருங்காய டின்னை எடுத்துக்கொண்டே, அவள் சொன்னாள்.

அதற்குள் என் மன ராணி என்னை மடியைப் பிடித்திழுத்தாள். இரண்டு பெண்டாட்டிக்காரன் பாடுதான்......

"சுப்பு வேளானுக்குப் பதினாறு வயசு. அப்பொ மதத்திலே கிறுக்கு விழுந்தது. நாலு நாள் ஓயாது ஒழியாது அற்புதமாக விக்ரகங்கள் செய்வான்......அப்புறம் அது பழைய களிமண்தான்......வேளார்தான் தள்ளாத வயசிலேயும் குடும்ப போஷணையைக் கவனிக்க வேண்டிய தாச்சு.

"அப்பொப் பார்த்து அந்தக் கசமுத்து வேளார் மகளிடம் தடித்தனமா நடந்துகொண்டானும் சுப்பு. சாயங்காலம் அந்தப் பெண் இசக்கி அம்மை, தண்ணீர் எடுக்க ஆற்றங்கரைக்கு வந்தாளாம்......இவன் போய் அவள் எதிரில் நின்றுகொண்டு, 'ஏட்டி! என்னைக் கலியாணம் பண்ணிக்கிறியா?' என்று கேட்டானும்.

"உள்ளுக்குள் பூரிப்போ என்னவோ! பானையைக் கீழே போட்டு உடைத்து, 'ஓ, ராமா!' என்று அழுதுகொண்டு, 'இவன் என்னை இப்படிக் கேக்க ஆச்சா?' என்ற நினைப்பில் வீட்டுக்குச் சென்றாளாம்.

"ஊர்க்காரர்கள் இவனை அடிக்கக் கூடிவிட்டார்கள். இவன் தோழர்கள் எல்லாம் இவனுக்குப் பரிந்து பொய் சொல்லியும், 'விளையாட்டுக்குச் சொன்னான்' என்று சொல்லியும் பார்த்தார்கள்.

## XIV

ஸ்டோர் மனேஜருக்கு ஐம்பது வயதிற்கு மேலானாலும் மனமும் ஆசையும் குறைந்தபாடில்லை. இப்பொழுது அவருடைய திருவிளையாடல்கள் எல்லாம் மிகவும் மறைமுகமாக நடக்கும். ஆனால், அவற்றிற்குக் கையாள் குதிரைக்காரச் சின்னான்.

நெடுநாளாக ஸ்டோர் மானேஜருக்கு வெள்ளைச்சியின் மீது கண் உண்டு. இப்பொழுது இருந்த வளமையில், மருதியும், கங்காணிச் சுப்பனும் முரடர்கள். மேலும் வெள்ளைச்சியின் குணம் 'வாட்டர் பால'த்திற்கு நன்றாகத் தெரியும். ஆனால், ஆசை யாரை விட்டது? குதிரைக்காரச் சின்னான் இந்த விஷயத்தைத் தெரிந்துகொண்டான். நெடுநாளாகக் கங்காணி வேலையில் அவனுக்குக் கண் உண்டு.

நீர்வீழ்ச்சியின் கீழ் 2½ மைல் வரை தேயிலைத் தோட்டம் படர்ந்திருந்தது. அப் பக்கத்தில் ஆட்கள் நடமாட்டம் அவ்வளவு கிடையாது. தோட்டத்தின் எல்லையைத் தாண்டினால் அழிக்கப்படாத 'ரிஸர்வ்' காடுகள். அவற்றின் இடையே நீர்வீழ்ச்சியிலிருந்து ஓடும் ஆறு, பாறைகளின் மீது சலசலத்துப் பாய்கிறது.

வெள்ளைச்சியை மெதுவாக அந்தப் பக்கமாக அழைத்துவர, அவளுடன்கூட அலையும் சிறு பெண்களுக்குக் காசு கொடுக்கப்பட்டது.

அவர்கள் அப்போதைக் கப்போது சின்னானின் நட்பைப் பெற்றவர்கள். இத்தனை நாளும் அகப்படாத வெள்ளைச்சியைப் பிடித்துக் கொடுப்பதில் அவர்களுக்குக் கொஞ்சம் குதூகலம்! ஏற்பாட்டின்படி நடந்தது. சின்னான், ஸ்டோர் மானேஜருடன் அங்கு வந்திருந்தான். வெள்ளைச்சியைக் கொழுந்து பறிக்க வைத்துவிட்டு, மெதுவாக நழுவிவிட்டார்கள் கூடவந்த சிறுமிகள்.

வேறு விஸ்தரிப்பானேன்? அவளை முரட்டுத்தன மாகப் பிடித்து மரத்தில் கட்டிவிட்டான் குதிரைக்காரன்.

வெள்ளைச்சியின் கூச்சலைக் கேட்டு உதவிக்கு வருவதற்கு அங்கு ஆட்கள் இல்லை. ஆனால், அன்று தற்செயலாக ராமசந்திரன் அப்பக்கம் வந்தான்.

தூரத்தில் வரும்பொழுதே வெள்ளைச்சியின் நிலையைப் பார்க்க நேர்ந்தது. முதலில் அவன் வெள்ளைச்சி என்று நினைக்கவில்லை.

கிட்ட நெருங்கியதுந்தான் அவனுக்குத் தெரிந்தது. வெறிபிடித்தவன்போல, அவ்விருவரையும் தாக்கினான்.

சின்னான் முரடன். ராமசந்திரன் அடிக்கப் பார்த்துக்கொண்டிருப்பானா? தடியைப் பிடுங்கிக்கொண்டு அவன் வெளுத்துவிடவே, ராமசந்திரன் மூர்ச்சையாகி விழுந்தான்.

அவனுக்குப் பிரக்ஞை வரும்பொழுதும் வெள்ளைச்சியின் கூக்குரல்தான் கேட்டது. மெதுவாக எழுந்து, அவள் கட்டுக்களை அவிழ்த்துவிட்டான்.

வெள்ளைச்சி அவனைக் கட்டிக்கொண்டு தேம்பித் தேம்பி யழுதாள். சில சில சமயம் ரௌத்திராகாரமாகக் காளியைப்போல் இடிக் குரலில் பிதற்றுவாள்.

ராமசந்திரனுக்கு வலி சகிக்க முடியாது போனாலும், யாராவது கொஞ்சம் தைரியத்துடன் இருந்தால்தானே வீட்டிற்காவது போகலாம்!

இருவரும் நேரே மருதியின் குடிசைக்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

மருதிக்கு, அவர்கள் செய்தியைக் கேட்டதும், பேரிடி விழுந்ததுபோல் ஆயிற்று.

அதிலும், தன்னைக் கெடுத்த பாவியின் கையாள்தான் மருமகனைத் தேர்ந்தெடுக்கப்பட்ட அந்தச் சின்னான்.

குய்யோ முறையோ வென்று கூவிக்கொண்டு, ஸ்டோர் மானேஜர் பங்களாவிற்கு ஓடினாள். அவர் அப்பொழுது தான் சாப்பிட்டுவிட்டு வெளியே வந்து நின்றுகொண்டிருந் தார். பக்கத்தில் மரகதமும், தாமோதரனும் நின்றுகொண் டிருந்தார்கள்.

ஓடிவந்த மருதி, "என்னைக் கெடுத்த பாவி, என் மகளை யும் குலைத்தாயே!" என்று ஒரு கல்லைத் தூக்கி, அவர்மீது போட்டாள். நெற்றிப் பொருத்தில் பட்டு உயிரைப் பறித் துச் சென்றது கல்!

தாமோதரன் மருதியை ஓங்கி யடித்தான். அவள் மூர்ச்சை போட்டு விழுந்துவிட்டாள்.

மரகதம் தகப்பனார்மீது விழுந்து கதறினாள். வேலைக் காரர்கள் வந்து கிழவரை உள்ளே எடுத்துச் சென்றார்கள்.

இதற்குள் நடந்த விஷயம் கூலிக்காரர்களுக்குள் பரவி விட்டது. அவர்கள் எல்லோரும், கம்பையும் தடியையும் எடுத்துக்கொண்டு, துரை பங்களாவின் பக்கம் ஓடினார்கள்.

சின்னான் அங்குதான் இருப்பான் என்பது அவர்கள் நம்பிக்கை. அப்பொழுதுதான் தூங்கி விழித்த துரை, துப்பாக்கியை எடுத்துக்கொண்டு, கீழே இறங்கினார். கூட் டம் அடக்கக்கூடியதாக இல்லை.

மறுபடியும் உள்ளேபோய், கொழும்புப் போலீஸாரை டெலிபோனில் அழைத்துவிட்டு, அவர் கூட்டத்தை நோக் கிச் சுட்டார். கூட்டம் சின்னான் வீட்டில் தீ வைத்து விட்டது. ஆனால், சின்னான் பைத்தியக்காரனல்லன். கூட் டம் வருமுன்பே எங்கோ ஓடிவிட்டான்.

கூலிக்காரர்களின் கூட்டம் ஸ்டோர் மானேஜரின் வீட் டுப் பக்கத்தை நாடியது.

கூலிக்காரர்கள் திரண்டு ஆர்ப்பாட்டம் செய்கிறார்கள் என்று தெரிந்ததும், ராமசந்திரனுக்குப் பயம் அதிகமாகி

யது. மரகதத்தையும் அவள் வீட்டிலுள்ளவர்களையும் ஏதாவது செய்துவிட்டால் என்ன செய்வதென்று கவலைப் பட்டான்.

வெள்ளைச்சியிடம் தன் மனத்தில் உள்ளதைக் கூறினான். அவளுக்கு முதலில் சம்மதமில்லை. பிறகு அவன் இஷ்டத்திற்காகச் சென்றாள். அங்கு போனதும்தான் நடந்த சமாசாரம் தெரிந்தது. மரகதத்தையும் தாமோதரனையும் அழைத்துக்கொண்டு துரை பங்களாவிற்கு வந்தான்.

மருதிக்குக் காவலாக வெள்ளைச்சி நின்றுகொண்டிருந்தாள். அப்பொழுது கூட்டம் அவர்கள் வீட்டை நோக்கி வந்தது.

வெள்ளைச்சி முரட்டுத் தைரியம் கொண்டவள் :

"கிழவன் போய்விட்டான், இனி ஒன்றும் செய்ய வேண்டாம்!" என்று கூவினாள்.

கூட்டத்தில் பலருக்கு அவ்வித அபிப்பிராயம் கிடையாது. ஆனால் முதல் ஆவேசம் அடங்கிவிட்டது. எல்லோரும் மெதுவாகத் திரும்பினார்கள்.

மருதிக்குப் பிரக்ஞை வந்தது; ஆனால் சித்தம் தெளியவில்லை.

ராமசந்திரன் துரையிடம் நடந்த சமாசாரங்களைக் கூறினான். துரையோ அநுபவம் பெற்றவர்.

குற்றம் அதிகாரிகள் பக்கம் இருக்கிறது என்று தெரிந்ததும், சமாதானம் செய்வதைத் தவிர வேறு வழியில்லை என்று தெரிந்துகொண்டார். பத்திரிகையில் கம்பெனியின் பெயர் அடிபடுவதில் அவருக்குப் பிரியமில்லை.

அன்று விடியற்காலம் போலீஸ் பட்டாளம் ஒன்று வந்தது.

விவகாரங்கள் ஒருவிதமாக முடிவதற்குக் காரணம் துரைதான். துரை கொலையை நாஸுக்காக அமுக்கிவிட்

டார். பத்திரிகைகளில் இந்த விஷயம் வெளிவரக் கூடாது என்பதே அவர் கவலை.

மருதிக்குப் பைத்தியம் தெளியவே யில்லை. அவளும், வெள்ளைச்சியும், ராமசந்திரனும் எங்கோ சென்றுவிட்டார்கள்.

'வாட்டர் பால'த்தில் மறுபடியும் அமைதி குடிகொண்டது, தேயிலை உற்பத்தியில் அது தன்னை மறந்தது.

மரகதம்! அவளும் இப்பொழுது 'வாட்டர் பால'த்தில்லை.

தாமோதரன், இப்பொழுது நெல்லூர்ப் பக்கத்தில் வாத்தியாராக இருக்கிறான். அவனுடன் மரகதம் இருப்பதைப் பார்த்தால், அவர்களுக்குக் கலியாணமாகிவிட்டது என்றுதான் நினைக்கவேண்டி யிருக்கிறது. அப்படித்தான் பலரும் சொல்லிக்கொள்ளுகிறார்கள்.



கதை 4

## சிற்பியின் நரகம்

*அந்தகார வாசலில், சாயைகள் போல்,உருவங்கள் குனிந்தபடி வருகின்றன. குனிந்தபடி வணங்குகின்றன. "எனக்கு மோட்சம்! எனக்கு மோட்சம்!" என்ற எதிரொலிப்பு! அந்தக்கோடிக்கணக்கான சாயைகளின் கூட்டத்தில் ஒருவராவது சிலையை ஏறிட்டுப் பார்க்கவில்லை!*

---

சூரியாஸ்தமன சமயம். காவிரிப்பூம்பட்டினத் துறைமுகத்தில் என்றையும்விட அதிக நெருக்கடி. கறுத்து ஒடுங்கிய மிசிர தேச வாசிகளும், வெளுத்து ஒடுங்கிய கடார வாசிகளும், தசை வலிமையின் இலட்சியம் போன்ற கறுத்த காப்பிரிகளும், வெளுத்த யவனர்களும், தென்னாட்டுத் தமிழும், வடநாட்டுப் பிராகிருதமும்—எல்லாம் ஒன்றிற்கொன்று முரண்பட்டுக் குழம்பின. சுங்க உத்தியோகஸ்தர்கள், அன்னம் போலும், முதலைகள் போலும் மிதக்கும் நாவாய்களிலிருந்து இறக்குமதி செய்யப்படும் பண்டங்களையும், வேலைக்காரர்களையும், பொற்பிரம்பின் சமயோசிதப் பிரயோகத்தால் தணிக்கை செய்துகொண்டிருந்தனர். அரசனுக்குக் கடாரத்திலிருந்து வெள்ளை யானைகள் கொண்டுவரப் பட்டிருக்கின்றன. அவற்றைப் பார்க்கத்தான் என்றுமில்லாத கூட்டம்!

அஸ்தமன சூரியனின் ஒளியே எப்பொழுதும் ஒரு சோக நாடகம். கோவில் சிகரங்களிலும், மாளிகைக் கலசங்களிலும் தாக்கிக் கண்களைப் பறிப்பதுமட்டுமல்லாது,

கடற் கரையில் கரும் பாறையில் நிற்கும் துவஜஸ்தம்பத்தின் மீது, கீழ்த்திசை நோக்கிப் பாயும் பாவனையில் அமைக்கப் பட்ட பொன் முலாம் பூசிய வெண்கலப் புலியின் முதுகி லும் வாலிலும் பிரதிபலிப்பது, அவ்விடத்திற்கே ஒரு மயக் கத்தைக் கொடுத்தது.

இந்திர விழாவின் சமயத்தில் மக்களின் வசதிக்காக அமைக்கப்பட்ட ஸ்நான கட்டத்தின் படிக்கட்டில், பைலார்க்கஸ் என்ற யவனன், கடலை நோக்கியபடி உட்கார்ந் திருந்தான். நீண்ட போர்வையான அவனது டோகா, காற்றில் அசைந்து படபடவென் றடித்து, சில சமயம் அவ னது தாடியையும் கழுத்துடன் இறுகப் பின்னியது. பெரிய அலைகள் சமயா சமயங்களில் அவனது பின்னிய தோல் வார்ப் பாதரட்சையை நனைத்தன. அவ்வளவிற்கும் அவன் தேகத்தில் சிறிதாவது சலனம் கிடையாது. மனம் ஒன்றில் லயித்துவிட்டால், காற்றுத்தான் என்ன செய்ய முடியும், அலைதான் என்ன செய்ய முடியும்?

பைலார்க்கஸின் சிந்தனை சில சமயம் அலைகளைப் போல் குவிந்து விழுந்து சிதறின. கனவுகள் அவனை வெறி யனைப் போல் விழிக்கச் செய்தன.

திடீரென்று, "சிவா!" என்ற குரல். ஒரு தமிழ் நாட்டுப் பரதேசி!

"யவனரே! உமது சித்தம் உமக்குப் பிரியமான ஒன்று மற்ற பாழ்வெளியில் லயித்ததோ? நான் நேற்றுச் சொன் னது உமக்குப் பதிந்ததா? எல்லாம் மூலசக்தியின் திருவிளை யாடல், அதன் உருவம்! கொல்லிப் பாவையும் அதுதான்; குமரக் கடவுளும் அதுதான்! எல்லாம் ஒன்றில் லயித் தால்......?"

"உமது தத்துவத்திற்குப் பதில் ஒரு கிண்ணம் திராட்ச மது எவ்வளவோ மேலானது. அதுவும் சைப்பிரஸ் தீவின்

திராட்சை...அதோ போகிறானே, அந்தக் காப்பிரியும் ஏதோ கனவை நம்புகிறான். உமது முதல் சூத்திரத்தை ஒப்புக்கொண்டால், உமது கட்டுக்கோப்பில் தவறு கிடையாதுதான்...அதை எப்படி ஒப்புக்கொள்ள முடியும்? ஒவ்வொருவனுடைய மனப் பிராந்திக்கும் தகுந்தபடி தத்துவம்......எனக்கு அது வேண்டாம்......நாளங்காடியில் திரியும் உங்கள் கருநாடிய நங்கையும், மதுக் கிண்ணமும் போதும்......"

"சிவ! சிவ! இந்த ஜைனப் பிசாசுகள்கூடத் தேவலை, கபாலி வெறியர்கள்கூடத் தேவலை......உம்மை யார் இந்த அசட்டு மூட்டையைக் கட்டிக்கொண்டு யவனத்திலிருந்து வரச் சொன்னது?"

"உம்மைப் போன்றவர்கள் இருக்குமிடத்தில் நான் இருந்தால்தான் அர்த்தமுண்டு எங்கள் *ஜுபிட்டரின் அசட்டுத்தனத்திற்கும் உங்கள் கந்தனின் அசட்டுத்தனத்திற்கும் ஏற்றத் தாழ்வில்லை..." என்று சிரித்தான் பைலார்க்கஸ்.

"சிவ! உம்மிடம் பாசத்தை வைத்தான், அதுவும் அவன் விளையாட்டுத்தான்!" என்று, தம் சம்புடத்திலிருந்த விபூதியை நெற்றியில் துலாம்பரமாக அணிந்துகொண்டார் பரதேசி.

"நாளங்காடிப் பக்கம் போகிறேன், வருகிறீரா?" என்றார் மீண்டும் அச்சந்நியாசி.

"ஆமாம்! அங்கே போனாலும் சாத்தனைப் பார்க்கலாம். அவனிடம் பேசுவதில் அர்த்தமுண்டு...அவனுக்குத் தெரியும் சிருஷ்டி ரகசியம்..."

---

* ஜுபிட்டர் - யவன இதிகாசங்களில் குறிப்பிடப்படும் தேவர்களுக்கு அரசன்—கிரகங்களில் வியாழம்.

"ஓஹோ! அந்தச் சிலை செய்கிற கிழவனையா? உமக்கு ஏற்ற பைத்தியக்காரன்தான்...ஏதேது! அவனே அதோ வருகிறானே!" என்றார் சாமியார்.

பைலார்க்கஸ் எழுந்து அவனை யவன முறையில் வணங்கினான்.

சாத்தனுக்கு எண்பது வயதிருக்கும்; தொண்டு கிழவன். ஆனால் வலிமை குன்றவில்லை; கண்களின் தீட்சண்யம் போகவில்லை. பிரமன் மனித வடிவம் பெற்றது போல் காணப்பட்டான். அவனும் கைகூப்பி வணங்கி, "பைலார்க்கஸ், உன்னைத்தான் தேடிவந்தேன்! வீட்டிற்கு வருகிறாயா? எனது லட்சியம் இன்றுதான் வடிவம் பெற்றது...!" என்று ஒரு குழந்தையின் உற்சாகத்துடன் கூவி யழைத்தான்.

"இவரைத் தெரியுமா? பாண்டிய நாட்டு, உங்கள் பரதேசி...அவர் தத்துவங்களை எல்லாம் என்னுள் திணித்துப் பார்த்தார்......பைலார்க்கஸிடம் முடியுமா?" என்று கேலியாகச் சிரித்தான் யவனன்.

"சுவாமி வரணும், இன்று என் குடிசையில் அமுது படி கழிக்கவேண்டும்," என்று பரதேசியைச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தான் சாத்தன்.

"என்ன, என்ன! நீயுமா?" என்றான் பைலார்க்கஸ்.

"பைலார்க்கஸ்! நீ நிரீசுவர வாதியாக இருப்பதில் எனக்கு வருத்தமில்லை; மற்றவரைக் கேலி செய்யாதே..."

"அதற்குத்தான் நான் பிறந்திருக்கிறேன், அப்பா! எனது வேலை அது......"

"சரி, வாங்கள் போகலாம், சுவாமி வரணும்!" என்று இருவரையும் இரட்டை மாட்டு வண்டிக்கு அழைத்துச் சென்றான் சிற்பி.

வண்டியின் கதி மெதுவாகத்தான் இருக்க முடிந்தது. எதிரே யானைகளும், பொதி கழுதை, பொதி மாடுகளும், துறைமுகத்தை நோக்கிவரும் நேரத்தில், தீப்பந்தம் பிடித்துச் செல்லும் மக்களை விலக்கிக்கொண்டு வண்டி செல்வது கடினந்தான். திடீரென்று அரசாங்க உத்தியோகஸ்தர்களின் ரதம், யானை வந்துவிட்டால் தெருவே தூளிபடும். முரசொலி இருந்து என்ன பயன்? அந்த உப்பு வண்டி ஓட்டிச் செல்லும் பெண், சிறிது தவறினால், ரதத்தின் அடியில்தான்! சாத்தனின் வண்டி அதில் முட்டிக்கொள்ள விருந்தது.

"தெய்வச் செயல்!" என்றான் சாத்தன்.

"உன் சிருஷ்டி சக்தி!" என்றான் பைலார்க்கஸ், வேறு எதையோ நினைத்துக்கொண்டு.

"பைலார்க்கஸ், உனது பேச்சு எனது பெருமையைச் சாந்தி செய்யலாம். நான் எத்தனை நாள் கஷ்டப்பட்டேன்! அது உனக்குத் தெரியுமா? நீ நேற்றுப் பிறந்தவன்...கூத்து!...அதில் எவ்வளவு அர்த்தம்! மனிதனுக்குத் தெரிந்த தெல்லாம், தெரியவேண்டுவ தெல்லாம்........... இந்தப் பிரபஞ்சமே, பைலார்க்கஸ், நீ நினைப்பது போல் வெறும் பாழ் வெளியன்று; அர்த்தமற்ற பேய்க் குழப்பம் அன்று...இருபது வயசிருக்கும்; அப்போ ஒரு தரம் பாண்டிய நாட்டுக்குப் போயிருந்தேன்... சிற்பத்தைப் பார்க்க வேண்டுமானால் கோல்லிப் பாவையைப் பார்க்கவேண்டும். அங்கேதான், ஒரு மறவன், நாகன், ஒரு கூத்தில் அபிநயம் பிடித்தான். அந்தக் கால் வளைவு, அதை அதிலே பிடித்தேன்.........உலகத்தின் அர்த்தத்தை...... ஒவ்வொன்றாக, படிப்படியாக வளர்ந்தது...அந்த மலையத்து நடிகைதான் முகத்தின் சாந்தியை, அந்த அபூர்வமான புன்சிரிப்பை, அர்த்தமற்ற அர்த்தத்தை, — பைலார்க்கஸ்,

உனக்கென்ன! நீ கேலிக்காரன் — உபநிஷத்தில் தேடி யலேந்தேன் .........ஹிமயத்தில் தேடி யலேந்தேன் .........
சாந்தி அந்த இரவு...........என் மனேவி அங்கயற்கண்ணி இறந்த அன்று கிட்டியது.........பிறகு வெண்கலக் கலப் பிற்கு என்ன பரீட்சை! என்ன ஏமாற்றம்!...ஆசைதான் வழி காட்டியது. அந்த ரூப செளந்தரியம் பெறுவதற்கு எத்தனே ஆட்களேத் தேடினேன்!...அதன் ஒரு சாயை...
நீலமலேக் கொடுங்கோலன்—பத்து வருஷங்களுக்கு முன்பு சிரச் சேதம் செய்யப்பட்டானே,—அவனுடைய இடை துவளுதலில் கண்டேன்...தெய்வம் ஒன்று உண்டு...அதன் அர்த்தத்தை என் சிலே உணர்த்த முடிந்தது எனது பூர்வ ஜன்மப் பலன்...இந்தக் கைகளால்...பின்னுலிருந்து ஓர் அர்த்தமுள்ள வஸ்து தூண்டா விட்டால்...அதைச் சாதிக்க முடியும்?''

“நீதான் சாதித்தாய்! நீதான் பிரம்மா! உன் சாதனே தான் அது. சிருஷ்டி! மயங்காதே!—பயப்படாதே! நீதான் பிரம்மா! சிருஷ்டித் தெய்வம்!'' என்று பைலார்க்கஸ் அடுக்கிக்கொண்டே போனுன்.

சாமியார் புன்சிரிப்புடன் வெளியே எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தார்.

வண்டியும் நாளங்காடியை அடைந்து, கீழ்ச் சதுக்கத் தின் வழியாக ஒரு சந்தில் திரும்பி,ஒரு வீட்டின் முன்பு நின்றது.

மூவரும் இறங்கி வாசற்படியில் ஏறினர். ஒரு யவ னப் பெண் வந்து காலேக் கழுவினுள். ஒரு காப்பிரி, மரி யாதையாகக் குனிந்து, கலிங்க வஸ்திரத்தினுல் துடைத் தான்.

“சுவாமி, வரவேண்டும்! பைலார்க்கஸ், இப்படி வா !'' என்று இருவரையும் அழைத்துக்கொண்டு, ஓர் அறைக்குள்

சென்றான் சாத்தன்...அவன் வயதிற்கு அவ்வளவு துடி துடிப்பு ஆச்சரியமானதுதான்!

“மூபாங்கோ, தீபம்!” என்று கத்தினான். அந்தக் காப்பிரி ஒரு கைவிளக்கை எடுத்துக்கொண்டு உள்ளே நுழைந்தான். ஜன்னல் இல்லாத அந்த அறையிலும் காற்று நூலிழை போல் வந்து உள்ளத்தையும் உடலையும் மயக்கியது.

“இங்குகூடவா விளக்கு இல்லை! திரையை ஒதுக்கு! ஸ்வாமி, பைலார்க்கஸ், இதுதான் என் வாழ்க்கை!” என்று திரையை ஒதுக்கினான்.

இருவரும் ஸ்தம்பித்து நின்றனர். அந்த மங்கிய தீப வொளியில், ஒற்றைக் காலைத் தூக்கி நடிக்கும் பாவனையில், ஆள் உயரத்தில் மனித விக்ரகம்! விரிந்த சடையும் அதன் மீது விளங்கும் பிறையும், விரிந்து சின்முத்திரைகளைக் காண்பிக்கும் கைகளும், அந்த அதரத்தில் தோன்றிய அபூர்வப் புன்னகையும், மனத்தில் அலைமேல் அலையாகச் சிந்தனைக் கற்பனைகளைக் கிளப்பின. மூவரும் அந்தச் சிலையேயாயினர். சிலையின் ஒவ்வொரு வளைவிலும், ஒவ்வொரு அங்கத்திலும் என்ன ஜீவத் துடிதுடிப்பு!

சந்நியாசி, தம்மை யறியாமல், பாட ஆரம்பித்தார்...

“பனித்த சடையும், பவளம்போல்
 மேனியும், பால் வெண்ணீறும்,
குனித்த புருவமும், கொவ்வைச்
 செவ்வாயும், குமிண் சிரிப்பும்,
இனித்தங்கசிய எடுத்த பொற்
 பாதமும் காணப் பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே
 இந்த மா நிலத்தே!”

"சுவாமி, அப்படிச் சொல்லக் கூடாது!"

"சாத்தா! அவர் சொல்லுவதுதான் சரி! இது கலையா! இது சிருஷ்டி! இதை என்ன செய்யப் போகிறாய்?"

"அரசன் கோவிலுக்கு...இதென்ன கேள்வி?"

"என்ன! இந்த அசட்டுத்தனத்தை விட்டுத் தள்ளு... அரசனுடைய அந்தப்புர நிர்வாண உருவங்களின் பக்கலில் இதை வைத்தாலும் அர்த்தம் உண்டு...இதை உடைத்துக் குன்றின் மேல் எறிந்தாலும் அந்தத் துண்டுகளுக்கு அர்த்தம் உண்டு; ஜீவன் உண்டு..." என்று வெறி பிடித்தவன் போல் பேசினான் பைலார்க்கஸ்.

"சீ, பைலார்க்கஸ்! உனது வெறி பிடித்த கொள்கைகளுக்கு யவனந்தான் சரி! அகஸ்தூஸா—அந்த உங்கள் சாம்ராட்—அவனுக்குத்தான் சரி உன் பேத்தல்!"

"சாத்தனாரே! உமது இலட்சியத்திற்கு அரசன் கோரிக்கைதான் சரியான முடிவு. இனி ஏன் இந்த ஜைனர்கள் தலை தூக்கப் போகிறார்கள்...!" என்றார் சாமியார்.

"இந்த வெறி பிடித்த மனிதர்களைவிட, அந்தக் கடலுக்கு எவ்வளவோ புத்தியிருக்கிறது..." என்று கோபித்துக்கொண்டு, பைலார்க்கஸ் வெளியேறிவிட்டான்.

## II

அன்றுதான் கும்பாபிஷேகம். சிலையைப் பிரதிஷ்டை செய்த தினம். சோழ தேசத்திலேயே அது ஒரு பெரும் களியாட்டம் என்று கூறவேண்டும். சாத்தனுக்கு இலட்சியம் நிறைவேறிற்று. அன்று பைலார்க்கஸ் தனது குதூகலத்தில் பங்கெடுத்துக்கொள்ள உயிருடன் இல்லையே என்ற வருத்தம் சாத்தனுக்கு அதிகம்.

புதிய கோவிலிலிருந்து வீடு சேரும் பொழுது அர்த்தஜாம மாகிவிட்டது.

வயதின் முதிர்ச்சி அன்றுதான் அவனைச் சிறிது தளர்த்தியது. சோர்ந்து படுத்தான். அயர்ந்துவிட்டான்.....

அப்பா! என்ன ஜோதி! அகண்டமான எல்லையற்ற வெளி! அதிலே சாத்தனின் இலட்சியம், அந்த அர்த்த மற்ற, ஆனால் அர்த்தபுஷ்டி மிகுந்த, ஒரு புன்சிரிப்பு! மெது வான ஹிருதய தாளத்தில் நடனம்! என்ன ஜீவன்! என்ன சிருஷ்டி!

திடீரென்று எல்லாம் இருண்டது! ஒரே கன்னங் கனிந்த இருள்! ஹிருதய சூனியம் போன்ற பாழ் இருட்டு!

பிறகும் ஒளி......இப்பொழுது தங்கத்திலான கோவில்! கண்கள் கூசும்படியான பிரகாசம்!......கதவுகள் மணியோசையுடன் தாமே திறக்கின்றன......உள்ளே அந் தப் பழைய இருள்!

சாத்தன் உள்ளே செல்லுகிறான். இருட்டின் கரு போன்ற இடம். அதில் மங்கிய தீபவொளி தோன்று கிறது! என்ன! இதுவா பழைய சிலை! உயிரில்லை! கவர்ச்சிக் கும் புன்னகை யில்லையே!......எல்லாம் மருள்...மருள்!

அந்தகார வாசலில் சாயைகள் போல் உருவங்கள் குனிந்தபடி வருகின்றன. குனிந்தபடி வணங்குகின்றன.

"எனக்கு மோட்சம்! எனக்கு மோட்சம்!" என்ற எதிரொலிப்பு. அந்தக் கோடிக் கணக்கான சாயைகளின் கூட்டத்தில், ஒருவராவது சிலையை ஏறிட்டுப் பார்க்கவில்லை! இப்படியே தினமும்.........

நாட்கள், வருஷங்கள், நூற்றாண்டுகள் அலைபோல் புரள்கின்றன—அந்த அனந்த கோடி வருஷங்களில் ஒரு சாயையாவது ஏறிட்டுப் பார்க்கவேண்டுமே!—

"எனக்கு மோட்சம்...!" இதுதான் பல்லவி, பாட்டு, எல்லாம்!

சாத்தன் நிற்கிறான்......

எத்தனை யுகங்கள்! அவனுக்கு வெறி பிடிக்கிறது. "உயிரற்ற மோட்சச் சிலையே! உன்னை உடைக்கிறேன்! போடு! உடை! ஐயோ, தெய்வமே! உடைய மாட்டாயா! உடைந்துவிடு! நீ உடைந்து போ! அல்லது உன் மழு என்னைக் கொல்லட்டும். அர்த்தமற்ற கூத்து...!" இடி இடித்த மாதிரி, சிலை புரள்கிறது—சாத்தனது ஆலிங்கனத்தில், அவன் ரத்தத்தில், அது தோய்கிறது......ரத்தம் அவ்வளவு புனிதமா! பழைய புன்னகை!......

**சா**த்தன் திடுக்கிட்டு விழித்தான். வெள்ளி முளைத்து விட்டது. புதிய கோவிலின் சங்கநாதத்துடன் அவனது குழம்பிய உள்ளம் முட்டுகிறது.

"என்ன பேய்க் கனவு, சீ!" என்று விபூதியை நெற்றியில் அணிந்துகொள்ளுகிறான்.

"பைலார்க்கஸ்—பாவம் அவன் இருந்தால்........." சாத்தனின் மனம் சாந்தி பெறவில்லை.



கதை 5

# வேதாளம் சொன்ன கதை

*அதன் பல்லும் முகமும் என்ன கோரம்! முதுகின் மேல், முதுகோடு முதுகாய், தோல் சிறகு ஒட்டிக் கிடந்தது. தலை சுத்த வழுக்கை. இரண்டொரு நரைத்த சடை......*

*"அந்தக் காலத்து மனுஷன் என்றால், எங்கள் ஜாதியைக் கண்டு பயப்படுவான். ரத்தத்தைக் கக்குவான். இந்தக் காலத்து மனுஷனுக்குத்தான் பயப்படக்கூடப் புத்தியு மில்லை, திராணியு மில்லையே!..."*

---

எனக்கு வேட்டையாடுவதிலே அபார பிரேமை. எனக்கு இந்தப் பழக்கம் வருவதற்குக் காரணமே காசித் தேவர்தான். அவர் பொதுவாக நல்ல மனுஷ்யர்; கொஞ்சம் நிலபுலன்களும் உண்டு. வருகிற கலெக்டர்களுக்கு எல்லாம் 'ஷிகாரி' உத்தியோகம் பார்த்துப் பல மெடல்கள் பெற்றவர். சமயாசமயங்களில், சில கலெக்டர்களுக்குப் புலிகளைச் சுட்டுக் கொடுத்து, புகழும் புலித்தோலும் சம்பாதித்துக் கொடுத்திருக்கிறார்.

எனக்கு வேட்டையில் பிரியம் பழக்க வாசனையில் பிறந்த தென்றாலும், மிளா, மான், முயல் இவைகளின் எல்லையைத்தான் எட்டியிருந்தது. ஏனென்றால், நமக்கு நிச்சயமாக இந்த ரகத்தில் அபாயம் கிடையாது அல்லவா?

அன்று நான் காசித் தேவரை அழைத்த பொழுது, தமக்குக் கோர்ட்டில் வேலையிருப்பதாகக் கூறிவிட்டார். அவருடைய துப்பாக்கியை வாங்கிக்கொண்டு, பழைய பாப

நாசத்தை யடைந்தேன். ஏன் கலியாண தீர்த்தம்வரை சென்று வரலாகாது என்ற யோசனை தட்டியது.

முட் புதர் வழியாகவுள்ள குறுக்குப் பாதையாகச் சென்றேன். அப்பொழுது சித்திரை வெய்யில். குத்துச் செடிகளையும், முட் புதர்களையும் தாண்டி, உயர்ந்த மரங்கள் அடர்ந்த பாதைகள் வழியாக, சருகுகள் வழுக்கும் சமயம் துப்பாக்கிக் கட்டையை ஊன்றிக்கொண்டு, சென்றேன். கீழே திரும்பிப் பார்த்தால் பாறைகளும், கண்கூசும் கானலும்! உயர, எங்கோ இடைவெளி மூலமாகத் தூரத்துப் பொதிய மலைச் சிகரம் தெரியும். பஞ்சு மேகங்கள் சிகரத்தைத் தழுவியும் தழுவாமலும் நீல வானில் மிதந்தன.

போகும் பாதையில் வழி நெடுக, சில் வண்டுகளின் காதைத் துளைக்கும் ரீங்கார சப்தம். சமயா சமயங்களில், திடீரென்று பேசிவைத்தாற் போல் ஒலி நிற்கும். அந்த நிசப்தம்-மௌனம்-சிரமமற்று ஒன்றிலிருந்து ஒன்றில் தாவிச் செல்லும் சிந்தனை வண்டின் போக்கைச் 'சக்' கென்று விசை வைத்தது போல் நிறுத்திவிடும். அந்த ஒற்றை விநாடி அமைதியின் பயங்கரத்தை விவரிக்க முடியாது. அப்பொழுதுதான், சப்த கன்னிகைகள், பிரம்ம ராக்ஷஸுகள், இவற்றின்மீது நமக்கு இருக்கும் நம்பிக்கை நம்மைப் பன் மடங்கு கெட்டியாகப் பிடித்துக்கொள்ளும்.

நான் ஏதோ நினைத்துக்கொண்டு சென்றேன். எவ்வளவு தூரம் சென்றேனோ! இந்தச் சில்வண்டு ரீங்கார அமைதிதான், என்னைச் சட்டென்று நிறுத்தியது. எந்த இடத்திலோ வழி தவறியிருக்கவேண்டும். நான் நின்ற இடத்திற்கு இதுவரை நான் வந்ததில்லை. இருந்தாலும் அவ்வளவு இலகுவில் பாபநாசம் காடுகளில் நான் வழி தவறிவிடக் கூடியவனல்லன்; சிறு பிராயம் முதலே இப் பகுதிகளில் அலைந்து பழக்கம்.

'பார்ப்போம், குடி முழுகிவிடவில்லை!' என்று கையில் இருந்த கடிகாரத்தைப் பார்த்தேன். மணி பனிரண்டு. உச்சி நேரம். கடிகாரம் பசியை எழுப்பியது. தண்ணீரையாவது குடித்துப் பசியாறலாம் என்று மேலும் கீழுமாகச் சுற்றிப் பார்த்தேன்.

நான் இருந்த இடத்திற்குக் கீழே, பாறைச் சரிவில் ஒரு சுனை; தூரத்துச் சூரியனின் பளபளப்பு அதில் ஒரு கணம் மின்னியது. அங்கு இறங்கித் தாகத்தைத் தீர்த்துக் கொண்டு, ஆகவேண்டிய காரியத்தைப் பார்க்கலாம், என்று நினைத்தேன்.

மலைச்சரிவில் நேரே செங்குத்தாக இறங்க வழியில்லை. சிறிது சுற்றி இரண்டு மைல் நடந்து அந்தச் சுனையருகில் வந்து சேர்ந்தேன் கோபுரம் போல் குவிந்து சரிந்த இரு பாறைகளுக் கிடையில் உள்ள ஒரு குகையில் சுனை. அதில் பெருக்கெடுக்கும் நீர் வழிந்து ஒரு சிறிய தடாகமாக முன் பக்கத்தை நிறைத்தது. தரை தெரியும்படியாக அவ்வளவு தெளிவாக இருந்தாலும், குறைந்தது நாற்பதடி ஆழமாவது இருக்கும். உள்ளே சிறு மீன்களும், கறுப்புத் தவளைக் குஞ்சுகளும் பளிச் பளிச்சென்று மின்னி ஓடின.

பாறைச் சரிவில் நின்று இரு கைகளாலும் அள்ளி அள்ளித் தண்ணீரைக் குடித்தேன். அளவுக்கு மிஞ்சிக் குடித்ததினால் சிறிது சோர்வு. வலிக்கும் கால்களைத் தண்ணீரில் முழங்கால் அளவுக்கு விட்டுக்கொண்டு உட்கார்ந்து விட்டேன். அப்பா, என்ன சுகம்!

பழையபடி எந்த வழியாகத் திரும்புவது என்பது பெரிய பிரச்னையாயிற்று. உட்கார்ந்து சுற்றுமுற்றும் பார்த்துக்கொண்டே யோசித்தேன்.

சுனைக்குப் பக்கத்தில், பாறைச் சரிவில், ஓர் உயர்ந்த ஆலமரம். நான் அத்தனை நேரம் அதைக் கவனிக்கவில்லை.

அதன் ஓர் உச்சி நான் சிறிது நேரத்திற்குமுன் நின்றிருந்த உயர்ந்த மேட்டை எட்டியது. 'எத்தனை வயதிருக்கும்? பழங் கால விருட்சம்!' என்று எண்ணமிட்டுக்கொண்டே அண்ணாந்து பார்த்தேன்.

அந்த ஓரத்து உச்சிக் கிளையில் என்ன தொங்கிக் கொண்டிருக்கிறது? பழந்தின்னி வௌவால்! நரித் தலையும், தோல் இறகுகளும், பிரம்மாண்டமாக இருக்கும். காசித் தேவர் இந்த ஜாதி வௌவால்களைப் பற்றிச் சொல்லி யிருக்கிறார். கிடைப்பதே அருமையாம்! மேலும் அவருக் குப் பிரியமான மாமிசமாம்.

'அதை ஒரு கை பார்ப்போமே!' என்று பாறையில் வைத்திருந்த துப்பாக்கியை எடுத்து, அதை நோக்கிக் குறி வைத்தேன்.

"அடேடே! சுட்டுவிடாதே! நில், நில்!" என்று, பயத் தில் பிளிறும் மனிதக் குரல் கேட்டுத் திடுக்கிட்டேன்.

"அடேடே! நில்! நான் வௌவாலில்லை! வேதாளம்! சுட்டுவிடாதே யப்பா, தயவு செய்து!" என்று மறுபடியும் கூவியது அக்குரல்.

என் கையிலிருந்த துப்பாக்கி நழுவிச் சுனையுள் விழுந்துவிட்டது.

வேதாளம் என்றால் யாருக்குத்தான் பயமிருக்காது? அதிலும் எனக்கு!

வேதாளப் பயத்தில், துப்பாக்கியையும் சுனைக்கு அர்ப் பணம் பண்ணியாகிவிட்டது. காசித் தேவருக்கு என்ன பதில் சொல்லுவது என்றுதான் புரியவில்லை.

இச் சந்தர்ப்பத்தில், வேதாளம் ஒரு அந்தர் அடித் துச் சிறகை விரித்துப் பறந்து வந்து, எனக் கெதிரில் உட் கார்ந்துகொண்டது. அதன் பல்லும் முகமும், என்ன கோரம்! முதுகின் மேல், முதுகோடு முதுகாய், அது சிறிது

முன் பறந்துவர உதவிய, தோல் சிறகு ஒட்டிக் கிடந்தது. தலை சுத்த வழுக்கை;கபால ஓரத்தில் இரண்டொரு நரைத்த சடைகள்; கை கால் விரல்களில் நாட்பட வளர்ந்து பழுப் பேறிய நகங்கள்.

அது பல்லைப் பல்லைக் காண்பித்துக்கொண்டு, என்னைப் பார்த்த வண்ணம், குரங்கு மாதிரிக் குந்தி உட்கார்ந்து கொண்டிருந்தது. அதன் ஆழமான கண்களில், கிணற்று ஜலம் மின்னுவது மாதிரி, அதன் கண்மணிகள் மின்னின.

கொஞ்சம் மரியாதையாகப் பேசி, தட்டிக் கழித்து விட்டு அதை ஒழித்துவிட வேண்டும் என்பதுதான் என் ஒரே ஆசை.

தட்டுக்கெட்டாற் போல, "நீர் ஏன் அப்படித் தலை கீழாகத் தொங்கிக்கொண் டிருந்தீர்?" என்று கொஞ்சம் மரியாதைப் பன்மையிலேயே விசாரித்தேன்.

"நான் வேதாளம்! நாங்கள் தலை கீழாகத்தான் தொங்கவேண்டும்!"

"வௌவால்களல்லவா அப்படித் தொங்கவேண்டும்?" என்றேன். நான் இது வரையில் ஒரு வேதாளத்தையாவது நேரில் சந்தித்தது கிடையாதல்லவா!

"வௌவால்களும் அப்படித்தான் என்று சொல்லும். தலைகீழாகத் தொங்குவது எங்களது அசைக்க முடியாத உரிமை. எங்கள் ஜீவனுள்ள மட்டிலும் அதற்காகப் போராடுவோம்!" என்று கொஞ்சம் ஆவேசத்துடன், தலையை ஆட்டிப் பேசியது, அந்த வேதாளம்.

அது தலையை ஆட்டிய வேகத்தில் அதன் கோரப் பற்கள் இரண்டும் கீழே விழுந்துவிட்டன. வேதாளம், அவற்றை உடனே எடுத்துச் சுனைத் தண்ணீரில் கழுவி விட்டு, மறுபடியும் ஈற்றில் ஒட்டவைத்துக்கொண்டது.

இதைக் கண்டதும் எனக்குச் சிரிப்பு வந்துவிட்டது. களுக்கென்று சிரித்துவிட்டேன்..

"ஏதேது! என்னைக் கண்டால் உமக்குப் பயம் தட்டவில்லையா! ஜாக்கிரதை! மனிதர் எல்லாரும் என்னைக் கண்டால் பயப்படவேண்டும் என்பது சம்பிரதாயம்!—நீர் மனிதர்தானே!" என்று கேட்டது.

இந்த வேதாளத்தின் விசித்திர சந்தேகங்கள், அதன் மீது எனக்கு அனுதாபத்தை உண்டுபண்ணின.

"உமக்கு நான் மனிதனு அல்லவா என்றுகூட ஏன் தெரியவில்லை? நான் மனிதன்தான்!" என்று சொன்னேன்.

"எனக்குப் பார்வை கொஞ்சம் மங்கல், அதனுல் தான். பார்வை மங்கக் காரணம் என்ன தெரியுமா? நான் பிறந்ததே திரேதா யுகம்!" என்று தனது வயதை அறிவித்துவிட்டு, "அதெல்லாம் அந்தக் காலத்திலே!—இந்தக் காலத்து மனுஷனுக்குத்தான் பயப்படக்கூடப் புத்தியும் இல்லை, திராணியும் இல்லையே!" என்று, மனித வர்க்கத்தின் தற்போதைய பலவீனத்தைப்பற்றித் தன் அபிப்பிராயத்தை எடுத்துக் காட்டியது.

"அட பாபமே!" என்று, நான் எனது அனுதாபத்தைத் தெரிவித்துக்கொண்டேன்.

"அந்தப் பாபத்தாலேதான், ஐயா, நான் சைவனுனது! அந்தக் காலத்து மனுஷன் என்றுல், எங்கள் ஜாதியைக் கண்டு பயப்படுவான், ரத்தத்தைக் கக்குவான்! இப்போது தான் உங்களுக்குக் கக்குவதற்குக்கூட ரத்தம் இல்லையே! அதனுலேதான், அதோ இருக்குப் பாரும், தேன்கூடு!—அதிலிருக்கும் தேனைச் சாப்பிட்டுக்கொண்டு, சென்ற ஒரு நூறு வருஷமாக ஜீவித்து வருகிறேன்!"

"தினை மாவும் கொஞ்சம் சேர்த்துக் கொள்ளக் கூடாதோ? உடம்புக்கு நல்லதாச்சே!" என்றேன்.

"இந்தக் காலத்திலே அது எங்கய்யா கிடைக்கிறது? முந்திக் காலத்திலேன்னு எல்லாரும் பயப்பட்டா, நாங்க நினைக்கிறதெ குடுத்தா. இந்தக் காலத்திலே, எதுக்கெடுத்தாலும் துட்டு இல்லாமல் காரியம் நடக்கமாட்டேன் என்கிறதே!" என்றது.

"நீர் பூர்வ ஜன்மத்தில்... . ..........."

"பூர்வாசிரமத்தில் என்று சொல்லுங்காணும்!" என்று இரைந்துகொண்டு, என்னை அடிக்க வேகமாகக் கையை ஓங்கியது.

திடீரென்று ஓங்கியதால், அதன் கை 'மளுக்' என்ற சப்தத்துடன் சுளுக்கிக்கொண்டது. இந்தக் கிழ வேதாளத்தின்மீது நிஜமாகவே எனக்கு அன்பு தோன்றவும், அதன் கையைப் பிடித்து உதறிச் சுளுக்கைத் தடவி விட்டுக்கொண்டே, "வயசு காலத்திலே இப்படி உடம்பை அலட்டிக்கொள்ளலாமா? நீர் பூர்வாசிரமத்தில் பிராமணன்தானே! அப்படியானால் தர்ப்பணம், சிரார்த்தம் செய்துவைத்துப் பிழைக்கலாமே!" என்று ஆலோசனை சொன்னேன்.

"நீர் சொல்லுகிறதும் நல்ல யோசனைதான்; ஆனால், எனக்கு வாதமாச்சே! குளிர்ந்த ஜலத்தில் குளித்தால் உடம்புக்கு ஒத்துக்கொள்ளாதே! என்ன செய்யலாம்?"

"அப்படியானால் உடம்புக்கு ஏதாவது டானிக் வாங்கிச் சாப்பிட வேண்டும். உங்கள் வேதாள உலகத்தில் வைத்தியர்கள் கிடையாதா?"

"எங்களுக்குத்தான் சாவே கிடையாது என்று பிரம்மா எழுதிவைத்துவிட்டாரே! அதனாலேதான் வைத்திய சாஸ்திரத்தை நாங்கள் கற்றுக்கொள்ளவில்லை!"

"சிட்டுக் குருவி லேகியம் சாப்பிடும்; உடம்புக்கு நல்லது!"

"மறுபடியும் மறுபடியும் இப்படிச் சொல்லுகிறீரே! நான் சைவனுகித்தான் குடலே பலவீனமாகிவிட்டதே! வேறெ ஏதாவது மூலிகைச் சத்து இருந்தா சொல்லும்!"

"அப்படியானால் ஜஸ்டிஸ் சோமேசத்திடம் கேட்டுச் சொல்லுகிறேன். எனக்கு நேரமும் ஆகிறது; மேலும் இந்தக் காட்டிலே வழியும் தவறிவிட்டது!" என்று சொல்லி எழுந்தேன்.

"நான் வேண்டுமானால் வழி காண்பிக்கிறேன் வாரும்!" என்று எழுந்தது வேதாளம்.

"துப்பாக்கியை எடுக்க வேண்டுமே?" என்றேன்.

"உமக்கு ஞாபகப் பிசகு அதிகமோ! தண்ணீரில் கால் பட்டாலே எனக்கு வாத ஜுரம் கண்டுவிடுமே! இருந்தாலும் நீர் நல்லவராக இருக்கிறீர், உமக்காக...", என்று தண்ணீருக்குள் அந்தரடித்து, துப்பாக்கியை எடுத்துக் கொண்டு வந்தது.

கரையில் அதற்கு நிற்கக்கூடச் சக்தியில்லை. ஒட்டைப் பல்லும், கை கால்களும் வெடவெடவென்று ஆடின.

என் மேல்வேஷ்டியைக் கொடுத்துப் போர்த்திக்கொள்ளும்படி சொன்னேன்.

போகும் வழியில், "அந்தக் காலத்து வளமுறை எப்படி?" என்று பேச்சுக் கொடுத்தேன்.

முன்னே சென்ற வேதாளம், நின்று திரும்பி, "எனக்கு ராமன் கிருஷ்ணன் எல்லாரையும் தெரியும். அவாள்கூடப் பயந்துண்டுதான் இருந்தா. எனக்கு அவாளைச் சின்னப் பையனுக இருக்கும் போதே தெரியும். அவாள் எல்லாம் தைரியசாலிகள்தான். ராக்ஷஸன் என்றால் தொம்சம் பண்ணிடுவாள். ஆனால், எங்களைக் கண்டா, எப்போதுமே நல்லதனமா பயப்படுவா. அந்தக் காலத்து மனுஷாள்தான் என்னங்கிறீர்? தைரியத்திலே அசகாய

சூரர்கள்தான். ஆனால், அவாளுக்கு மட்டுமரியாதை எல்லாம் தெரியும். முன்னோர்கள் சொன்னபடி, தெய்வம், பேய், பிசாசு, பூசாரி என்றால், ஒழுங்காகப் பயப்படுவாள். உங்கள் சுந்தரமூர்த்தி நாயனார்தான் என்ன? அவரைக் கூட எத்தனை தரம் பயங்காட்டி யிருக்கேன் தெரியுமா? அந்தக் காலத்திலேதான் எங்களுக்கு முதல்லே பிடிச்சது வினை. எங்கையோ வடக்கே இருந்து சமணன் என்றும், புத்தன் என்றும், கூட்டம் கூட்டமாக வந்தாள். அந்த முட்டாள் பயல்கள், 'கொல்லப்படாது! பாவம் ஜீவம்' என்று சொல்லி, ஆட்களைத் தங்கள் கட்சிக்குத் திருப்பி விட்டார்கள். அந்தக் காலத்திலே யிருந்துதான், நம்ம பரமசிவன் முதற்கொண்டு எல்லாத் தேவாளும் சைவராகி விட்டார்கள். காலம் அவாளை அப்படி ஆட்டி வைத்தது. முன்னே திரிபுரத்தை எரித்தாரே, இந்தச் சிவன், இப்பொ அவராலே அந்தக் குருவிக் கூட்டைக்கூட எரிக்க முடியாது!'' என்றது.

இச்சந்தர்ப்பத்தில் ஒரு சிறு முயல், அதன் காலில் இடறிப் பாய்ந்து, பக்கத்துப் புதரைப் பார்த்துத் தாவியது.

"ஐயோ!'' என்று கூவிக்கொண்டு, வேதாளம் வந்து என்னைக் கட்டிப் பிடித்துக்கொண்டது.

ஓடியது ஒரு முயல்தான் என்று சொல்லி, அதன் பயத்தைத் தெளிவித்தேன்.

"நாங்கள் தலை கீழாகத் தொங்கித் தொங்கிக் கால்களெல்லாம் பிரயோஜனமில்லாமல் போய்விட்டன. இந்தத் தலைகீழ் ராஜ்யம் வந்ததும் அந்தச் சமணர்கள் காலத்தில் தான்!'' என்றது.

"எப்படி?'' என்றேன்.

"அவர்கள் எல்லாம் மரத்திலே உறியைக் கட்டி, அதிலே உட்கார்ந்துகொண்டார்கள். ஜனங்களெல்லாரும்

அந்தப் பக்கம் திரும்ப ஆரம்பிச்சா! நான்தான் அப்போ அதற்கு இந்த வழி பண்ணி, மறுபடியும் எங்களைப் பார்த்துப் பயப்படும்படி செஞ்சேன்!'' என்று அது கொஞ்சம் பெருமையடித்துக்கொண்டது.

பேசிப் பேசி அதற்குள் பழைய பாபநாசத்திற்கு வந்துவிட்டோம்.

மண்டபத்தருகில் நின்ற ஒரு முருங்கை மரத்தைப் பார்த்ததும், எனக்கு ஒரு யோசனை தட்டியது.

"உமக்கு உச்சினிபுரத்து வேதாளத்தைத் தெரியுமா?'' என்றேன்.

"அந்த விக்கிரமாதித்தப் பயலைத் தூக்கிக்கொண்டு அலைந்தாரே, அவரா! அவர் என் அண்ணு பிள்ளை!'' என்றது.

"இதோ ஒரு முருங்கை மரம் இருக்கிறதே, இதில் ஏறி உட்கார்ந்துகொள்ளும்! நான் வேண்டுமானால் தினம் இங்கு வருகிறேன். உம்முடைய பழைய கதை எல்லாம் சொல்லுமே!'' என்றேன்.

"ஓஹோ! அப்படியா சேதி? எங்க அண்ணு சுத்த அசடு. ஏமாந்து சொல்லிக்கொண்டு கிடந்தான். நான் சொல்லவேண்டுமானால், என்ன தெரியுமா? உமக்குக் கிடைக்கிற லாபத்தில் சரி பாதி எனக்குக் கொடுக்க வேண்டும். அப்படி ஸ்டாம்பு ஒட்டிப் பத்திரம் எழுதினால் தான் மேலே பேசலாம்!'' என்றது.

"இப்பொ எல்லாம் புஸ்தக வியாபாரம் கொஞ்சம் மந்தம். நீர் அப்படியெல்லாம் கேட்கக் கூடாது!''

"அப்படியானல் ஒரு கோவிலாவது கட்டி வையும்,'' என்றது.

வேதாளப் பொருளாதார சாஸ்திரத்தில், கோவில் அவ்வளவு லேசாகக் கட்டிவிடலாம் என்றால், மனுஷ

உலகத்தில் அப்படி இல்லையே! "பிறகு யோசித்துக் கொள்ளலாம்!" என்று நினைத்துக்கொண்டு எழுந்து, தவிடுள்ள அரிசி, 'விட்டமின் டி' எல்லாம் சேர்த்துச் சாப்பிட்டு உடம்பைத் தேற்றிக்கொள்ளும்படி அதற்கு ஆலோசனை கூறிவிட்டு, காசித் தேவர் வீட்டை நோக்கி நடந்தேன். நான் எப்படிச் சத்தியம் செய்தாலும், அவர் என்னை நம்பப் போகிறாரா? எங்கோ படுத்துத் தூங்கினேன் என்று தான் சொல்லுவார்.

நான் திரும்பிப் பார்க்கையில், அந்த வேதாளம் வௌவால் மாதிரிப் பறந்து சென்று, ஓரத்து மலைச் சரிவில் மறைந்துவிட்டது!



கதை 6

# பிரம்ம ராக்ஷஸ்

*மரணத்தினின்று தப்பியோட வழி யுண்டா என்று அலைகிறார்கள் மனிதர்கள். அவன் — பிரம்ம ராக்ஷஸ் வடிவத்திலிருந்து விடுபட—மரணம் கிட்டுமோ என்று ஏங்கினான். அவனுடைய உதவிக்கு வந்தான் நன்னய பட்டன். பெற்ற குழந்தையின் உயிரை அவனுக்குக் கொடுக்கவும் முன் வந்தான். பலன் என்ன ?*

---

நித்தியத்துவத்திற்கு ஆசைப்பட்டு, இடர்ப் பட்டு, அழிவுற்றவர்களின் கடைசி எச்சரிக்கையாக இருந்தது, அவன் கதை.

அவன் பொன்னை விரும்பவில்லை, பொருளை விரும்ப வில்லை, போகத்தை விரும்பவில்லை. மனக் கோடியில் உரு வம் பெறாது, வைகறை போல் எழும் ஆசை எண்ணங் களைத் துருவி யறியவே ஆசைப்பட்டான். மரணத்தால் முற் றுப்புள்ளி பெறாது, ஆராய்ச்சியின் நுனிக் கொழுந்து வளரவேண்டு மென்ற நினைப்பினால்,அவன் ஏற்றுக்கொண்ட சிறுமை அது. அன்று முதல்,-ஆம், அது நடந்து வெகுகால மாகிவிட்டது-இன்று வரை, ஆசைகள் உந்த, அழிவு அவனைக் கைவிட, மரணம் என்ற விழிப்பற்ற ஒரு சொப் பனவஸ்தை போல, மூல காரணங்களாலும் நியதிகளாலும் ஏற்றுண்டு, ஜடத்திற்கும் அதற்கு வேறான பொருளுக்கும் உண்டான இடை வெளியில், அவன் அலைந்து திரிந்தான். ஆசை அவியவில்லை; ஆராய்ச்சி அவிந்து மடிந்து, நியதியை

யிழந்து, விபரீதத்தில் தீவிர கதியில் சென்றது. அவன் இப்பொழுது வேண்டுவது, முன்பு விரும்பித் துருவிய இடைவெளி ஆராய்ச்சியன்று; சாதாரணமான மரணம். உடல் இருந்தால் அல்லவா மரணம் கிட்டும்! ஜடமற்ற இத் திரிசங்கு நிலையில், சமூகத்தில் அடிபட்டு நசுங்கியவர்கள் ஆசைப்படும் மோட்ச சாம்ராஜ்யம் போல, மரண லட்சியம் அவனுக்கு நெடுந் தூரமாயிற்று.

அவன் அப்பொழுது நின்ற இடம், அப்புறத்து அண்டமன்று; கிரக கோளங்கள் சுழலும் வெளியன்று; அது பூலோகந்தான். அவனுடைய வாசஸ்தலமா யிருந்த குகையின் பலிபீடத்தில், அவனுடைய ஆசையின் நிலைக் களமான பழைய தேகம்,துகள்களாகச் சிதைவுபட்டுக் கிடந்தது. ஜடத்திலே வெறும் ஆகர்ஷண சக்தி போல், சூட்சுமமான உருவற்ற கம்பி போல், பார்வைக்குத் தென்படாத ஒளி ரேகை போல், அவ்வுடல் அவனுக்குக் காட்சியளித்துவந்தது. உலகத்தைப் பதனமாகப் பாதுகாக்க அமைந்த ஏழு சஞ்சி போன்ற லோகங்களிலே, எங்கு வேண்டுமானாலும் அவன் அலையலாம். ஆனால், அவற்றைத் தாண்டி இடை வெளியிலே செல்ல அவனுக்குச் சக்தியில்லை, நியதியில்லை.

அவன் அப்பொழுது நின்ற இடம் ஜடத்தின் சூட்சும ரூபங்களான வாயுக்களும் செல்லக் கூடாத, வெறும் சக்திகளே முட்டி மோதிச் சஞ்சரிக்கின்ற, உலக கோளத்தின் மிகவும் சூட்சுமமான ஏழாவது சஞ்சி.

அவ்விடத்திலே அவனுக்கு வெகு நேரம் நிற்க முடியாது. ஆனால், சூட்சும உடலின் இயற்கையால், அடிக்கடி அங்கு உந்தித் தள்ளப்படுவான். சக்திகள், பிரளயம் போலக் கோஷித்து, உருண்டு புரண்டு, சிறிய வித்துப் போல் நடு மையத்தில் கிடக்கும் ஜடத்திற்கு உயிர் அணுக்களை

மிகுந்த வேகத்தில் தள்ளும். அவ்விடத்திலே, சக்தி அலைகள், நினைவு பிறந்து மடியும் கால எல்லைக்குள், இடை வழித் தேகத்தைக் குழப்பி நசுக்கி, புதிய சக்திகளை அவனது சூட்சும தேகத்தில் ஊட்டி, உள்ளே பூமியை நோக்கித் தள்ளி விடும். புதிய சக்தி யூட்டப்பட்ட அவனது சரீரம், ஜட தாதுக்கள் பாசி போல் உற்பத்தியாகி உரம்பெற்று, கீழ் நோக்கி யிறங்கும் இடைச் சஞ்சிகளில் நின்று, செக்கச் செவேலென்று எங்கும் பரந்து, நினைவின் எல்லைக் கோடாகக் கிடக்கும் கிரக கோளங்களின் வானப் பாதைகளை நோக்கும்.

அவனது உருவம் சூட்சும உருவம். அதாவது ஆசையின் வடிவத்தை ஏற்கும் உருவம். அவன் தனது பழைய ஜீவியத்தில் எந்த அம்சத்தைப் பற்றி நினைக்கிறானோ, அச் சமயத்தில் முன் அவனது பூத உடல் பெற்றிருந்த வடிவத்தைச் சூட்சும தேகம் இப்பொழுது பெறும். பூதவுடலிலே, பார்ப்பதும், கேட்பதும், உண்பதும், வெளிப்படுத்துவதும் முதலிய காரியங்களைத் தனிப்பட்ட கருவிகள் செய்தன. இப்பொழுது அவனுக்கு உடல் முழுவதுமே வாய்.

அவன் பார்வைகள் வெளியே எட்டினாலும், ஆசைகள் பூமியை நோக்கி இழுத்தன. ஆசையின் ரேகைகள் அவனைப் பலிபீடத்தை நோக்கி யிழுத்தன !

அவன் அன்று பூதவுடலை நீங்கி வெளிப்பட்டதும், இவ்வுலகத்தைப் பாதுகாக்கும் ஏழு சஞ்சிகள் போல், உள்ளிருக்கும் வஸ்துவின் விடுதலைக்குத் தடையாக ஏழு இருப்பதையும் உணர்ந்தான். ஒன்றைக் கடந்தால், மற்ற ஆறையும் இறுகப் பிடித்தது போல் ஒன்ற வைத்து, ஏழையும் நீக்கிப் பாயவேண்டும். இப்பொழுது ஒன்றைவிட்டுப் பிரிந்ததினால், போக்கின்படியாகக் கிடைக்கும் பூரணத்தால்

விழிப்பையும் இழந்து, சொப்பனவஸ்தை போன்ற இந்த இடை நிலையில் கட்டுப்பட வேண்டியதாயிற்று.

ஆசைகள் மெதுவாக மரணத்தை நோக்கித் திரும்பின. பழைய நிலைகள், படிப்படியாகப் பரிணமித்து, அவனையே விழுங்கிப் பூமியை நோக்கித் தள்ளின.

பலி பீடத்தில் வந்து விழுந்தான். அவனே பிரம்ம ராக்ஷஸ்!

## II

குறிஞ்சிப்பாடியின் பக்கத்திலே சூரங்காடு பெரிய மலைப் பிரதேசம். காலத் தேவனின் தங்கைகள் போன்ற பாறைகள், இயற்கையின் செழிப்பான கானகம் என்ற அந்தப்புரத்திலே, மறைந்து கிடந்தன.

சூரங்காடு, மனிதர்கள் பலத்திற்கு நிலைக்களமாக விளங்குவது. அங்கே இருப்பது என்னவென்று ஒருவருக்கும் தெரியாது.

குறிஞ்சிப்பாடியின் சமூகத்தின் திவலை ஒன்று, எப்பொழுதோ நெடுங்காலத்திற்கு முன்பு, அதில் சென்றது,—திரும்பவில்லை; குறிஞ்சிப்பாடியினர் பிறகு அத்திசையில் செல்வதில்லை.

சூரங்காட்டில் கொடிய மிருகங்கள் கிடையா. விஷக் கிருமிகள் கிடையா. அது நிசப்தமும், இயற்கைத் தேவியும் கலக்குமிடமாம். சப்த கன்னிகைகள் திரிவார்களாம். மனிதர்கள் போனால் திரும்ப மாட்டார்கள். இது குறிஞ்சிப்பாடியினரின் எழுதாக் கிளவி.

இந்த வேத வித்திற்குக் குறிஞ்சிப்பாடியில் தோன்றும் மகான்கள் அடிக்கடி பாஷ்யம் விரித்து அதை ஒரு பெரும் சமுதாயக் கட்டுப்பாடாக்கினர்.

அக்காலத்திலே, குறிஞ்சிப்பாடியின் சமூகத்திலே தோன்றி, அதன் வளர்ச்சிக்கும் பிரபலத்திற்கும் பாடுபட்டவன் நன்னய பட்டன் என்ற வாலிபன்.

குறிஞ்சிப்பாடியில் குறுகிய ஆசைகளைப் பலப்படுத்தி வளர்ப்பதே அவனுக்கு ஒரு மகத்தான சேவையாகப் பட்டது. போரிலே மரணத்தை நேருக்கு நேராகப் பார்த்தவன். குறிஞ்சிப்பாடிச் சமூகத்தின் விஷப் பூச்சிகளைச் சித்திர வதை செய்து, மரணக் கதவை மெதுவாகத் திறந்து,அதன் உளைச்சலிலே பயத்தைப் போக்கியவன். அவனுக்கு மரணம் பயத்தைத் தரவில்லை.

விதியின் விசித்திர கதிக்கு அளவுகோல் உண்டா? நன்னய பட்டனுக்கு மரணத்தின் பயத்தை அறிவிக்க மூல சக்திகள் நினைத்தன போலும்.

அவன் மனைவி பெண் குழந்தையைப் பெற்றுக் கொடுத்து அந்த உளைப்பிலே உயிர் நீத்தாள்.

அன்று, நன்னய பட்டன், மரணத்திற்கு எத்தனையோ ரூபங்கள் உண்டு என்று அறிந்தான்.

அதற்கப்புறம் மூன்று வருஷங்கள், வெங்காயச் சருகு போல் உதிர்ந்துவிட்டன. அந்த மூன்று வருஷங்களும், நன்னய பட்டனுக்கு, சமூகத்தின் குறுகிய கால அளவு கோலைக் கடந்து வேறு உலகத்தில் யாத்திரை செய்வதாயிருந்தன. அவன் சக்திகளின் பௌருஷத்தின் எல்லையை நாடினான்.

ஒரு நாள், அந்தி மயங்கும் சமயம், குறிஞ்சிப்பாடி இருவரை இழந்தது. காலம் என்ற அரங்கில் சரித்திரம் மீண்டும் ஒரு முறை பழையபடி நடித்தது.

நன்னய பட்டன் திசை யறியாமல் சென்றான். பசி யறியாமற் சென்றான். கைக்குழந்தையின்—மூன்று வயதுக் குழந்தையின்—சிறு தேவைகள், அவனுக்குப் பூத உடம்பின்

தேவைகளை இடித்துக் கூறும் அளவுகோலாயின. அதன் பசியைப் சாந்தி செய்யும் பொறுப்பு இல்லாவிட்டால், அவனிடம் பசியின் ஆதிக்கம் தலைகாட்டி யிராது.

அவன் அன்று ஆசைப்பட்டது எல்லாம் மரணத்தி னின்றும் தப்புவதற்கு வழி.

ஏன் மரணத்தினின்றும் தப்பவேண்டு மென்று அவ னிடம் யாராவது கேட்டிருந்தால், அவனால் காரணம் கூறி யிருக்க முடியாது. ஆனால், பயம் என்று ஒப்புக்கொண் டிருக்க மாட்டான். மரணத்தை வெல்வதே—காலத்தின் போக்கைத் தடை செய்வதே — ஆண்மை என்று பதில் சொல்லி யிருப்பான். பேதை! மரணம் என்பது இல்லா விடில் நரகம் என்பது எப்படித் தெரியும்!

அப்பொழுது அவனது சிறு மனம், குறிஞ்சிப்பாடிக்கு மேல் விரிந்து, அகில லோகத்தையும் கட்டி ஆள்வதற்கான மூல சக்திகளின் சூட்சுமக் கயிற்றைக் கைக்குள் அடக்க வேண்டும் என்ற அறிவுகெட்ட ஆசையால் கட்டுண்டது.

இருண்டு நெடு நேரமாகியும் நடந்து கொண்டே யிருந் தான். கையில் குழந்தை, ஆசையற்று, ஆனால் ஆசையின் வித்துக்களான தேவையில் மட்டும் நிலைக்கும் மனநிலையில் கட்டுண்டு, நித்தியத்துவத்திற்கும், மரணப் பாதையின் சுழ லுக்கும் மத்தியிலுள்ள பிளவுக் கோட்டின் எல்லை வெளி யான இடைவெளியில் நின்று உறங்கியது.

குறிஞ்சிப்பாடியின் வேதம் பொய்யாகும் நிலையை நன் னய பட்டன் நிதரிசனமாகக் கண்டான்.

நெடு நேரம் நடந்த களைப்பு. இருளின் கருவைப் போன்ற ஒரு குகை வாயிலில் சிறிது உட்கார வைத்தது.

உறக்கத்தை அறியாத கண்கள் குகைக்குள் துருவின.

அந்தக் குகைதான் பிரம்ம ராக்ஷஸாகத் தவிக்கும் ஒரு பழைய மனிதனுடைய ஆசையின் பயங்கரமான பலி பீடம்.

வெகு காலமாக அப்பாதையிலே யாரும் வரவில்லை.

மனித தைரியத்தின் உச்ச ஸ்தானமாக இருந்த அந்தக் குகையின் வாசலில், நன்னய பட்டன் உட்கார்ந்ததும், குழந்தை வீரிட்டு அலறத் தொடங்கியது. குழந்தையைத் தேற்றிப் பார்த்தான்; எவ்வளவோ தந்திரங்களைச் செய்து பார்த்தான். குழந்தையின் அலறல் நிற்கவில்லை.

அதைத் தோளில் சாத்திக்கொண்டு, முதுகைத் தட்டிக் கொடுத்த வண்ணம் எழுந்து உலாவி அங்குமிங்குமாக நடக்கத் தொடங்கினான். குகையின் வாசலை விட்டு அகன்று செல்லும் பொழுது, குழந்தையின் அழுகை படிப் படியாக ஓய்ந்தது. ஆனால், திரும்பிக் குகையை அணுகியதுதான் தாமதம், குழந்தையின் குரல் உச்ச ஸ்தாயியை எட்டியது.

இரண்டு மூன்று முறை இப்படிப் பரீட்சித்த பிறகு, இந்த அதிசயமான செயல், குகையில் என்ன இருக்கிறது என்று பார்க்க அவனுள் ஆசையை எழுப்பியது.

மரத்தடியில் சற்று நேரம் இருந்து குழந்தையை உறங்க வைத்துவிட்டு, எழுந்து, குகையை நோக்கி நடக்கலானான்.

காற்றற்று, அசைவில்லாது நிற்கும் மரங்களிடையே, ஒரு துயரம் பொதிந்த பெருமூச்சு எழுந்தது.

சற்று நின்று, சுற்று முற்றும் கவனித்தான். அவனைத் தவிர வேறு யார் இருக்கப் போகிறார்கள் ?

குகை வாயிலின் பக்கம் போனதும், தேக மாத்யந்தமும் காரணமற்றுக் குலுங்கியது. மயிர்க் கால்கள் திடீரென்று குளிர்ந்த காற்றை ஏற்றதுபோல் விறைத்து நின்றன.

நன்னய பட்டன் உள்ளத்தில், இயற்கைக்கு மாறான இக்குறிகளினால் ஆச்சரியம் தோன்றியது.

குகை வாயிலைக் கடந்து உள்ளே சென்று, அவன் இருள் திரையில் மறைந்தான்.

உள்ளே சென்றதும் நன்னய பட்டனுக்குப் புதிய சக்தி பிறந்தது. என்றுமில்லாதபடி, அவன் மூளை, தீவிரமாக, விவரிக்க முடியாத எண்ணங்களில் விழுந்து, அவற்றைத் தாங்கச் சக்தியற்று,புயலில் அகப்பட்ட சிறு படகுபோலத் தத்தளிக்கிறது. நெஞ்சுறுதி என்ற சுங்கான், மனத்தின் அறிவு கெட்ட வேகத்தைக் கட்டு மீறிப் போகாது காத்ததினால், நிரந்தரமான பைத்தியம் பிடிக்காது தப்பினான்.

இருட்டிலே, இருட்டின் நடு மையம் போல், ஏதோ ஒன்று தெரிந்தது. சிறிது சிறிதாக, மனித உருவம் போல் வடிவெடுத்தது. பின்னர் இருளில் மங்கியது. இதைப் பார்த்த வண்ணமாகவே யிருந்தான் நன்னய பட்டன். அதைத் தவிர மற்ற யாவும் மறந்துபோயின.

அதைப் பார்த்துக்கொண் டிருக்க இருக்க, இரத்தத்திற்குப் பதிலாக வேறு ஏதோ ஒரு புதிய திரவப் பொருள் புரண்டு புரண்டு ஓடுவது போல்,சிறு வலியுடன் கூடிய இன்பத்தைக் கொடுத்தது.

மனத்திலே, குகை மறைந்து, வேறு ஓர் உலகம் தென்பட்டது. ஜடத்திலே தோன்றாத விபரீதமான பிராண சக்திகள், பேரலை வீசி, எல்லையற்ற சமுத்திரம் போல் கோஷித்தன. அந்தச் சக்திக் கடலின் திசை முகட்டிலே ஒளிச் சர்ப்பங்கள் விளையாடித் திரிந்தன. இதன் ஒலிதானா, அந்தக் கோர கர்ஜனைகள் !

நன்னய பட்டனின் பார்வை மங்கியது. மேகப் படலம் போல் ஏதோ ஒன்று கண்களை மறைத்தது. இருட்டையும் நிசப்தத்தையும் தவிர, அவன் இந்திரியங்கள் வேறொன்றையும் உணரவில்லை.

எத்தனை காலம் கழிந்ததோ அவனுக்கு உணர்வில்லை. மந்திரத்தால் கட்டுண்டு, பின்னர் அதிலிருந்து விலகிய சர்ப்பம் போல், எழுந்து நடந்தான். கால்கள் தள்ளாடின. குகையின் வெளியில் வருவதற்குள் அவனுக்குப் பெரிய பாடாகி விட்டது.

இவ்வளவும் ஒரு விநாடியில் நடந்தேறியது என்று சொன்னால் நன்னய பட்டன் நம்பமாட்டான். அவன் குழந்தையின் பக்கம் வந்து தரையிலே சோர்ந்து படுத்தான். மனிதனது பலவீனமெல்லாம் இயற்கைத் தாயின் மடியிலே ஒருங்கே தஞ்சம் புகுந்தது போல, ஆசை வித்தின் ஆரம்ப வடிவமான குழந்தையின் பக்கத்தில் கிடந்தான்.

கானகத்திலும் இருள் மயங்கி மடிய, வைகறை பிறந்தது. குகைக்கு மேல் முகட்டுச் சரிவில் நின்ற மாமரக் கொம்பின் கொழுந்துகளில் பொன் முலாம் பூசப்பட்டிருந்தது.

நன்னய பட்டன் எழுந்தான்.

அவனுக்கு முன்பே குழந்தை எழுந்து தவழ்ந்து விளையாடிக்கொண்டிருந்தது.

சூரங்காட்டிலே பசிதீர்த்துக்கொள்ள என்று நெடுந் தூரம் அலையவேண்டியதில்லை. மா, பலா முதலியவை சாதாரணமாக வளர்ந்து கிடக்கும். பாறைக் குடைவுகளிலே குளிர்ந்த சுனை யூற்றுக்களும் ஏராளம்.

## III

ஆசை அவனை மறுபடியும் குகைக்குள் இழுத்தது. குழந்தையை மரத்தடியில் வைத்துவிட்டு, உள்ளே சென்றான்.

குகையின் இருள் திரண்ட ஓரத்திலே கருங்கற் படுக்கை போன்ற ஒரு பாறை. சுற்றிலும், யாரோ ரசவாதி

யொருவன், எப்பொழுதோ அங்கிருந்து ஆராய்ச்சி நடத்தியது போல், மட்பாண்டங்களும் குடுவைகளும், ஓரத்திலே வரிசையாக அடுக்கப்பட்டும், உறி கட்டித் தொங்கவிடப் பட்டும் கிடந்தன.

இவ்வாறு அடுக்கடுக்காய்க் கிடந்த மனித வாசத்தின் அறிகுறிகளுக்கிடையில் ஒரு பொருள் அவன் கவனத்தை இழுத்தது.

அந்தக் கருங்கற் பாறைப் படுக்கையிலே ஒரு எலும்புக் கூடு கிடந்தது!

நன்னய பட்டன் பயம் என்பதை அறியாதவன். மரணத்தையும், பச்சை ரத்தப் பிரவாகத்தோடு வெளியே தெரியும் மண்டையோடுகளையும், அவன் கண்டு அஞ்சியவனல்லன். ஆனால், அவனுக்கு அதை நெருங்க நெருங்க, முந்திய நாள் இரவு இருட்டிலே குகைக்குள் நுழைந்த சமயம் ஏற்பட்ட, விவரிக்க முடியாத, உள்ளத்தை விறைத்துப் போகச் செய்யும், உணர்ச்சிகள் தோன்றலாயின. ஆனால் அவன் ஒன்றையும் பொருட்படுத்தாது நெருங்கினான்.

அப்பொழுது குகையின் எந்த இடைவெளியிலிருந்தோ ஒரு சிறு சூரிய கிரணம் வந்து, எலும்புக் கூட்டின் வலக் கண் குழியில் விழுந்தது. நன்னய பட்டன், முன்னால் ஓர் அடி யெடுத்துவைக்க முடியாது, கட்டுண்ட சர்ப்பம் போல நின்று, வெளிச்சம் விழுந்த மண்டை யோட்டில் இருக்கும் கண் குழியை நோக்கினான். அதில் ஒரு புழு நெளிவது போலத் தோன்றியது.

அது புழுவா? அன்று.

ஒரு சிறிய கரு வண்டு, மெதுவாக வெளியேறி, ஒளி ஏணியில் ஏறிச் செல்வது போல், சிறகை விரித்து ரீங்காரமிட்ட வண்ணம் பறந்து சென்று, முகட்டிலிருந்த இடைவெளியில் மறைந்தது.

மறைந்தது தான் தாமதம்!— அந்தத் துவாரத்திற்கு வெளியே அண்ட கோளமே இற்று விழும்படியாகக் காதைச் செவிடாக்கும் இடிச் சிரிப்பு! அது அந்த அமைதியின் நிலயமான சூரங்காட்டையே ஒரு குலுக்குக் குலுக்கியது.

நன்னய பட்டன் உடல் வியர்த்தது. அவனது பூத வுடல் கட்டுக்கடங்காது நடுங்கியது; ஆனால், கண்கள் மட்டிலும் பயப்பிராந்தியில் அறிவை இழக்கவில்லை. அசாதாரண விவகாரத்தில் தூண்டப்பட்டு, உண்மையை அறியத் தாவுகிறது என்பதை உணர்த்தும் பாவனையில், எலும்புக் கூடு கிடக்கும் இடத்தையும், வண்டு மறைந்த திசையையும் ஒருங்கே கவனித்தான்.

வெடிபடச் செய்த சிரிப்பு மங்கியதும் சூரிய கிரணம் மறைந்தது. அசாதாரணமான அமைதி பிறந்தது.

நன்னய பட்டன் குகையைச் சுற்றிப் பார்க்கத் தொடங்கினான்.

கற்பாறைப் படுக்கைக்கு மறு பக்கம் குகையின் ஒரு சுவர். அதன் மேல் இருளிலும் தெரியக்கூடிய ஒளித் திராவகத்தால் சிவப்பாக எழுதப்பட்டது போன்ற யந்திரம். அதன் ஒரு பாகத்தில் தாமரைப் பூ ஒன்று செதுக்கப் பட்டிருந்தது. தாமரை மலரின் இதழ்கள் எலும்புக் கூட்டின் மார்பகத்துக்கு நேராக இரண்டடி உயரத்தில் சுவரின் மேல் இருந்தன.

கற் பலகையில், எலும்புக் கூட்டிற்கும் சுவருக்கும் உள்ள ஒரு சிறு இடை வெளியில், சுவரில் இருப்பதைப் போலவே யந்திரம் செதுக்கப்பட்டு, அதன் மையத்திலும் ஒரு செந்தாமரைப் புஷ்பம் செதுக்கப்பட் டிருந்தது. கற் பலகையில் வரையப்பட்ட யந்திரம் இருளில் பொன்னிற மாக மின்னியது. தாமரை மலர் வெண்மையான பளிங்கினால் செய்து பொருத்தப்பட்டது போல் இருந்தது.

நன்னய பட்டன் அதன்மீது கையை வைத்துத் தட விப் பார்த்தான். அது தனியாகச் செதுக்கிப் பாறையில் பொருத்தப்படாத விசித்திரமாக இருந்தது. அது எப்படி அமைக்கப்பட்டது?

எலும்புக் கூடு ஆறடி நீளம். உயிருடன் இருந்த பொழுது அம்மனிதன் ராக்ஷஸன் போல இருந்திருக்க வேண்டும் என்பதில் சந்தேகம் இல்லை.

இவ்வாறு நினைத்துக்கொள்ளவே, நன்னய பட்டன் வேறு பக்கமாகத் தலையை நிமிர்த்தி நோக்கினான்.

என்ன ஆச்சரியம்!

ஒரு பிரம்மாண்டமான முதலை வாயைத் திறந்து கொண்டு அந்தரத்தில் தொங்கியது.

இருட்டில் தோன்றும் மயக்கமா?

இல்லை! இல்லை!

இரண்டு சரடுகள் வளையங்கள் போல் உயரே யிருந்து தொங்கவிடப்பட்டு, அவற்றின் ஊடே இம்முதலை புகுத்தப் பட்டு, உயரத்தில் தொங்கிக்கொண்டிருந்தது.

இருட்டின் கூற்றால் முதலில் சரடு தொங்குவது தெரிய வில்லை நன்னய பட்டனுக்கு.

மெதுவாக அதை யணுகினான். இருட்டில் கால் இட றியது. ஜோதியாக ஒரு திரவ பதார்த்தம் உருண்ட பானையிலிருந்து வழிந்தோடியது. அதன் பளபளப்பு, கருங் கல் தளத்தைத் தங்க மெருகிட்டது மல்லாது, குகையையே சிறிது பிரகாசமடையச் செய்தது.

லாகவமாகப் பலிபீடத்தின்மீது ஒரு காலை வைத்து ஏறி நின்று, அவன் முதலையின் வாயை நோக்கினான். கண் கள் ஒளி வீசின; வாய் கத்தியால் வெட்டிவைத்த சதைக் கூறுபோல் தெரிந்தது. ஆனால் அதன்மீது சலனம் இல்லை, உயிர் இல்லை.

முதலையின் திறந்த வாயில் ஓலைச் சுவடிகள் போல் கட்டுக் கட்டாக என்னவோ இருந்தன.

நன்னய பட்டன் அவற்றை யெடுத்தான்.

ஓலைச் சுவடிகள் போலில்லாமல், அவை மிகவும் கனமாக இருந்தன.

அவற்றை அப்படியே சுமந்துகொண்டு குகைக்கு வெளியே வந்தான்.

அச்சமயத்தில்தான் நன்னயபட்டனுக்குப் 'பூலோகத்தில் இருக்கிறேம்' என்ற உணர்வு ஏற்பட்டது. அத்தனை நேரம், ஜன்னி கண்ட நிலையில், உள்ளுக்குள் போராடும் பயத்தை அமுக்கி, அந்தக் குகை இரகசியங்களைத் துருவிக்கொண்டிருந்தான்.

குழந்தை, ஒரு மர நிழலில் தவழ்ந்து விளையாடிக் கொண்டு,சிறிது தூரத்தில் இரை பொறுக்கும் மைனுவைப் பார்த்துச் சிரித்துக்கொண்டிருந்தது.

நன்னய பட்டனுக்கு சுயப் பிரக்ஞையாக,-அதாவது, ஓடித் திரியும் எண்ணக் கோணல்களிலிருந்து யதார்த்த உலகத்திற்குக் கொண்டுவரும் ஒரு துருவ நட்சத்திரமாக-அக் குழந்தை இருந்தது.

அதைத் தூக்கி வைத்துக்கொண்டு கையிலிருந்த ஓலைச் சுவடியை அவிழ்த்தான். வெளிச்சத்தில் பிடித்து, ஏடு ஏடாக வாசித்தான்.

முதலில் அவனது கவனம் அந்தச் சுவடிகளின் விசித்திரமான குணத்திலேயே தங்கியது அப்பொழுதுதான் கருக்கிலிருந்து நறுக்கித் திருத்தப்பட்ட பனை ஓலை மாதிரியே காணப்பட்டது. இளம் பச்சைகூட மாறவில்லை. ஓலையில் ஓடும் மெல்லிய நரம்புகள்கூட வெள்ளையாகத் தென்பட்டன. ஆனல் ஓலைதான் உலோகம் போல் கெட்டி

யாகவும் கனமாகவும் இருந்தது. அதில் எழுத்துப் பள்ளங் களில் சிறிது பளபளப்பு இருந்தது.

இதென்ன விசித்திரமான ஓலை என்பது பிடிபடாமல், உள்ளிருக்கும் வாசகத்தை உரக்கப் படிக்க ஆரம்பித்தான்:

"...........காலத்தின் கதியைத் தடை செய்யும் உண் மையைக் கண்டுபிடித்துவிட்டேன். ஆமாம், அது மட்டி லுமா? வெறும் ஜடத்தை, மூலப் பிரகிருதிகளை, பிராண பக்திகொண்டு துடிக்கும் உயிர்க் கோளங்களாக மாற்றுந் திறமை படைத்துவிட்டேன். நான்தான் பிரம்மா! சேதன அசேதனங்கள் எல்லாம் எனது அறமே! நானே நான்! நான் நானே........."

இவ்வாறு சில ஏடுகள், முழுதும் தறிகெட்ட மூளை யின் ஓட்டம் போல், வார்த்தைக் குப்பையால் நிறைக்கப் பட்டிருந்தன. ஈன்னய பட்டனுக்கு இந்தக் கொந்தளித் துச் செல்லும் லிபிகளின் அர்த்தம் புரியவில்லை. மூளை சுழன்றது!

பின்னர்:

"இவ்வளவு தூரம் உனக்குப் பொறுமை யிருக்கிறதா! இனிமேல் என் இரகசியத்தைக் கேள்!"

"பிரபஞ்ச இரகசியத்தை அறிய எங்கெல்லாம் சென் றேன், தெரியுமா? மிசிர தேசம் வரை. அக புராணம் வழி காட்டியது! செமிராமிஸ், காலத்தின் கதியை நிறுத்தும் வித்தையைக் கற்பித்தான். உண்மையில் ஒரு படி அது! அதற்கு மேல் எத்தனை! மூளை குழம்பாது நீ என்னுடன் வருவாயா? அப்படியானால்.........குகைக்குள் மூலையில் தொங்குகிறதே முதலைக் கூடு, அது ஒடிந்து மண் ணாகி மண்ணுடன் சேராதபடி செய்தவன் அவன்தான். அதை இப்பொழுதும் உயிருடன் எழுந்து நடமாடச் செய்யலாம். அதை யார் அறிவித்தான் என்று உனக்குச்

சொல்ல வேண்டுமா? அதைத்தான் சொல்ல மாட்டேன். அது உனக்குத் தெரியலாகாது.

"வேண்டுமானால் உண்மையைப் பரிசோதித்துப் பார்.

"மூலையில் நீ கொட்டிவிட்டாயே அந்த ஜீவ ரசம், அதை ஒரு துளி எடுத்து,உன் இரத்தத்தில் கலந்து, அதன் மூக்கில் பிடி! அப்புறம் பார்!

"எனது எலும்புக் கூட்டிற்கு உடலளித்துப் பின்னர் என் உயிரை அதில் பெய்யவேண்டும். அப்பொழுது தான் நான் உனக்கு இரகசியங்களை விளக்கமாகச் சொல்ல முடியும்............"

இவ்வாறு வாசித்துக்கொண்டிருந்த நன்னய பட்டனுக்குக் கண் பிதுங்குவதுபோ லிருந்தது. என்ன! ஓலை வெறும் ஓலை. அதிலிருந்த ஓர் எழுத்தைக்கூடக் காணவில்லை. அவ்வளவும் மறைந்து, வெறும் தகடுகளாக, மங்கி மறையும் சூரிய ஒளியில் சுவடிகள் மின்னின.

வாசித்ததெல்லாம் உண்மையா, அல்லது வெறும் சித்தப் பிரமையா?

அவன் சொன்னதைப் பரீட்சித்துப் பார்த்தால்? நன்னய பட்டன் மறுபடியும் குகையினுள் சென்றான்.

குகையிலிருந்த சூரிக் கத்தியால் விரலில் சிறிது நறுக்கி இரத்த மெடுத்து, மின்னிக்கொண்டிருந்த ஜீவ ரசத்தில் கலந்தான். குகை முழுதிலும் சுகமான ஒரு பரிமள கந்தம் பரவியது. அவனுடைய உடலையும் உள்ளத்தையும் மோக லாகிரியில் தள்ளியது.

மெதுவாக முதலைக் கூட்டை எடுத்துக் கீழே வைத்து, அதன் மூக்கில் இந்த வாசனைக் கலவையைப் பிடித்தான்.

சிறிது நேரம் ஒன்றும் நிகழவில்லை. பின்னர், ஒளி யிழந்து மங்கி ஒரே நிலையில் நின்ற முதலையின் கண்களில்

சிறிது பச்சை ஒளி வீசியது. மெதுவாக அதன் உடல் அசைந்தது. திறந்தபடியே இருந்த வாய் மெதுவாக மூடியது. முதலை அவனை நோக்கி நகர ஆரம்பித்துவிட்டது!

அதே சமயம் 'களுக்' என்ற ஒரு பெண்ணின் சிரிப்பு. ஏறிட்டுப் பார்த்தான் நன்னய பட்டன். எதிரே குகை வாயிலில் தவழும் தனது குழந்தையின் முன்னால், அழகின் வரம்பைச் சிதற அடித்து, பிறந்த மேனியில் நிற்கும் ஒரு பெண் உருவம், குழந்தையை நோக்கிச் சிரித்த வண்ணம் நின்றது! என்ன அழகு! அப்பெண்ணின் நீண்டு சுருண்ட கறுத்த தலைமயிர், இரு வகிடாக அவளது உடலழகை அப்படியே முழங்கால் வரை மறைத்தது. நன்னய பட்டன் ஸ்தம்பித்து அவளையே நோக்கிய வண்ணம் நின்றான். வைத்த கண் எடுக்க முடியாதபடி அப்படியே நின்றான்.

"பயப்படாமல் அவள் திரும்பும் பொழுது கவனி! பின்பு உன் வேலை!" என்றது அவன் காதருகில் ஒரு குரல். அதற்கு என்ன கம்பீரம், என்ன அதிகாரத் தோரணை!

அப்பெண்ணோ, நெடு நேரம் குழந்தையையே நோக்கி நின்று சிரித்துக்கொண்டிருந்தாள். குழந்தையைத் தன்னிடம் வரும்படி சமிக்ஞைசெய்தாள். குழந்தை அசையவில்லை. நெடு நேரம் முயன்றும் குழந்தை அசையவில்லை. மெதுவாக அவள் குழந்தையை ஏறிட்டுப் பார்த்தவண்ணமே, பின்னிட்டு நடந்து வந்தாள். அப்பொழுதும் குழந்தை அசையவில்லை...ஆனால் குழந்தையின் உடல் அவ்விடத்திலேயே கட்டுண்டு கிடப்பது போல் பட்டது நன்னய பட்டனுக்கு! ஏனென்றால்அப்படித் தவித்தது குழந்தை அவ்வுருவத்தினிடம் செல்ல! பின்னாகவே அடியெடுத்து வைத்துச் சென்ற அப்பெண்ணுருவத்தின் முகத்தில் சடக்கென்று ஒரு மாறுதல் ஏற்பட்டது. கோபம் தணலாகத் தீப்பொறி பறக்க, முகம் கோரமாகச் சுருங்கி நிமிர்ந்தது.

மேலுதட்டின் அடியிலிருந்து புறப்பட்டன இரண்டு மெல்லிய கோரப் பற்கள்!

மின்வெட்டுப் போல் திரும்பியது அவ்வுருவம். அவ்வளவுதான்! என்ன கோரம்! பின்புறம் முழுவதும் வெறும் எலும்புக்கூடு! மண்டையோட்டின் கீழ்ப் பாகத்திலிருந்து தொங்கியது ஒரு சிறு சடை!

நன்னய பட்டன்! நன்னய பட்டனா அவன்? அவன் முகமும் உடலும் ஏன் இக்கோர உருப் பெற்றுவிட்டன! கையில் நீண்ட நகம்; தேகத்தில் சடை மயிர், வாயில் வச்சிர தந்தம், உதடுகள் நெஞ்சுவரை தொங்குகின்றன!

பேய்ப் பாய்ச்சலில் சென்று, மறையும் ஒரு பெண்ணுருவின் சடையைப் பிடித்துத் திரும்பி, குகையுள் மறைந்தான். வெளியே என்ன ஆச்சரியம்! குமுறும் இடியும் மின்னலும் எங்கிருந்தோ வந்து கவிந்தன.

குகைக்குள்ளே பேயுருவத்தில் நடமாடுகிறான் நன்னய பட்டன்.

பலிபீடத்தின்மீது இருக்கும் எலும்புக் கூட்டின் உட் கலசங்களில் சுருண்டு உலர்ந்திருந்த குடல், ஈரல், இருதயம், இவற்றை எடுத்துவைத்துக் களிமண்ணால் சேர்த்துப் பிணித்துக் கொண்டிருக்கிறான். வெளியே மழையற்று, மின்னல்கள், பிரபஞ்சத்தின் கேலிச் சிரிப்பைப் போல், கெக்கலித்துக்கொண் டிருக்கின்றன.

அந்த உருவத்தின் தலைமாட்டில் குழந்தை சுய அறிவு இழந்தது போல், பிரக்ஞையற்று, விழித்த கண் திறந்தபடி, உட்கார்த்தி வைக்கப்பட்டிருக்கிறது.

நன்னய பட்டன் அதன் இதயத்துடன் பெண் உருவிடமிருந்து பிடுங்கிய சடையைக் கட்டி, அதன் மற்றொரு மூலையை உருவத்தின் நாபியில் சேர்க்கிறான்.

அவனது நாக்கு மட்டிலும் சாதாரணமாகத் தொங்குகிறது.

மெதுவாகப் பலிபீடத்தின் தாமரைக் குமிழ்களில் செப்புக் கம்பிகளைப் பின்னி, அவற்றைப் பலிபீடத்தின் மீது வைத்து வளர்த்தப் பட்டிருக்கும் உருவத்தின் கை, கால், தலை இவற்றுடன் சுற்றி, குகைக்கு வெளியே கொண்டு வந்து, ஓர் உயரமான மேட்டில் ஈசான திக்கு நோக்கி யந்திரம் போல வளைத்துப் பதிக்கிறான்.

"உம்! உஷார்! ஜீவசத்தைக் கண்களில் தடவு!" என்றது ஒரு குரல்.

நன்னய பட்டன் அவ்வாறே தடவினான்.

"கிட்ட நிற்காதே! விலகி நில்!" என்றது குரல்.

"சட்டச் சடசடா!" என்று ஆரம்பித்துப் புரண்டு வெடித்தது ஒரு பேரிடி.

மின்னல் வீச்சு, கம்பிகள் வழியாகப் பாய்ந்து, குகை முழுதும் ஒரே பிரகாசமாக்கிக் கண்ணைப் பறித்தது.

"தொட்டுப் பார்!" என்றது அக்குரல், மறுபடியும்.

நன்னய பட்டன் அணுகினான்.

பலிபீடத்தின் மீதிருந்த உருவத்தைத் தொட்டான்!

என்ன ஆச்சரியம்! வெறும் களிமண், சதைக் கோளமாக மாறிவிட்டது!

"அதன் நாபியிலும் இதயத்திலும் ஜீவாசத்தைத் தடவு!"

நன்னய பட்டன் அப்படியே செய்தான்.

மறுபடியும் ஏற்பட்டது மின்னலும் இடியும்.

"உணர்வு ஏற்பட்டுவிட்டது. தொட்டுப் பார்! இதயம் அடித்துக்கொள்ளும். இனி உயிர்தான் பாக்கி! குழந்தையை அதன் முகத்தில் படுக்க வை!"

நன்னய பட்டன் அப்படியே செய்தான். இதற்குள் அவனது கோர உருவத்தில் செம்பாதி மறைந்துவிட்டது.

"முதலில் அந்த மூலையில் இருக்கும் மருந்தைக் கையில் தடவி, உருவத்தின் கைகளை உன் இரண்டு கைகளாலும் பிடித்துக்கொண்டு, முதலையின் முதுகில் நில்! ஒரு கையை எடுத்தால் உன் உயிர் போவது நிச்சயம். ஜீவரசத்தை எடுத்து, இருவர்மீதும் கொட்டிவிட்டு, நான் சொன்னது போல் செய்!'' என்றது அக்குரல்.

நன்னய பட்டன், யந்திரம் போல, அவற்றைச் செய்து முடித்தான்.

"உருவத்தின் கண்களையே பார்! வேறு பக்கம் திரும்பாதே!''

மறுபடியும் இடி இடிக்க ஆரம்பித்தது! கோர இடி, சமுத்திர அலை போல் தனது உள்ளுணர்வைத் தாக்கி, உடலில் தாங்கொணு வேகத்தில் புரளுவதை அறிந்தான். உருவத்தின்மீது வைத்த கண் மாறவில்லை. உருவத்தின் கண்கள் மெதுவாக அசைகின்றன. அதன் நெற்றியில் சிறு வியர்வை துளிர்க்கிறது. கண்கள் மெதுவாகத் திறக்கின்றன.

அச்சமயம் 'களுக்' கென்று பெண்ணின் சிரிப்புக் குரல்.

மறுபடியும் அதே உருவமா! பார்க்கவேண்டு மென்ற ஆசை மறுபடியும் அதன் உருவப் பிரமையில் சென்று லயித்தது. மெதுவாகக் கண்ணைத் திருப்பினுன்.

அப் பேயுருவம் மெதுவாகப் பலி பீடத்தை அணுகி, சடையை எடுக்க முயன்றது. கட்டளையை மறந்து அதைத் தட்டக் கை யெடுத்தான்!

"எடுக்காதே!'' என்ற அதிகாரத் தொனியுள்ள குரல்! உருகிய பிழம்புகள் பாதங்கள் வழியாக இதயத்தை நோக்கிப் பாய்வது போல், ஒரு சிறு விஞடி நினைத்தான். அவ்வளவுதான்—

மற்ளெருரு பேரிடி! நீட்டின கையை மடக்க முடிய வில்லை.

ஒரு கணத்தில் மூன்று எலும்புக் கூடுகள்தான் பலி பீடத்தின்மீது கிடந்தன!

ஏக்கமான பெருமூச்சு, குகையினின்று வெளிப்பட்டு, வான வெளியில் மறைந்தது.

இன்னும் எத்தனை காலம்!.........



## கதை 7

# வாழ்க்கை!

'ஆசை! அதற்கும், மனிதன் சொல்லிக்கொள்ளும் லட்சியம் என்பதற்கும் வெட்கமே கிடையாது.'

---

அம்பாசமுத்திரத்திற்கும் பாபநாசத்திற்கும் இடையிலுள்ள ரஸ்தா எப்பொழுதும் ஜன நடமாட்டத்திற்குப் பெயர்போனதல்ல. ஆனால், சொறிமுத்தையன் கோயில் விழாவன்று வேண்டுமானால், வட்டியும் முதலுமாக, ஜனங்கள் அந்த வழியில் நடந்து தீர்த்து விடுவார்கள். சில சமயம் பாபநாசம் நெசவாலை மோட்டார் லாரி, காதைப் பிய்க்கும் படியாகப் புழுதியை வாரி இறைத்துக்கொண்டு, கோலாகலமான ஓட்டை இரும்புக் கோஷத்துடன் செல்லும். மலை விறகு வண்டிகள் லொடக் லொடக் என்று, அல்லது சக்கரத்தின் பக்கத்தில் வண்டி சரிவில் வேகமாக உருண்டு விடாதபடி கட்டும் கட்டையை வண்டிக்காரன் அவிழ்க்க மறந்துவிட்டிருந்தால், 'கீரீச்' என்ற நாதத்துடன், தூங்கி வழிந்துகொண்டு சாரை சாரையாகச் செல்லும். வண்டிக்காரர்களும், வண்டிமாடுகளும், சமதளத்தில் இறங்கி விட்டால், எதிரிலோ பின்னோ என்ன வருகிறது என்று கவனியாது, தூங்கி வழிந்துகொண்டு செல்ல இச்சாலையில் பூரண உரிமை யுண்டு. சாலையில் இரண்டு பக்கங்களில் இருக்கும் மரங்களின் சம்பிரமத்திற்குக் கேட்கவேண்டியதில்லை. எதிரே காணப்படும் மலைகளைக்கூடப் பார்க்க முடியாத குறுகிய பார்வையுடையவனானால், அடிமை நாட்டி

வர் மாதிரி பவ்வியமாக அடங்கி ஒடுங்கி வளர்ந்திருக்கும் மரங்களைப் பார்த்தால், போகும் வழி ஒரு நாளும் மலைப் பிரதேசத்தை யடையாது என்று எந்தக் கோவிலிலும் சத்தியம் செய்யத் தயாராக இருப்பான். விக்கிரமசிங்கபுரம் தாண்டிய பிறகுதான், நாணிக் குழைந்து வளர்ந்த இந்த மரங்கள், தங்கள் குலப் பெருமைகளைக் காட்ட ஆரம்பிக்கின்றன.

அன்று அவ்வளவு மோசமான வெய்யில் இல்லை. மலைச் சிகரத்தின் இரு பக்கங்களிலும் கவிந்திருந்த கறுப்பு மேகங்களில் மறைந்து,அதற்குச் சிவப்பும்,பொன்னுமான ஜரிகைக் கறையிட்ட சூரியன்,கிழ்த் திசையில் மிதக்கும் பஞ்சு மேகங்களில் தனது பல வர்ணக் கனவுகளைக் காண்பிக்க ஆரம்பித்துவிட்டான். பொதிகை, பெரிய ரிஷிக் கிழவர் மாதிரி, கருநீலமும் வெண்மையும் கலந்து கறையேற்றிய மஞ்சுத் தாடிகளை அடிக்கடி ரூபம் மாற்றிக்கொண்டு, பார்ப்பவனின் மனத்தில் சொல்ல முடியாத அமைதி, துன்பக் கலப்பில்லாத சோகம், இவற்றை எழுப்பியது. பக்கத்தில், அதாவது இரு சிகரங்களுக்கும் ஊடே தெரியும் வான வெளியில், அக்னிக் கரையிட்ட கறுப்பு மேகங்கள் அதற்குத் துணை புரிந்தன என்று சொல்லலாம். சக்தி பூஜைக்காரனுக்கு, சிவனும் சக்தியும் மாதிரி, இக்காட்சி தோன்றியிருக்கும்.

விக்கிரமசிங்கபுரத்திற்கு இரண்டாவது மைலில், மலையை நோக்கி, அதாவது, பாபநாசத்தை நோக்கி, ஒருவன் நடந்துகொண்டிருந்தான். நாற்பது வயதுஇருக்கும். இடையிடையே நரையோடிய, தூசி படிந்த, கறுப்புத் தாடி.அகன்ற நெற்றியின்மீது சிறிது வழுக்கைவிட்டு, இரண்டு பக்கமும் கோதாமல் வளர்ந்து பின்னிய தலைமயிர், உச்சியில் சிறிது வழுக்கையைக் காண்பித்து, கழுத்தை நன்றாக மறைத்தது.

மூக்கு நீண்டிருந்தாலும்,வாலிபத்தின் பிடிப்பு விட்டதினுல், சிறிது தொங்கி மீசையில் மறைந்தது. கீழுதடு மட்டிலும் மீசைக்கு வெளியே தெரிந்தது. வாயின் இருபுறத்திலும் மூக்கிலிருந்து ஆரம்பித்து தாடியில் மறையும் கோடுகள். அடிக்கடி நினைத்து நினைத்து நெஞ்சை யலட்டிக்கொள்வதனுல் சுருக்கல் விழுந்து கண்ணின்மீது தொங்கும் புருவங்கள். உடல் திடகாத்திரமான தன்று; ஆனுல் நாடோடியாக அலைந்து மரத்துப்போன தேகம். கிழிந்த சட்டையும், ஓரங்களில் முழங்கால் தடுக்கியதால் கரைகள் கிழிந்த வேஷ்டியும் உடுத்தியிருந்தான். கைகளும் கண்களும் அவன் வயிற்றிற்காகத் திரியும் நாடோடியல்ல என்பதைக் காண்பித்தன. கையிலே ஒரு தடி, தோள்பட்டையில் ஒரு மூட்டை, — அதில் ஒரு செம்பும் புஸ்தகமும் துருத்திக்கொண்டிருந்தன — அதன்மேல் ஒரு கம்புளி.

கண்களில்,அடிக்கடி ஏதோ ஒரு பெரிய ஏமாற்றத்தை ஒவ்வொரு நிமிஷமும் அனுபவிப்பவன் போல், ஒரு பிரகாசம்; அதனுடன் கலந்து, ஒரு பரிதாபகரமான, தோற்றவனின் சிரிப்பு. கண்கள், அவன் செல்லும் திக்கை நோக்காது, வானிலும் மலையிலும், ஒன்றையும் பற்றுது சலித்துக் கொண்டிருந்தன. கால்கள் நெடுந் தூரம் நடந்தாற் போல் ஒவ்வொரு நிமிஷமும் குழலாடின.

மூட்டையை எடுத்து மரத்தடியில் வைத்து, பக்கத்தில் தடியைச் சாத்திவிட்டு உட்கார்ந்து, முழங்காலையும் குதிரைச் சதையையும் தடவிக்கொண்டு, 'அப்பாடா!' என்று சாய்ந்துகொண்டான். இனி அந்த இடந்தான் வீடு. மூட்டையைப் பரப்பினுல் தட்டுமுட்டு சாமான்கள், இரவைக் கழிப்பதற்கு வேண்டிய சாப்பாட்டு வகைகள்! அங்கேயே உட்கார்ந்துகொண்டால் தண்ணீருக்கு எங்கே போவது? நாடோடிக்கு ஒன்றும் புரியவில்லை. கால் சொல்

வதைக் கேட்டால் அன்றிரவு பட்டினி இருக்கவேண்டியதுதான். சீ, என்ன கஷ்டம் !

ஏதாவது அற்புதம் ஒன்று நடந்து, தான் நினைத்த இடத்திற்குப் போய்விடக் கூடாதா என்று அவன் மனக் குரங்கிற்குச் சிறிது ஆசை எழுந்தது. உதட்டில் ஒரு சிரிப்புடன் காலைத் தடவிக்கொண்டு, வேஷ்டியில் ஒட்டியிருந்த ஒரு சிறு வண்டைத் தட்டினான்.

அப்பொழுது, அவன் வந்த திக்கிலிருந்து, 'ஜல்! ஜல் !' என்று சலங்கைகள் ஒலிக்க, தடதடவென்று ஓர் இரட்டை மாட்டு வண்டி வந்துகொண்டிருந்தது. வண்டிக்காரன் மாடுகளை "தை ! தை !" என்று விரட்டி, 'தங்கம் தில்லாலே' என்று பாடிக்கொண்டு வாலை முறுக்கினான். வண்டி காலி. இல்லாவிட்டால் பாடிக்கொண்டு போக அவனுக்கு அவ்வளவு தைரியமா ?

"ஓய், வண்டிக்காரரே! எவ்வளவு தூரம் ? நானும் ஏறிக்கொள்ளட்டுமா ?" என்றான் சாலையில் உட்கார்ந்திருந்த நாடோடி.

"வண்டியா! பாவநாசத்துக்கு. வேணுமானா பெறத்தாலே ஏறிக்கிரும் !" என்றான் வண்டிக்காரன்.

நாடோடியின் வாழ்க்கையில் முதல் முதலாக அவன் எதிர்பார்த்தபடி சம்பவிக்கும் ஓர் அற்புதம் நிகழ்ந்தது.

"நீர் எங்கே போராப்பிலே! பாவநாசத்துக்கா ?" என்றான் வண்டிக்காரன்.

" ஆமாம்! யாரு வண்டி !"

" இந்தக் காட்டுலே பண்ணையெ எசமான் வண்டி தெரியாத ஆளுவளும் உண்டுமா! கல்லடக்குறிச்சி பெரிய அய்யரு வண்டி. பளைய பாவநாசத்துலே, பட்டணத்திலே யிருந்து அய்யமாரும் அம்மாமாரும் ஊரு பாக்க வந்திருக்காங்க ! கூட சாமியாரும் வந்திருக்காரு. அவுங்க எல்லாம்

சீசப் புள்ளெங்க. அவரைப் பாத்தால் சாமியாரு மாதிரியே காங்கலே. பட்டும் சரிகையுமாத்தான் கட்டராரு. கூட வந்திருக்காளுவளே, கிளிங்கதான்!" என்று அடுக்கிக் கொண்டே போனான் வண்டிக்காரன்.

இதென்ன வேஷம் என்று ஆச்சரியப்பட்டான் நாடோடி. வண்டியின் ஒரு மூலையில் கிடந்த தியாசபி புஸ்தகங்கள் வந்திருப்பவர் யார் என்று விளக்கிவிட்டன. மனத்தின் குறுகுறுப்புச் சாந்தியானதும் வண்டிக்காரனின் பேச்சில் லயிக்கவில்லை.

'ஊச்' சென்று கொண்டு மனத்தை வெளியில் பறக்க விட்டான் நாடோடி. அது, கூடு திரும்பும் பட்சிபோல, பழைய நினைவுக் குப்பைகளில் விழுந்தது.

இன்று இந்த வண்டியில் ஏறியதுதான், இந்த நாற்பது நாற்பத்தைந்து வருஷங்களில், முதல் முதலாக அவன் விரும்பி நிறைவேறிய ஆசை.

"ஆசை! அதற்கும் மனிதன் சொல்லிக் கொள்ளும் லட்சியம் என்பதற்கும் வெட்கமே கிடையாது. இலட்சியத்தால் நடக்கிறதாம், நீதியால் நடக்கிறதாம்; தர்மத்தால், காதலால் வாழ்க்கை நடக்கிறதாம்! உண்மையில் இதில் ஏதாவது அர்த்தமிருக்கிறதா? வாழ்க்கையில் ஒன்றுதான் நிஜமானது, அர்த்தமுள்ளது. அதுதான் மரணம். காதல்,வெறும் மிருக இச்சை பூர்த்தியாகாத மனப்பிராந்தியில் ஏற்பட்ட போதை. நானும் சுகம் அனுபவித்தாச்சு. என்னதான் பேசினாலும், இதற்கு மேல் ஒன்றும் கிடையாது. அதற்கப்புறம் சமூகம். அன்றைக்கு அந்தப் பயல் ஜட்ஜ்மென்ட் சொன்ன மாதிரிதான்,........பெரிய மீன் சின்ன மீனைத் தின்னலாம். ஆனால் சின்ன மீன் அதற்கும் சின்ன மீனைத் தின்றால், பெரிய மீன், 'குற்றம் செய்கிறாய்!' என்று தண்டிக்க வருகிறது. இதுதான் சமூகம்!

இந்த அசட்டு மனிதக் கூட்டத்தின் பிச்சைக்காரத்தனம்... புனிதமாக ஏதாவது ஒன்று இருக்கிறதா? இந்தப் பால் காரன் விற்கிற பாலுக்கும், உலகத்தின் நன்மைக்கும் வித்தியாசமில்லை. நாமாக நினைத்துக்கொண்டால் நன்மைதான். பின் ஏன் இந்தப் பித்தலாட்டமான இலட்சியங்களை அறிந்து கொள்ள வேண்டும்! அதனால்தானே இந்த ஏமாற்றம், தொந்தரவு. மிருகம் மாதிரி இருந்து தொலைத்தால் என்ன கெட்டுப் போகிறதோ? அசட்டுச் சமூகத்திற்கேற்ற அசட்டுப் பித்தலாட்டங்கள். இதில் 'நான் சொல்வது தான் சரி' என்ற கட்சி. லோகத்தை மாற்றியமைக்கப் போராளாம்... ..அதுவுந்தான் விடிய விடிய நடக்கறதே .."

"பெரியவரே, இங்கேயே எறங்கிகிடும்! அய்யரு கண்டா கட்டிவச்சு அடிப்பாரு .. ..நீங்க எந்தூரு?" என்றான் வண்டிக்காரன்.

"இந்தா, பலகாரம் வாங்கிச் சாப்பிடு!" என்று ஓரணாவைக் கொடுத்துவிட்டு, இறங்கிக் கோவிலுக்குள் செல்லும் வழியில் பக்கத்திலிருந்த இட்டிலிக் கடையில்—அதற்கு 'ஓட்டல்' என்று பெயர்—நுழைந்து, கைகால் கழுவிவிட்டு, முகத்தைத் துடைத்தான் நாடோடி.

அப்பொழுது நன்றாக அந்தி மயங்கி விளக்கேற்றப் பட்டுவிட்டது.

"கோவிலிலே கட்டி வாங்க நேரஞ் செல்லுமா?" என்றான் நாடோடி.

"ஆமாம், பூசையாயித்தானே! எட்டு மணி ஆகும்!"

"அப்போ ஒரு அணாவுக்கு இட்டிலி இலையில் கட்டிக் கொடு!" என்று வாங்கிக்கொண்டு, பழைய பாபநாசத்திற்குப் போகும் பாதையில் இருக்கும் மண்டபத்தை நோக்கி நடந்தான்.

மண்டபத்தில் அவன் எதிர்பார்த்தபடி நிம்மதியில்லை. பண்ணை அய்யர் 'தியாசபி' (பிரம்மஞான) கோஷ்டிக்கு விருந்து நடத்தும்பொழுது அங்கு அமைதி எப்படி இருக்க முடியும்! சமயம், அரசியல் முதல், நேற்றுச் செய்த சமையல் வரை சம்பாஷணையில் அடிபடுகிறது.

"வாழ்க்கையின் இணைப்பையும், சமயத்தின் சாரத்தையும் அறிவிப்பதுதான் தியாசபி, ஸார்!" என்றது ஒரு குரல்.

"நேற்று ஸ்நானம் செய்யரப்போ, மிஸ்டர் கிருஷ்ணன், இதைக் கேளுங்களேன்! ஒரு மான்குட்டி முண்டந் துறையிலே துள்ளித்தே, நீங்க பார்த்தியளா?" என்றது ஒரு பெண் குரல்

ஆங்கிலத்தில், "நம் கூட்டத்தில் மான்களுக்குக் குறைச்சல் இல்லை!" என்றது ஒரு கரடிக் குரல். உடனே கொல்லென்ற சிரிப்பு.

"பேசாமலிருங்கள், சுவாமிஜி பேசப் போகிறார்!"

நாடோடி, படித்துறையில் இட்டிலியை வைத்துவிட்டு, கால் முகம் கழுவ ஜலத்தில் இறங்கினான். அப்பா, என்ன சுகம்! மெய்மறந்தபடி கல்லில் உட்கார்ந்து காலைத் தண்ணீரில் விட்டுத் துழாவிக்கொண்டேயிருந்தான்.

"நமது வாழ்க்கையிலே, அசட்டுத்தனத்திற்காகப் போராடுவது, மிருகத்தனத்திற்காகச் சச்சரவு செய்வது இயற்கை......" என்ற சுவாமிஜியின் குரல் கம்பீரமாக எழுந்தது.

நாடோடி இலை முடிப்பை அவிழ்த்தான்.

"சாமி, பசியா இக்குது! ஒரு இட்டிலி..." என்ற குழந்தைக் குரல் ஒன்று அவன் பக்கத்தில் கேட்டது.

இருட்டில் ஒன்றும் தெரியவில்லை. இருட்டோடு இருட்டாகப் பாறையின் பக்கத்தில் நின்றது ஒரு சிறு குளுவ ஜாதிக் குழந்தை.

"எங்கே! இங்கையா நிக்கிறே! இந்தா! உங்கப்பன் எங்கே! இருட்டிலே எப்படி வந்தே.........?"

அப்பொழுதும் சுவாமிஜி பிரசங்கம் நடக்கிறது.

"அப்பன் அதோ இக்குராரு..." என்றது சிசுக் குரல். பிறக்கும் போதே பிச்சையா!

"......ஆனால் உயர்ந்த ஆதர்சங்களுக்காக, மனித வர்க்கத்தின் இலட்சியங்களுக்காக, எத்தனை போர்கள், எத்தனை சச்சரவுகள்! உண்மைக்குக் குணம் ஒன்றுதான்! அதை யடையும் பாதைகள் பல......அதை யறியாத மனித நாகரிகம் அதற்குப் பிரசாரத்தைத் தொடங்கியது. நாங்கள் கூறுவது ஒன்றுதான். பேதங்கள் தோல் ஆழ முள்ளவை, இன்பம் ஒன்றுதான். இதன் சோபையும், அழகுமே, கலி யுக அவதார புருஷன் கிருஷ்ணஜி......"

"இவன் கண்டான் பெரிசா!" என்று ஓர் இட்டிலியை விண்டு வாயினுள் போட்டான் நாடோடி.

மெதுவாக வீசிக்கொண்டிருந்த காற்று, திடீரென்று அதிகப்பட்டு, பெரும் பெரும் தூற்றலுடன் வீச ஆரம்பித்தது.

நாடோடி மூட்டையைத் தூக்கிக்கொண்டு ஒரு மரத்தின் நிழலுக்கு ஓடினான். அதில்தான் குளுவக் குடும்பத்தின் வாசம். குளுவச்சி மழை அதிகரிக்கிறது என்று மண்டபத்தை நோக்கி ஓடினாள்.

"சீ, மூதேவி! எங்கே ஏறுறே! ஆள் இருக்கிறது தெரியலே! போ!" என்று ஒரு பெண் குரல் சீறியது.

மழை கொஞ்சம் பலந்தான். குளுவனுடைய சின்னக் குழந்தை மழை பெய்கிறது என்று கத்த ஆரம்பித்து விட்டது.

"ஓய்! ஜக்கம்மா! மந்தரம் போடறேன் பார்! பாப்பா, மழை நிக்குது! ஏ! மழை நிக்கலே! எங்க பாப்பாத்தி அழு

வுரா ! ஜல் ! மந்திரக்காளி ! ஜூ ! மந்திரக்காளி !'' என்று குழந்தைக்கு வேடிக்கை காட்டிக்கொண்டிருந்தான் குறுவன். குழந்தை இவன் பேச்சில் லயித்துச் சிரித்தது.

விழுந்து விழுந்து சிரித்துக்கொண்டு ஓடிவரும் குறுவச்சியைப் பார்த்து, "வேணுண்டி உனக்கு! ஒதைக்கிலே !'' என்றான் குறுவன்.

"நம்ம எடத்தை அவங்க புடிச்சுக்கிட்டாங்க இன்னிக்கி! உனக்கென்னடா குறுவா, நீ சொரணை கெட்டவன்......''

இருவரும் மழையின் உற்சாகத்தில் சண்டைபோட ஆரம்பித்துவிட்டார்கள்.

நாடோடிக்கு இது விநோதமாக இருந்தது. இருக்க இடமில்லை இந்த மழையில். இதில் என்ன உற்சாகம்! வாழ்க்கையே இந்த அசட்டுத்தனந்தான், அல்லது ஏமாற்றந்தான்.

மழை விட்டு மரங்களிலிருந்து மட்டும் ஜலம் சொட்டிக்கொண்டிருந்தது. மேற்புறத்திலிருந்து வெளி வந்த சந்திரன், புதிதாக ஸ்நானம் செய்து எழுந்த பிரகிருதி தேவியின்மீது காதற் பார்வை செலுத்தினான்.

'ஏய் குறுவா! அங்கென பாருடா!'' என்று இரண்டு உருவத்தைச் சுட்டிக் காண்பித்து, குசுகுசுவென்று சொன்னாள் குறுவச்சி.

"அதுவுஞ் சரிதான்!'' என்று குறுவன் அவளைத் தன் பக்கமாக இழுத்தான். குறுவச்சிக்கு என்ன பலமில்லையா!

ஆனால், அந்த நாடோடி, ஒன்றிலும் லயிக்காது, துயரந் தேங்கிய முகத்துடன், மலைப் பாதையில் நடந்து மறைந்தான். அவன் கண்கள் ஒரு தடவையாவது திரும்பிப் பார்க்கவில்லை. சாலையின் இருளும் அவன் உருவமும் ஒன்றாயின.

கதை 8

# தெரு விளக்கு

*உடைந்த தெரு விளக்குத்தான்! ஆனால்,*
*கொஞ்சமாவது அவனைத் தேற்றியதே!*

---

தெருக் கோடியிலே, அந்த மூலை திரும்பும் இடத்தில் ஒரு முனிசிபல் விளக்கு.

தனிமையாக, ஏகாங்கியாகத் தனது மங்கிய வெளிச்சத்தைப் பரப்ப முயன்று வாழ்ந்து வந்தது.

இளமை, மூப்பு, சாக்காடு என்பவை மனிதருக்கு மட்டும் உரிமையில்லை. எனவே, தெரு விளக்கிற்கும் இப்பொழுது மூப்புப் பருவம்.

நிற்கும் கல் — உடம்பு சிறிது சாய்ந்து விட்டது. சிரத்தில் இருந்த கண்ணாடிச் சில் ஒரு பக்கம் உடைந்து விட்டது. அந்தச் சிறுவன் விளையாட்டாகக் கல்லை எறிந்த பொழுது விளக்கின் கஷ்டத்தை நினைத்தானா?

காற்று அடித்தால் உயிரை ஒரே யடியாகவாவது போக்கிவிடுகிறதா? குற்றுயிராய்த் துடிக்கத் துடிக்க வைத்து அதைக் கொல்லுகிறதே!

கொஞ்சமாவது மங்கிய வெளிச்சத்தைக் கொடுக்கிறதென்று இந்தக் காற்றிற்கு நன்றி இருக்கிறதா?

போய்விட்டது! பிறகு மழையில் அதன் குளிரை யார் கவனிக்கிறார்கள்?

அது காற்றிற்குத் தெரியுமா?

இனிமேல் விளக்கு அந்தப் பக்கத்திற்கு வேண்டாமாம்! அதை எடுத்துவிட வேண்டுமாம்!

அதற்கு ஒரு தோழன்,—ஒரு கிழவன்.

ஒத்த வயதில்தானே நட்பு ஏற்படும். இதில் என்ன அதிசயம்!

விளக்கிற்குக் கிழவன்.

கிழவனுக்கு விளக்கு.

விளக்கை எடுத்துவிடப் போகிறார்கள் என்று கிழவனுக்குத் தெரியாது.

அவனுக்கு எப்படித் தெரியும்?

அவன் வயிற்றுக்குப் பிச்சை எடுக்க வேண்டாமா?

வயிற்றுக் கில்லாமல் உயிர் வாழ முடியுமா?

தெரு விளக்கு அவன் தோழன்தான். அதன் வெளிச்சம் அவனுக்கு எவ்வளவு மன நிம்மதியை அளித்தது!

அன்று சாயங்காலம் வந்தான்.

வெறும் குழி ஒன்றுதான் இருந்தது.

இருள்! இருள்!!

பற்றுக்கோலை யாரோ தட்டிப் பிடுங்கிக்கொண்ட குருடனின் நிலை!

அன்று அவனுக்கு உலகம் சூனியமாய், பாழ் வெளியாய், அர்த்தமற்றதாய் இருந்தது.

சாந்தி?

அது எங்கிருந்து வரும்!

உடைந்த தெரு விளக்குத்தான்! ஆனால், கொஞ்சமாவது அவனைத் தேற்றிவந்ததே!

வெளிச்ச மில்லாவிட்டாலும், ஸ்பரிசித்துப் பார்த்து ஆறுதலடைய வெறுங் கல்லாவது இருந்ததே?

மறுநாள் காலை, ஒரு கிழவனின் சவம் அங்கு கிடந்ததைக் கண்டார்கள்.

*　　　*　　　*

இப்பொழுது ஒரு புது விளக்கு!

மின்சார விளக்கு!

அதன் கீழே குழந்தைகள் உற்சாகமாக விளையாடிக் கொண்டிருக்கிறார்கள்.

அவர்களுக்குப் பழைய விளக்கையும் பழைய கிழவனையும் பற்றிக் கவலை என்ன?

ஒரு காலத்தில் இவர்களும் அப்படித்தான் ஆவார்கள்!

அதற்கென்ன?

எங்கும், எப்பொழுதும் அப்படித்தான்.

பழயன கழியும், புதியன வரும்.

இது உலக இயற்கையாம்!



கதை 9

# கலியாணி

‘ அட ஜடமே!... ஒன்னைக் கட்டிண்டு அழுரதைவிட ஒரு உருவத்தைக் கட்டிண்டு மாரடிக்கலாம். தொலே, சீக்கிரம்!’ — சுப்புவையர்

‘ என்னுடன் வந்துவிடு! இந்த மனித நாற்றமே அற்ற விடத்திற்குச் சென்றுவிடுவோம்!’ — சர்மா

---

**வா**ணிதாஸபுரம் என்பது ஒரு பூலோக சுவர்க்கம். ஆனால், இந்த சுவர்க்கத்தில் ஒரு விசேஷம். மேலே இருக்கும் பௌராணிகரின் சுவர்க்கம் எப்படி யிருக்குமென்று அடியேனுக்குத் தெரியாது. ஆனால் இந்த சுவர்க்கத்தைப் பொறுத்தவரை, இது வாணியின் கடைக்கண்பார்வை ஒரு சிறிதும் படாத இடம் என்று எனக்குத் தெரியும்.

வாணிதாஸபுரத்திற்குப் போகவேண்டுமானால், ஜில்லா போர்டு ரஸ்தாவை விட்டு, மாமரம் நிறைந்த வாய்க்கால் கரைமீது அரை பர்லாங்கு நடக்கவேண்டும். ரஸ்தாவின் கீழ்ப் பாரிசத்தில் ஊர். அதன் பக்கத்தில்தான், கிழக்கே பார்த்த சிவன் கோயிலில் தொடங்கி, பத்துப் பதினைந்து வீடுகள் உள்ள அக்ரகாரம். பிறகு ஊர்ப் பொட்டல். சற்று வட பாகமாகப் போகும் சந்து, பிள்ளைமார் சந்து. அதற்கப்புறம் மறவர்கள் தெரு. இவ்வளவையும் கடந்துவிட்டால், வேளாளர் தெருவின் தொடர்ச்சியான மறவர் தெருவின் கடைசிக்கு வந்துவிட்டால், வயலும் குளமும். குளம் தடாகமன்று, வெறும் மண் கரையிட்ட ஏரி.

சுற்றிலும் கண்ணுக் கெட்டியவரை கழனிகள். வான வளையத்தைத் தொடும் மூலையில் பச்சை மரங்கள்.

வயல்களின் வழியாக இரண்டு மைல் நடந்தால் நதி. இரு கரையிலும் மருத மரமும் பனையும் கவிந்து நிற்கும். அதிலிருந்துதான் ஊரை யொட்டிப் பாயும் வாய்க்கால் புறப்படுகிறது. வேனிற் காலத்தில் குளத்திலும், வாய்க்காலிலும் ஜலம் வற்றிவிடும். அப்பொழுது விடியற்காலையில் ஸ்நானம் செய்வதை இன்பமாகக் கருதுவோர்கள் வாணிதாஸபுரத்திற்கு வந்தால் இரண்டு மைல் நடையைத் துச்சமாகக் கருதுவார்கள்.

வாணிதாஸபுரம், வஞ்சனைச் சுழலிலும், தியாகப் பெருக்கிலும் செல்லும் நாகரிகத்தின் கறைகள் படியாதது. நாயக்கர்கள் காலத்தில் மானியமாகச் சிலருக்குக் கொடுக்கப்பட்ட காலத்திலிருந்து இன்றுவரை, அழியாத, மாறுதல் இல்லாத, நித்திய வஸ்துப் போல, பழைய பழகிய பாதைகளிலேயே அது ஓடிக்கொண்டிருக்கிறது.

கிராம வாசிகள் உயிர் வாழ்தலைப் பொறுத்தவரை வெளியூருக்குச் செல்லவேண்டிய அவசியம் கிடையாது, செல்வதுமில்லை. வேண்டியதெல்லாம் சாப்பாட்டிற்கும் துணிக்குந்தானே! உடையைப் பொறுத்த வரை 'கும்பினியான்' துணி வியாபாரத்தில் அதிக நம்பிக்கை. கிராம வாசிகளுக்கு உலகம் எந்தத் திக்கில் செல்லுகிறது என்ற அறிவும் கிடையாது, அறிய ஆவலும் இல்லை. சனிக்கிழமைச் சந்தைக்கு இலை காய் கறிகளைத் திருநெல்வேலிக்குக் கொண்டு சென்று, விற்றுமுதல் செய்துவிட்டு, அன்று 12 மணி நேரத்தில் அரைகுறையாகக் கேட்டதை மறு சனிக்கிழமை வரை பேசிக்கொண்டிருப்பதில் திருப்தியடைந்து விடுவார்கள் அந்த மகாஜனங்கள்.

கோயில் பூஜை, உபாத்திமைத் தொழில், உஞ்ச விருத்தி என்ற சோம்பற் பயிற்சி—இவைதான் அங்குள்ள பிராமண தர்மத்தின் பிரதிநிதிகளின் வாழ்க்கை இலட்சியம். வேளாண்மை என்ற சோம்பர்த் தொழில் அங்குள்ள பிள்ளைமார்களின் குல தர்மம். மறவர்கள், ஏவின வேலையைச் செயதல், ஊர்க் காவல் என்ற சில்லறைக் களவு உட்பட்ட சோம்பல் தர்மத்தைக் கடைப் பிடித்தனர். பறைச்சேரி ஊரின் போக்குடன் கலந்தாலும், அல்லும் பகலும் உழைத்து உழைத்து, குடித்து, பேசிப் பொழுதைக் கழித்தது.

ஊருக்கு, கிராம முனிஸீப்பு சுந்தரம் பிள்ளை, பண்ணையார் ராமையாப் பிள்ளை, சுப்பிரமணிய பண்டாரம், சிவன் கோயில் அர்ச்சகர் சுப்புவையர்—இவர்கள் எல்லோரும் 'பெரிய' மனிதர்கள். எல்லோரும் ஏக மட்டம்; ஏனென்றால், தற்குறிப் பேர்வழிகள். அவர்களில் 'மெத்தப் படித்தவாள்' என்று கருதப்பட்டவரே பிரைமரியை எட்டிப் பார்க்கவில்லை. எழுத்துக் கூட்டி வாசிப்பார்கள். தமிழ்ப் படிப்புத் தெரியும் என்று கூறுவார்கள். ஆனால் வாழ்க்கைக்கு அவசியமான உலக அநுபவம் உண்டு; 'படித்தவர்க'ளைப் போல் அவர்கள் வடிகட்டின அசடர்கள் அல்லர்.

## II

அர்ச்சகர் சுப்புவையர், ஏறக்குறைய மேஜாரிட்டியைக் கடந்துவிட்டவர். குழந்தை குட்டி கிடையாது. தமது 45-வது வயதில் 'மூத்தாளை' இழந்துவிட, இரண்டாவது விவாகம் செய்துகொண்டவர். இளையாள் வீட்டிற்கு வந்து சிறிது காலந்தான் ஆகிறது. அவள் சிறு குழந்தை. 16 அல்லது 17 வயதுள்ள கலியாணி, சுப்புவையரின் கிரகத்தை

மங்களகரமாக்கவே, அவரது சமையற்காரியாகக் காலம் கழித்தாள்.

சுப்புவையர் மன்மதனல்லர். அதுவும் 50-வயதில் ஒருவரும் மன்மதனாக இருக்க முடியாது விதி விலக்காக. ருசியான பக்ஷணங்களுடன் விருந்து சாப்பிடும் யாரும் வயிற்றை ஆலிலை போல் ஒட்டியிருக்கச் செய்ய முடியாது. நரைத்த குடுமியுடன், பஞ்சாங்கத்திற்கு ஒத்தபடி க்ஷவரம் செய்துகொள்வதாகச் சங்கற்பமும் செய்து கொண்டால், நிச்சயமாக எவரும் மன்மதனாக இருக்க முடியாது.

சுப்புவையர் சாதுப் பேர்வழி; கோயிலுண்டு, அவருண்டு. வேறு எந்த ஜோலியிலும் தலையிடுகிறதில்லை. வேளைக்கு வேளை நாவிற்கு ருசியாக உணவு கொடுத்து, தூங்கும் பொழுது கால் பிடித்துவிட்டு, தொந்தரவு செய்யாமலிருப்பதே மனைவியின் லட்சணம் என்று எண்ணுபவர். அதிலும், ஏறக்குறைய இருபது வருடங்களாகப் பழகி, திடீரென்று தன்னை விட்டுவிட்டு இறந்துபோன மூத்தாள்மீது அபாரப் பிரேமை. அவருக்கு அது பழக்க தோஷம். அவளைப் போல் இனி யார் வரப்போகிறார்கள் என்ற சித்தாந்தத்தில், கலியாணியின் பாலிய அழகும், சிச்ருஷையும் தெரியாது போய்விட்டன.

கலியாணி,—அவளும் ஏழைப் பெண்தான். உபாத்திமைத் தொழில் பார்த்துவந்த சாமிநாத கனபாடிகளின் மகள். அவ்வூரிலேயே பிறந்து, வெகு காலமாக மாமாவென்றும், சித்தப்பா வென்றும் அழைத்துவந்த ஒருவரைக் கணவராகப் பெற்றவள். ஏழையாகப் பிறந்தால் அழகாகப் பிறக்கக் கூடாது என்ற விதி யிருக்கிறதா? கலியாணியின் அழகு, ஆளை மயக்கியடிக்கும் மோக லாகிரியில் பிறந்த காம சொரூபம் அன்று. நினைவுகள் ஓடிமறையும் கண்கள், சோகம்

கலந்த பார்வை! அவளது புன்னகை ஆளை மயக்காவிட்டாலும் ஆளை வசீகரிக்கும். அப்படி வசீகரிக்கப்படாதவன் மண் சிலைதான். சுப்புவையரும், அவர் வழிபடும் லிங்க வடிவத்திலிருக்கும் 'விரிசடைக் கடவுளின்' உருவச் சிலையின் ஹிருதயத்துடிதுடிப்பை ஏறக்குறையப் பெற்றிருந்தார். கலியாணி வாலைப் பருவத்தினள். அதிலும் இயற்கையின் பரிபூரண சக்தியும் சோபையும் கொந்தளிக்கும் நிலையிலுள்ளவள். எதற்கெடுத்தாலும் தன்னை மரக்கட்டையாகக் கருதி, இறந்த மூத்தாளின் பெருமையை நினைத்து உருகும் சுப்புவையரின் எண்ணங்களைத் தன் வசம் திருப்புவது என்று கங்கணம் கட்டிக்கொண்டவள்; அதாவது, உள்ளூர அவளறியாமலே இயற்கை அந்த வேலையில் அவளைத் தூண்டியது. அவர் வார்த்தைகள் அவளது வாலிப அழகின் முகத்தி லடித்தன. அவரைக் கவர்ச்சிக்கக்கூடிய படியெல்லாம் தனது பெண்மைக் குணங்களைப் பயன்படுத்தினாள். சுப்புவையர் மசிகிற பேர்வழியாகத் தெரியவில்லை. கலியாணியும் ஒரு பெண்ணாயிற்றே, அவளுக்கும் இயற்கையின் தேவையும் தூண்டுதலும் இருக்குமே என்ற ஞானம் சிறிதும் கிடையாது போயிற்று சுப்புவையருக்கு.

அப்பொழுதுதான் சைத்ரிகரான சுந்தர சர்மா அங்கு வந்தார்.

## III

அப்பொழுது முன் வேனிற்காலம். பனி நீங்கிவிட்டது. வாய்க்காலில் ஜலமும் வற்றிவிட்டது. பயிர்கள் அறுவடையை எதிர்பார்த்துத் தலைசாய்ந்து நின்றன. குளத்தில் நீர் வற்ற இன்னும் இரண்டு மூன்று மாதமாகும். ஊருக்குக் குடி தண்ணீர் குளத்திலிருந்துதான். ஆற்றிற்கு நடக்க

முடியாதவர்களும், நடக்கப் பிரியமில்லாதவர்களும், குளத்திலேயே ஜலம் எடுத்துக்கொள்ளுவார்கள்.

சுந்தர சர்மா அக்ரகாரத்தில் ஒரு காலிக் குச்சு வீட்டில் வாடகைக்கு இருந்துகொண்டு, சாப்பாட்டிற்குச் சுப்புவையர் வீட்டில் வாடிக்கை வைத்துக்கொண்டார். வரும் பொழுது அவர் மனம் களங்கமற்ற மத்தியான வானம் போல் இருந்தது. எப்பொழுதும் குளக் கரையிலோ அல்லது வாய்க்கால் கரையிலோ இருந்துகொண்டு, இரண்டு மூன்று மாட்டுக்காரப் பையன்கள் வேடிக்கை பார்க்கச் சித்திரம் தீட்டிக்கொண்டிருப்பது அவரது பொழுது போக்கு.

சில சமயங்களில் மத்தியானச் சாப்பாட்டிற்கு வர இரண்டு அல்லது மூன்று மணியாகிவிடும். சில சமயம் காலைச் சாப்பாடு இல்லாமலே சென்றுவிடுவார். வருவது எந்த நேர மென்பதில்லை.

கலியாணி அவரைத் தனது சகோதரன்போல் பாவித்து வந்தாள். ஆனால், உள்ளம் அவரைக் கண்டவுடன் பயத்தினால் சலிக்கும். அவர் வந்து இரண்டு மூன்று நாட்களுக்கு அவருக்குச் சாப்பாடு போடுவது என்றால் வியர்த்து விருவிருத்து முகஞ் சிவந்து விடுவாள். காரணம் சர்மா வாணிதாஸபுரத்தினரைப் போல் அல்லாது, சற்று நாகரிகமாகவும், சுத்தமாகவும் உடையணிந்துகொள்வதுதான். ஆனால், அவரது கிராப்புத் தலை கழுத்து வரை வளர்ந்து மறைத்திருந்தாலும், எப்பொழுதும் சீர்குலைந்தே முகத்திலும் காதிலும் கிடக்கும். கறுத்த கண்கள் எப்பொழுதும் எதையோ சிந்தித்துக்கொண்டிருப்பது போல எதையாவது நோக்கற்றுப் பார்த்துக் கொண்டிருக்கும்.

சர்மா சைத்திரிகராக இருந்தும் கலியாணியைப் பார்க்காதது ஆச்சரியம் என்று நினைக்கலாம். கனவுகள் அழுத்

தும் உள்ளத்தைக் கொண்ட அவர், சுப்புவையரின் இல்லத்தை மறைமுகமான ஹோட்டலாகக் கருதியதினால், சாப்பாடு முடிவது அவர் அறியாமலே நடந்துவந்தது. மேலும் சுப்புவையரின் வீடு, ஜன்னல்களுக்குப் பெயர் போனதன்று. காற்றும் ஒளியும் உள்ளே எட்டிப் பார்க்கக் கூடாது என்று சங்கற்பம் செய்துகொண்ட சுப்புவையரின் மூதாதைகளில் ஒருவரால் கட்டப்பட்டது. பகலில் இருட்டு, இரவில் குத்து விளக்கின் மங்கலான இருட்டு. சாதாரண காலத்திலேயே எதிரில் வருவது என்னவென்று உணர்கிற பழக்கமில்லாத சர்மாவுக்குப் புலப்படாமல், இவ்வளவு வெளிச்ச உதவியும் சுப்புவையரின் மனைவியை மறைத்துவிட்டது அதிசயமன்று. மேலும் கலியாணிக்கு அதிகமாக வெளியில் நடமாடும் பழக்கம் கிடையாது. அவள் பொந்துக் கிளி. மேலும் குளம் வாய்க்கால்களுக்குக் கருக்கலிலேயே போய் வந்துவிடுவாள். இதனால் சர்மா கலியாணியைத் தினம் சந்தித்தாலும் பார்த்தது கிடையாது. அவருக்கு, அவளைப் பொறுத்த வரை, உணவு பரிமாறும் கருவளையணிந்த கைகள் மட்டிலும் தெரியுமோ என்னவோ!

## IV

அன்று சுந்தர சர்மா வருவதற்குச் சாயங்கால மாகிவிட்டது. காலையிலேயே சென்றவர், மத்தியான போஜனத்திற்குக்கூடத் திரும்பவில்லை. வரும்பொழுது நன்றாக இருட்டிவிட்டது. வரும் வழியிலேயே குளத்தில் குளித்துவிட்டு நேராகத் தமது குச்சு வீட்டிற்குச் சென்று உடைகளை மாற்றிக்கொண்டு, சுப்புவையரின் வீட்டை யடைந்தார். அன்று அவருக்கும் பசி.

சுப்புவையர் வெளித் திண்ணையில் உட்கார்ந்திருந்ததால் இவரைக் கண்டதும், "என்ன அய்யரவாள் பகல்லே

கூடச் சாப்பிடல்லே என்று சொன்னாளே; இப்படி யிருந்தா உடம்பு என்னத்துக்கு ஆகும்?...அடியே, சர்மா வந்திருக்கார், இலையைப் போடு! இன்னும் விளக்கை ஏன் ஏற்றி வைக்கல்லே! நேக்குத் தெரியுமே! அவள் இருந்தா வீடு இப்படிக் கிடக்குமா? பகவான் செயல்!'' என்று சொல்லிக் கொண்டே, உள்ளே சென்று, குத்து விளக்கின்மேல் இருக்கும் மாடக்குழியில் தீப்பெட்டியைத் தேடினார்.

சமையல் உள்ளிலிருந்த கலியாணியும் கையில் அகல் விளக்குடன் வந்து குத்து விளக்கை ஏற்றினாள்.

"என்னடி, விளக்கை ஏன் ஏற்றக்கூடாது? இவ்வளவு நேரமும் என்ன பண்ணினே?''

"ஏற்றினேனே! மங்கியிருக்கும் திரியைத் தூண்டா திருந்துவிட்டதினால் அணைந்துவிட்டது. சாத்தை வடிச்சண்டிருந்தேன்!'' என்றாள் கலியாணி.

"சரி, சரி! எனக்குத் தெரியுமே! வீடும் வாசலும் கெடக்கிற கெடையைப் பாத்தால் நன்னாயிருக்கு, பெருக்கி விட்டுச் சீக்கிரம் இலையைப்போடு!'' என்றார்.

கலியாணியின் முகம் சிவந்தது. அந்நியர்கள் முன் பாகவும் இம்மாதிரிப் பேசுகிறாரே என்று அவள் உள்ளங் கலங்கியது. 'அவர் என்ன நினைப்பார்!' என்ற நாணம், எல்லாம் சுருக்குச் சுருக்கென்று தைக்கும் வார்த்தைகள், இவை அவள் உள்ளத்தைக் குழப்பிவிட்டன. சரேலென்று உள்ளே சென்றுவிட்டாள். அவளுக்கு அழுகை அழுகையாக வந்தது.

"இன்று எங்கே போயிருந்தேள்?'' என்றார் சுப்புவையர்.

"அணைக்கட்டுப் பக்கம் போயிருந்தேன். வேலை முடிவதற்கு நேரமாகிவிட்டது. மத்தியானம் வெய்யிலில் வருவானேன் என்று நினைத்தேன். நாளைக்கு அல்லது மறு

நாளைக்குக் கொழுந்து மாமலைப் பக்கம் போகலாம் என்று நினைக்கிறேன். போவதை இப்பொழுதே சொல்லிவிட்டால் நீங்கள் காத்திருக்க வேண்டியதில்லை யல்லவா ?'' என்று சிரித்தார் சர்மா.

இதற்குள் கலியாணி கத வோரத்தில் நின்று கொண்டு, "என்ன செய்றேள்? சொம்பில் ஜலம் வைத்திருக்கிறேன் ! '' என்றாள்.

"இந்தாருங்கள், கால் கைகளைக் கழுவிக் கொள்ளுங்கள்!'' என்று சர்மாவிடம் ஒரு செம்பு ஜலத்தைக் கொடுத்து விட்டுத் தானும் கால் முகம் கழுவினார்.

இருவரும் உள்ளே சென்று குத்து விளக்கின் முன்பு போடப்பட்டிருந்த இலைகளின் எதிரே உட்கார்ந்து கொண்டனர்.

அன்று இருவருக்கும் பரிமாறுவது தென்றால் பிராணன் போவதுபோ லிருந்தது.

முதலில் சுப்புவையருக்குச் சாதத்தைப் படைத்தாள். கை நடுங்கியதினால் சிறிது சிதறிவிட்டது.

"எனக்குத் தெரியுமே! இப்படிச் சிந்திச் சிதறினால் வாழ்ந்தாற்போல்தான்! பார்த்துப் போடக்கூடாதா ? போதும், போதும்!'' என்றார். பிறகு மனத்திற்குள்ளாகவே, "அவள் இருந்தால்,...கர்ம பலன்!'' என்று முணகிக்கொண்டார். இவ்வார்த்தைகள் கலியாணிக்குக் கேட்டன. ஏற்கனவே குழம்பிய மனம் மேலும் கலங்கிவிட்டது. கைகள் இன்னும் அதிகமாக நடுங்கின.

சர்மாவுக்குப் படைப்பதற்காகக் குனிந்தாள். பதற்றத்தில் தட்டிலிருந்த சாதம் முழுவதும் இலையில் கவிழ்ந்து விட்டது. சர்மா, 'போதும்' என்று இடை மறித்தார். அவரது புறங்கை மீது ஒரு குவியல் மட்டும் தடைப்பட்டு நின்றது. 'போதும்' என்று சொல்லிக் கொண்டிருக்கும்

பொழுதே தட்டிக்கொண்டிருக்கும் பிரகிருதி அசடா, அல்லது அதற்குக் குறும்பா என்று நோக்கினர். அவர் சற்று அண்ணாந்து பார்த்ததும் அவர் எதிர்பார்த்ததற்கு விபரீதமான காட்சி! பயம்,—கூச்சத்திலும், குத்து வார்த்தைகளிலும் ஏற்பட்ட பயம்,—என்பது முகத்தில் எழுதி ஒட்டியது போல் மிரண்ட பார்வை!

அவர் பார்த்ததும் அவளுக்கு இன்னும் மிரட்சி யதிகமாயிற்று. அந்தக் குழப்பத்தில் அவர்கள் கைகள் சந்தித்தன. அவள் கண்களில் ஆறுதலை எதிர்நோக்கும் குழந்தையின் வருத்தம்; அழுகை துடிதுடிக்கும் உதடுகள். ஒரு கணம் இருவரும் ஒரே பார்வையில் அசைவற்றிருந்தனர். மறு கணம் அவள் நிமிர்ந்து திரும்பிப் பாராது வேகமாக உள்ளே சென்றுவிட்டாள். சர்மாவின் உள்ளத்தில் அது ஒரு விலக்க முடியாத சித்திரமாகப் பதிந்தது.

மறுபடியும் கலியாணி எத்தனையோ தடவை வந்து பரிமாறினள். ஆனல், ஒரு கணமாவது சர்மாவைப் பார்க்கவில்லை. ஆனல், சர்மா அவளது உள்ளத்தைத் துருவும் பார்வைகளைச் செலுத்தினர். அவை பாறைகளில் பட்ட கல்லைப் போல் பயனற்றுப் போயின. 'காரணம், காரணம்?' என்று அவர் உள்ளம் அடித்துக் கொண்டது. சாப்பிட்டுவிட்டுப் பேசாது நேரே தமது குச்சு வீட்டிற்குச் சென்று, தமது உள்ளத்துடன் போராடிக் கொண்டிருந்தார். அவரது உள்ளம் கலியாணியைத் தன்னுள் ஐக்கியமாக்கியது. அவள் அழகு சர்மாவின் சைத்ரிகக் கண்களுக்குப் பல நீண்ட காவியங்களாகத் தோன்றிற்று. அன்று இரவு முழுவதும் அவர் தூங்கவில்லை; தமது கனவுகளுடன் போராடிக் கொண்டிருந்தார்.

* * *

அன்று சாப்பாடு முடிந்தவுடன், சுப்புவையர், வெற்றிலைச் செல்லத்தைக் கையில் எடுத்துக்கொண்டு, வெளியே வந்து உட்கார்ந்துகொண்டு வெற்றிலை போடலாம் என்று பெட்டியைத் திறந்தார். வெற்றிலை பாக்கு எல்லாம் இருந்தன. ஆனால் சுண்ணாம்பு மட்டும் காய்ந்து காறைக் கட்டியாக இருந்தது. "ஜடம்!" என்று கூறிக்கொண்டே, "அடியே!" என்று உள்ளே தலையை நீட்டிக்கொண்டு கூப்பிட்டார். சமையல் உள்ளில் தனது மனத்துடன் போராடிக்கொண்டிருந்த கலியாணி, 'என்ன?' என்று கேட்டுக்கொண்டே வெளியில் வந்தாள்.

"அட ஜடமே! உனக்கு எத்தனை நாள் சொல்லுவது—செல்லத்தில் எல்லாம் சரியா யிருக்கிறதா வென்று பார்த்து வை என்று? மூளைதான் இல்லையே! அர்த்த ராத்திரியிலே யார் கொடுப்பார்கள்? போய் ஒரு துளி ஜலம் எடுத்துண்டு வா! ஒன்னைக் கட்டிண்டு அழுறதைவிட ஒரு உருவத்தைக் கட்டிண்டு மாரடிக்கலாம். தொலை. சீக்கிரம். அவளும் போனாள், குடியும் குடித்தனமும்,—எல்லாம் சொல்லவேண்டியதில்லை!" என்று வைதார்.

கலியாணி உள்ளே சென்று, ஒரு டம்ளரில் ஜலம் கொண்டுவந்து வைத்துவிட்டு, அவர் பாயையும் தலையணையையும் எடுத்து உதறிக் கூடத்தில் விரித்துவிட்டு, மறுபடியும் உள்ளே சென்றுவிட்டாள்.

அன்று பசி வேறு வரப்போகிறது! அவள் மனம் எங்கெல்லாமோ சுற்றியது. சர்மாவைப் பற்றி அடிக்கடி அவளை யறியாமல் அவள் உள்ளம் நாடியது. ஆனால், தனது கணவர் அந்நியர் முன்பும் இப்படிப் பேசுகிறாரே என்ற வருத்தம். ஏங்கி ஏங்கி யழுதாள். அழுகையில் ஓர் ஆறுதல் இருந்தது போல் தெரிந்தது.

மறுபடியும் 'அடியே!' என்ற சப்தம். "என்ன ?" என்று கேட்டுக்கொண்டே எழுந்து சென்றாள்.

"இன்னும் சாப்பிட்டு முடியவில்லையா ? இந்தக் காலைப் பிடி! அப்பா ! முருகா ! சம்போ, சங்கரா !" என்று கொட்டாவி விட்டுக்கொண்டே பாயில் படுத்துக்கொண்டார் சுப்புவையர்.

உட்கார்ந்து மெதுவாகக் காலைப் பிடித்துக்கொண்டேயிருந்தாள் கலியாணி. அவளுடைய கலங்கிய கண்களிலிருந்து ஒரு சொட்டுக் கண்ணீர் அவர் முழங்காலில் விழுந்தது.

"என்னடி, மேலெல்லாம் எச்சல் பண்றாய்? ஒரெழவும் தெரியல்லெ, என்ன ஜன்மமடா !" என்றார்.

கலியாணி சற்று நேரம் மௌனமாக இருந்தாள். அவரிடம் ஒன்று கேட்கவேண்டுமென்று துணிச்சல் பிறந்தது.

"பாருங்கோ !" என்றாள்.

"உம், போதும் பிடித்தது !" என்றார் ஐயர்.

அவர் கையை மெதுவாக எடுத்துத் தன் மார்பின் மீது வைத்துக்கொண்டு, "அவாள் முன்னெல்லாம் என்னைப் பேசுகிறீர்களே! நான் என்ன செய்துவிட்டேன்?" என்று சிரிக்க முயன்றாள். கண்களிலிருந்து கண்ணீர் வந்தது. அவள் புன்னகை பரிதாபகரமாக இருந்தது.

"எதற்காக ? உனக்குப் புத்தி வரத்தான்! என்ன சொல்லியும் ஒன்றும் உறைக்கல்லையே! அவள் இருந்தாளே, ஒரு குறையுண்டா ? எல்லாம் கணக்கா நடந்தது. கிரகலட்சுமி என்றால் அவள்தான். சொன்னால் போதுமா ?"

"அவள், அவள், என்கிறீர்களே ? நான் என்ன செய்துவிட்டேன்? இப்படித் திரும்பிப் பாருங்கோ! இப்படியிருக்கும் பொழுது சொன்னால் கேக்க மாட்டேனோ!"

"கையை விடு! எனக்குத் தூக்கம் வந்துடுத்து. என்னைப் படுத்தாதே!" என்று சொல்லிவிட்டுச் சுவர்ப்புறம் திரும்பிக் கொண்டு குறட்டை விடலானார்.

கலியாணிக்கு நெஞ்சில் சம்மட்டியால் அடித்தது போல் இருந்தது. தனது ஸ்பரிசம் சிறிதாவது அவரை மனித னுக்கவில்லையே என்றதில் ஒரு ரோஷம், சிறிது கோபமுங்கூட. அன்று முழுவதும் அவளுக்குத் தூக்கமே வரவில்லை. அவள் உள்ளம் எண்ணங்களுடன் போரா டிக்கொண் டிருந்தது.

அன்று முழுவதும் கலியாணிக்குத் தூக்கம் எப்படி வரும்! தூரத்திலே, எங்கிருந்தோ ஒரு வெளிச்சம் தன்னை அழைப்பது போல் ஓர் உணர்வு. அது தன்னை வாழ்விக் குமோ அல்லது தகித்துவிடுமோ என்ற பயம் அவளைத் தின்றுகொண் டிருந்தது.

கணவர் தன்னிடம் என்ன குறை கண்டார்? ஏன் இப்படி உதாசீனமாக இருக்கவேண்டும்? அதற்குக் காரணம் தனது குறையா, அல்லது அவரது......அவ ருக்குக் குறை எப்படிச் சொல்ல முடியும்?

இப்படியே அவள் அன்று முழுதும் தூங்கவில்லை. பாயில் படுத்துப் புரண்டுகொண்டிருந்தாள். சற்று ஒரு புறமாகப் புரண்ட சுப்புவையர் பிரக்ஞையில்லாது கையைத் தூக்கிப் போட்டார். அது அவள் மார்பில் அம்பிக் குழவி மாதிரிப் பொத்தென்று விழுந்தது. மயக்கம் கலைந்தது. பயம்! பிறகு புருஷனின் கைதான் என்ற உணர்ச்சி. அதில் ஒரு சாந்தி பிறந்தது. அந்தப் போதையில் அவளுக்குக் கண் கிறங்கியது. தூங்கிவிட்டாள். நடைமுறை உலகத்தில் இல்லாவிட்டாலும், கனவு உலகத்திலாவது, கணவன் சிரித்த முகத்துடன் பேசிக்கொண்டிருப்பது போல் அன்று அவளுக்குத் தோன்றியது.

காலையில் கலியாணி எழுந்திருக்கும் பொழுது என்றும் இல்லாதபடி வெகு நேரமாகிவிட்டது. எழுந்ததும் குடத்தை எடுத்துக்கொண்டு நேராகக் குளக்கரைக்குச் சென்றாள்.

## V

அன்று இரவு முழுவதும் சுந்தர சர்மாவுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை என்றால் வியப்பில்லை. இத்தனை நாட்களும் தமது மனத் திரையை விலக்கி அவளைப் பார்க்காததற்கு ஆச்சரியப்பட்டார். அந்த ஆச்சரியம் அவரை எங்கெங்கோ இழுத்துக்கொண்டு சென்றது. அவரோ, சைத்ரிகர்,—அழகுத் தெய்வத்தின் அடிமை! கலியாணியின் சோகம் தேங்கிய கண்கள் அவருக்குக் கற்பனைக் கதையாக, காவியமாகத் தெரிந்தது. அன்று இரவு முழுவதும் உள்ளம் கட்டுக்கடங்காமல் கொந்தளித்தது.

சுப்புவையர், பாவம், அது ஒரு பிரகிருதி. அவர் வசம் கலியாணி பிணிக்கப்பட்டால், விதியின் அற்பத்தனமான லீலைகளை உடைத்தெறிய ஏன் மனம் வராது? அவரை மனிதனாகவே சர்மா நினைக்கவில்லை. அவரது சிறையிலிருந்து அவளை விடுவிக்க வேண்டும் என்று அவர் நினைத்தார். அதில் கலியாணியின் சம்மதம்,—அதைப்பற்றிக்கூட அவருக்கு அதிகக் கவலையில்லை.

அவளை அழைத்துக்கொண்டு சென்றுவிட்டால்…… …………வாழ்க்கை எவ்வளவு இன்பமாக இருக்கும்! இலட்சியத்திற்கு அவள் எவ்வளவு பெரும் ஊக்கமாக இருப்பாள். மனிதப் புழுக்களே இல்லாத, மனிதக் கட்டுப்பாடற்ற, மனித நாகரிகம் என்ற துர்நாற்றம் வீசாத கானகத்தில், வாழ்க்கையையே ஓர் இன்பப் பெருங் கனவாகக் கழித்தால் என்ன?

அன்று முழுவதும் அவர் உள்ளத்தில் ஓடிய எண்ணங்கள் ஒரு நிரந்தரப் பைத்தியக்காரனுடைய உள்ளத்தையும் தோற்கடித்துவிடும். இரவு முழுவதும் விளக்கு அணைக்கப்படவில்லை. மூலையில் சன்னலை யொட்டியிருந்த நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு,விளக்கையே கவனித்துக் கொண்டிருந்தார். விளக்கின் சிம்னி கரி பிடித்து மேலே புகையடைந்து வெளிச்சத்தை அமுக்கியது. இரண்டு நிமிஷம் விளக்கு 'பக் பக்' என்று குதித்தது. அவ்வளவுதான், அதுவும் அணைந்துவிட்டது

அறை முழுவதும் இருட்டு. உள்ளே உட்கார்ந்திருக்க முடியவில்லை. மேல் வேஷ்டியை எடுத்துப் போட்டுக்கொண்டு வெளியே சென்றார். விடிந்துவிட்டது. ஆனால் நட்சத்திரங்கள் மறையவில்லை. கிழக்கே சற்று வெளுப்பு,—வெள்ளைக் கிறல் மாதிரி.

சர்மாவுக்குக் காலையில் நடப்பது மனத்திற்கு நிம்மதியாக விருந்தது. அவர் வாய்க்கால் கரை வழியாகவே நடந்துகொண்டிருந்தார். சற்றுத் தூரம் சென்றவுடன் வயல் வரப்புக்களின்மீது நடக்க ஆரம்பித்தார். தேகந்தான் ஏதோ யந்திரம் மாதிரி நடந்துகொண்டிருந்தது. மனம் மட்டும் தங்கு தடையின்றிக் கலியாணியின் பின் சென்றுவிட்டது. "கலியாணியை அழைத்துச் சென்றுவிட்டால்? அதற்கு இசைவாளா? அதற்கு என்ன சந்தேகம்? பிறகு எங்கு போவது? எங்கு போனால் என்ன — மனிதன் இருக்கும் இடத்தைத் தவிர......?"

சூரியோதயமாகிவிட்டது. முகத்திற்கு நேரே வெய்யில் விழுந்து கண்கூச ஆரம்பித்ததும், சர்மாவுக்கு 'வெகு தூரம் வந்துவிட்டோம்' என்ற எண்ணம் தோன்றியது. உடனே திரும்பி, குளத்தில் குளித்துவிட்டுப் போவதென்று, அப்பக்கமாகத் திரும்பி நடந்தார்.

வெய்யிலின் சூடு நிமிஷத்திற்கு நிமிஷம் அதிகமாகிறது. முதுகு பொசுக்கப்படுவது போல் காலை வெய்யில் தகிக்கிறது.

"அப்பா !"

குளக்கரை வந்துவிட்டது. குனிந்துகொண்டு மேட்டில் ஏறி, கரையின் மீது வளர்ந்திருந்த மரத்தடியில் நின்று, முகத்தைத் துடைத்துக்கொண்டார். இரண்டு மூன்று விநாடிகளில் கண் கூச்சம் விலகியது. குளத்தில் யாருமில்லை.

யாருமில்லையா! .

மரத்தின் மறைவில் ஜலத்தில் நின்றுகொண்டு, கலியாணி தனது ஈரப் புடவையைப் பிழிந்து உடுத்திக்கொண்டிருந்தாள். ஈரம் சொட்டும் கூந்தல் முதுகை மறைத்தது. கன்னத்திலும், தோளிலும், குளக்கரையில் நன்றாக விளக்கி வைத்திருந்த குடத்திலும், கிளைகளின் ஊடே பாய்ந்த சூரியவொளி பிரதிபலித்து மின்னியது. "அப்பா! வர்ணப் பெட்டியும் படம் எழுதும் திரைச் சீலையும் எடுத்து வரவில்லையே!" என்று நினைத்தார் சர்மா. கலியாணிக்கு அவர் இருப்பது தெரியாது. தனிமை என்ற மன மறைவில் தனது ஈரப் புடவைகளை எடுத்து உதறிக் கொசுவி உடுத்திக்கொண்டாள். ஈரப் புடவையில் நின்ற அந்த அழகு அவருக்கு மஜூம்தாரின் சித்திரத்தை நினைவூட்டியது. குனிந்து குடத்தை எடுத்து இடுப்பில் வைத்துக்கொண்டு, கலியாணி கரையேறுவதற்குத் திரும்பினாள். அவள் முன்பு சர்மா வைத்த கண் மாறாமல் பார்த்துக்கொண்டிருப்பதைக் கண்டதும் திகைத்துவிட்டாள். முகம் முழுவதும் சிவந்துவிட்டது. கண்கள் மிரண்டு அவரையே வெறித்து நோக்கின.

போவது என்றால், அவரைக் கடந்து போகவேண்டும். மனம் குழம்பியது. என்ன செய்வது ? என்ன செய்வது ? வெட்கம் தலைகுனியச் செய்துவிட்டது.

சர்மாவுக்கு அவளிடம் பேசவேண்டுமென்ற ஆசை. எப்படிப் பேசுவது? என்ன சொல்லுவது?

"நான் இன்று கொழுந்து மாமலைப் பக்கம் போகிறேன். நேற்றுப் போல் இன்றைக்கும் பட்டினியாக இருந்துவிடாதீர்கள்? நான் வராவிட்டால் பட்டினி இருப்பதாவது? அதென்ன பைத்தியக்காரத்தனம்?" என்று சிரித்தார். அவர்கள் உள்ளம் இருந்த நிலையில், இம்மாதிரியான பேச்சு, அபாயகரமான துறைகளிலிருந்து விலகி, நிம்மதி அளிப்பது போல ஒரு பிரமையை உண்டு பண்ணியது.

கலியாணிக்கு இவ்வார்த்தைகள் கொஞ்சம் தைரியத்தை யளித்தன. அவரிடம் பேசுவதற்கு மனம் ஆவல் கொண்டது. உள்ளத்தின் நிம்மதி கன்னத்தின் சிவப்பைச் சிறிது குறைத்தது.

"ஆண் பிள்ளைகள் சாப்பிடுமுன் கொட்டிக்கொண்டு, அவாளுக்குக் கல்லையும் மண்ணையுமா போடுவது? இப்பவே போரேளா? காலையிலே ஏதாவது சாப்பிட வேண்டாமா? அங்கு சாப்பாட்டிற்கு....." என்றாள்.

"இப்பொழுது சாப்பிட வருகிறேன். மத்தியானத்திற்கு என்ன? அதை நான் பார்த்துக் கொள்ளுவேன். ஏது இவ்வளவு நேரம்? எப்பொழுதும் அருணோதயத்தில் ஸ்நானம் ஆய்விடுமே?" என்றார்.

அதற்கு அவள் ஒன்றும் பதில் சொல்லவில்லை. அவள் முகம் மறுபடியும் சிவந்தது. இரவு பட்ட வேதனையும், ஓடிய எண்ணங்களும், மறுபடியும் அவள் மனத்தில் தோன்ற ஆரம்பித்தன.

அவரைப் பரிதாபகரமாகப் பார்த்துவிட்டுக் கரையேறி, வீட்டை நோக்கி நடந்தாள். அவரைத் தாண்டிச் செல்லும் பொழுது அவள் ஈரப் புடவை அவர்மீது பட்டது. சர்மா

வுக்கு அவளை அப்படியே பிடித்து ஆலிங்கனம் செய்யக் கரங்கள் துடித்தன. ஆனால், தமது கனவுக் கோட்டை இடிந்து பாழாகிவிட்டால் என்ன செய்வது என்ற பயந் தான் அவரைத் தடுத்தது.

சர்மா குளித்துவிட்டு நேராகக் கலியாணியின் வீட்டை யடைந்தார். அப்பொழுது சுப்புவையர் கோவிலுக்குச் சென்றுவிட்டார். வீட்டில் கலியாணியைத் தவிர வேறு ஒருவருமில்லை.

இவ்வரவை எதிர்பார்த்திருந்த கலியாணி, இலையைப் போட்டுச் சுடுசாதம் எடுத்து வைத்தாள்.

"என்ன! ஏது, இதற்குள் சமையலாகி விட்டது? ஏன் இவ்வளவு அவசரம்!" என்றார் சர்மா. அவருக்குச் சாப் பாடு செல்லாததற்குக் காரணம் பசியின்மையன்று.

'இன்னும் கொஞ்சம் குழம்பு போட்டுச் சாப் பிடுங்கள்," என்றாள் கலியாணி. அன்று அவளுக்கு வாய்ப்பூட்டுத் திறக்கப்பட்ட மாதிரி இருந்தது. அவரிடம் பேசுவதில் ஓர் ஆறுதல்.

"காலையில் சுடுசாதம் சாப்பிடமுடியுமா?...அவர் எங் கே? கோவிலுக்குப் போயிருக்கிறாரா? எப்பொழுது வரு வார்?... கொஞ்சமாகப் போடுங்கள், போதும்!" என்றார்.

சாப்பாடு முடிந்தது. கை கழுவ ஜலம் வெளியில் வைக்கப்படவில்லை. பாத்திரத்தை எடுத்துக்கொண்டு சமைய லறைக்குள் சென்ற கலியாணி வரச் சிறிது தாமத மாயிற்று. சர்மா பின்புறம் சென்று கை கழுவிக்கொண்டு, சமையலறைப் பக்கமிருந்த தாழ்வாரத்தின் பக்கம் வந் தார்.

"ஐயோ! ஜலம் வைக்க மறந்துவிட்டேனே! இந்தாருங் கள், இதை மத்தியானத்திற்கு வைத்துக்கொள்ளுங்கள்!" என்று ஒரு சிறு பொட்டலத்தைக் கையில் கொடுத்தாள்.

"இதென்ன? எனக்கு ஒன்றும் வேண்டாம் என்றேனே!" என்றார்.

"தோசை! கொஞ்சந்தான் வைத்திருக்கிறேன். மத்தியானம் பூராவும் பட்டினியிருக்கவாவது?" என்றாள் கலியாணி.

அதை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கெஞ்சுவதுபோல் அவளுடைய கண்கள் அவரை நோக்கின.

சர்மா, 'கலியாணி!' என்று கம்மிய குரலில் அவளையழைத்துவிட்டு, அப்படியே இழுத்து ஆலிங்கனம் செய்து, அதரத்தில் முத்தமிட்டார். கலியாணியும், கட்டுண்ட சர்ப்பம்போல், தன்னையறியாது கொந்தளித்த உள்ளத்தின் எதிரொலிக்குச் சிறிது செவிசாய்த்துவிட்டாள். பிரக்ஞை வந்தது போல் நடைமுறைச் சம்பிரதாயங்கள் அவளைத் தாக்கின.

தனது வலிமையற்ற கைகளால் பலமுள்ள வரை அவரை நெட்டித் தள்ளிவிட்டு, முகத்தைத் திருப்பி, "என்னை விட்டுவிடுங்கள்!" என்று பதறினாள்.

சர்மா தமது கைகளை நெகிழ்த்தினார் கலியாணி விலகி நின்றுகொண்டு. "என்ன போங்கள்!" என்று அவரைத் தண்டிப்பது போல் நோக்கினாள்.

சர்மா, "கலியாணி, நான் சொல்வதைக் கேள்!" என்று மறுபடியும் நெருங்கினார். கலியாணி சமையலறைக்குள் சென்று தாளிட்டுக்கொண்டாள். உள்ளிருந்து விம்மி விம்மி அழும் குரல் கேட்டது.

"கலியாணி! கலியாணி!"

பதில் இல்லை.

சர்மாவும் கலங்கிய உள்ளத்துடன் வெளியே சென்றார். கொழுந்து மாமலைக்குச் செல்வது அவருக்கு நிம்மதியை யளிக்கலாம்.

V

கலியாணிக்கு அன்று முழுவதும் மனம் ஒன்றிலும் ஓடவில்லை. முதலில் பயம், தவறு என்ற நினைப்பில் பிறந்த பயம். ஆனால் சர்மாவின் ஸ்பரிசம் அவள் தேகத்தில் இருந்து கொண்டிருப்பது போன்ற நினைவு சுகமாயிருந்தது. அவள் உள்ளத்தின் ரகசியத்தில் சர்மாவின் ஆசைகள் எதிரொலித்தன.

அன்று முழுவதும் அவளுக்கு ஓரிடத்திலும் இருப்புக் கொள்ளவில்லை. சுப்புவையர் மத்தியானம் வந்தார். அவருடைய இயற்கைப் பிரலாபத்துடன் போஜனத்தை முடித்துக்கொண்டு நித்திரை செய்ய ஆரம்பித்தார்.

கலியாணிக்கு அவரைப் பார்க்கும் பொழுதெல்லாம் பரிதாபமாக இருந்தது. தன்னை 'மூத்தாளைப்போல்' இருக்கவில்லை என்று வைதாலும், தன்மீது ஓர் அந்தரங்கமான நம்பிக்கை வைத்திருப்பதால், அதை மோசம் செய்வதா என்று எண்ணினாள்.

கலியாணிக்கு இரண்டையும் ஏக காலத்தில் பிரிய மனமில்லை. வீடு, பேச்சு, சம்பிரதாயம் இதை யெல்லாம் உடைக்க மனம் வரவில்லை. சுப்புவையரை ஏமாற்றவும் மனம் துணியவில்லை. இருளில் வழி தெரியாது தவிக்கும் பாதசாரி, ஏதாவது ஒன்றைத் தனது நம்பிக்கைக்குப் பாத்திரமானது என்று சங்கற்பித்துக்கொண்டு அதை நோக்கிச் செல்லுவது போல், தன் கணவர் நித்தியம் பூஜை செய்யும் கோவிலுக்குச் சென்று, கலங்கிய உள்ளத்திற்குச் சாந்தியை நாடினாள். கோவில் மூல ஸ்தானத்தின் இருளுக்கு இவளது மன இருள் தோற்று விட்டதாகத் தெரியவில்லை. மூலஸ்தானத்தின் மங்கிய தீப வொளியில் லிங்கம் தெரிவது போல் சர்மாவின் முகந்தான் அவள் அகத்தில் பிரதிபலித்துக்கொண்டிருந்தது.

அன்று இரவு கலியாணி சுப்புவையர் பக்கத்தில் உட்கார்ந்து கால் பிடித்துக்கொண்டிருக்கும் பொழுது, அதிகாலையில் எழுந்து ஆற்றிற்குச் சென்று குளித்துவிட்டு வருவதற்கு அனுமதி கேட்டாள். காரணம், சர்மாவின்மீது ஆசை யிருந்தாலும், அவரைச் சந்திக்கா திருக்கவேண்டுமென்ற நினைப்பு.

"விடியக் காலத்தில் ஏன் நதிக்கு...?" என்றார் சுப்புவையர்.

"குளத்தில் ஜலம் வற்றி நாற்றமெடுக்கிறதே என்று யோசித்தேன்!" என்றாள்.

"சரி, சரி, போய்ட்டு வாயேன்; அதுக்கென்ன கேள்வி வேண்டியிருக்கு? நேக்குத் தூக்கம் வருகிறது, சும்மா தொந்தரவு செய்யாதே!" என்று மறுபுறம் திரும்பிப் படுத்துக்கொண்டார்.

கலியாணிக்கு அன்று இரவு முழுவதும் உறக்கம் வரவில்லை. சர்மாவை நினைக்கும் பொழுதெல்லாம் ஒரு மகிழ்ச்சி, அவர் மறுபடியும் தன்னைத் தழுவ மாட்டாரா என்ற ஆசை. இப்படியே தன் பொருளற்ற கனவுகளிடையே அவள் தூங்கினாள்.

* * *

கொழுந்து மாமலைக்குச் சென்ற சர்மாவுக்கு வேலை ஓடவில்லை. அன்று முழுவதும், கலியாணி என்ன நினைப்பாளோ, அவளை மறுபடியும் எப்படிப் பார்ப்பது என்பதே யோசனை. அன்று இரவு முழுவதும் காட்டிலேயே இருந்துவிட்டார். அப்பொழுதும் சாந்தி பிறக்கவில்லை. அதிகாலையில் சென்று சாமானை எடுத்துக்கொண்டு, ஊரை விட்டே போய்விடுவது என்று நினைத்துக்கொண்டு திரும்பினார்.

கொழுந்து மாமலை, ஆற்றுக்கு அக்கரையில் இருந்தது. ஊருக்கு வரவேண்டுமானால் ஆற்றைக் கடந்துதான் வர

வேண்டும். மணி மூன்று இருக்கும் பொழுது ஆற்றங் கரையை யடைந்தார். மனத்தில் சாந்தி பிறக்கவில்லை. உள்ளம் பேய் போலச் சாடியது.

இன்னும் நன்றாக விடியவில்லை. ஆற்றில் யாரோ துணி துவைப்பது போலச் சப்தம். இவ்வளவு அதிகாலையில் அங்கு யார் வர முடியும்?

"யாரது?" என்றார்.

"யாரது?" என்ற பதில் கேள்வி பிறந்தது.

குனிந்து துவைத்துக்கொண்டிருந்த உருவம் நின்றது. ஒரு பெண்.—கலியாணி!

"கலியாணி! நீயா இங்கு!...இந்த நேரத்தில்! பயப்படாதே! நான்தான் சர்மா!"

"நீங்களா!"

அவள் சொல்லி முடியு முன் சர்மா அவளை அப்படியே தழுவிக்கொண்டார். அவள் விலக முயன்றாள். இருவரும் தடுமாறிப் பாதி ஜலத்திலும் பாதி மணலிலும் விழுந்தனர். கலியாணியின் முகத்திலும் அதரத்திலும் மாறி மாறி முத்தமிட்டார். கலியாணி தடுக்கவில்லை. அவருடைய போக்கிற்கெல்லாம் தடை செய்யவில்லை.

சற்று நேரம் கழிந்தது.

"கலியாணி!"

"என்ன?"

"என்னுடன் வந்துவிடு! இந்த மனித நாற்றமே அற்ற விடத்திற்குச் சென்றுவிடுவோம்!"

"ஐயோடி! அது முடியாது!"

அந்த மங்கிய வெளிச்சத்திலும் அவளது மிரண்ட பார்வை மின்னியது.

"பிறகு......?"

"எனக்கு ஒன்றும் தெரியவில்லை. நீங்கள் சொல்லுகிற மாதிரி.........அதற்குப் பயமாக இருக்கிறது!"

சர்மாவுக்கு உலகம் அர்த்தமற்ற கேலிக் கூத்துப் போலும், அசட்டுத்தனம் போலும் பட்டது.

"கலியாணி, நான் போகிறேன்!" என்றார்.

"எங்கே? போகவேண்டாம்! இங்கேயே இருந்து விடுங்கள்!"

"சீ! அது முடியாத காரியம். என்னுடன் வா!" என்று கையைப் பிடித்தார்.

"முடியாது!"

மறுபடியும் அக்கரைப் பக்கம் ஒரு மனித உருவம் சென்று இருளில் மறைந்தது.

கலியாணியின் வாழ்க்கை - அலையில் ஒரு குமிழி உடைந்துபோயிற்று



கதை 10

## கவந்தனும் காமனும்

அலங்கோலமான ஸ்திதியில் ஒரு பெண்!...காலணு அகலம் குங்குமப் பொட்டு, மல்லிகைப் பூ, இன்னும் விளம்பரத்திற்குரிய சரக்குகள்!

---

ஒரு நகரத்திலே......

இரவு மணி எட்டு அல்லது ஒன்பது இருக்கலாம். நாகரிகத்தின் உச்சியைக் காணவேண்டும் என்றால், அந்த நகரத்தை, ஏன்—எந்தப் பட்டணத்தையும், இரவில்தான் பார்க்கவேண்டும்.

நீங்கள் இரவு எட்டு மணிக்குமேல் சென்னைமா நகரில் சுற்றிப் பார்த்திருக்கிறீர்களா? சுற்றியிருந்தால் நான் இங்கே சொல்லும் விஷயம் உங்களுக்குப் பிரமிப்பை உண்டாக்காது.

கண்ணைப் பறிக்கும் விளக்குகள், உள்ளத்தைப் பறிக்கும் நாகரிகம்!

மனிதனின் உயர்வையும், உடைவையும் ஒரே காட்சியில் காண்பிக்கும் நாகரிகச் சின்னங்கள்!

இது கலியுகமல்ல, விளம்பரயுகம் என்பதற்குப் பொருள் தெரியவேண்டுமானால், இந்த நகரத்தின் இரவைக் காணவேண்டும். இந்தக் கூட்டங்கள்!—ஏன் இவ்வளவு அவசரம்? இதுதான் நாகரிகத்தின் அடிப்படையான தத்துவம்—போட்டி, வேகம்!

டிராம் வண்டிகளின் 'கண கண'வென்ற ஒலம். ஒரு வேளை இது நாகரிக யக்ஷனின் வெற்றிச் சிரிப்போ என்னவோ?

பெண்களின் பல் வரிசைக்கு முத்துக் கோத்தாற்போல் என்கிறார்கள். இந்த வரிசையான மின்சார விளக்குகளுக்கு உபமானமாகத் தேவலோகத்திலும் இவ்வளவு பெரிய முத்துக் கிடையாதே!

புதிதாக வந்தவன் மலைத்துப் போகலாம்; உற்சாகப் பட முடியாது.

வெளிச்சம்! வெளிச்சம்! கண்ணைப் பறிக்கும் வெளிச்சம்!

இதுதான் .....தெரு மூலை!

இதுதான் மனித நதியின் சுழிப்பு!

இதற்கு உபநதிகள் போல் பெரிய கட்டடங்களுக் கிடையே ஒண்டி ஒடுங்கிப்போகும் ரஸ்தாக்கள்.

இது வேறு உலகம்!

ஒற்றைப் பாதையில் பாதசாரிகள்; மங்கிய மின்சார விளக்குகள்!

இடையிடையே எங்கிருந்தோ வரும் எக்களிப்புச் சிரிப்பைப் போல் டிராமின் கணகணப்பு.

மணி எட்டுத்தானே சொன்னேன்? கொஞ்ச நேரம் சென்றுவிட்டால், ஆட்கள் நடமாட்ட மிருக்காது. 'ஆசாமிகள்' வருவார்கள். வாடிக்கைக்குக் கிராக்கி உண்டு.

இந்தப் பக்கங்களுக்கு அதற்குமேல் வரவேண்டுமென்றால், 'ஆசாமி'யாக இருக்கவேண்டும்; அல்லது குருடனாக இருக்கவேண்டும்; அல்லது கண்கள் எல்லாவற்றையும் பார்ப்பதற்குத்தான் என்ற இரும்புத் தத்துவம் கொண்ட மனிதனாக இருக்கவேண்டும்.

அதோ மூலையில் சுவரின் அருகில் பார்த்தீர்களா? சிருஷ்டித் தொழில் நடக்கிறது. மனிதர்களா, மிருகங்களா? நீங்கள் போட்டிருக்கிறீர்களே பாப்லின் ஷர்ட்டு, உங்கள் ஷெல் பிரேம் கண்ணாடி!—எல்லாம் அவர்கள்

வயிற்றில் இருக்கவேண்டியதைத் திருடியதுதான். ரொம்ப ஐம்பமாக, நாலுபேருக்காகக் கண்ணை மூடவேண்டாம். எல்லாம் அந்த வயிற்றுக்காகத்தான்.

வீட்டில் இவ்வளவு 'சீப்பாக'க் காரியம் நடத்த முடியாது. ஆனால், உங்களிடம் தத்துவம் பேசிக்கொண்டிருக்க நேரமில்லை.

*　　　*　　　*

தன்னினைவில்லாமலே ஒரு வாலிபன் தெரு வழியாக வருகிறான். களைப்பு, பசி இவை இரண்டுந்தான் அப்பொழுது அவனுக்குத் தெரியும். மனிதனை மிருகமாக்கும் இந்தத் தெரு வழியாகத்தான் அவன் ஆபீஸுக்குச் செல்வது வழக்கம். அந்தப் பெயரற்ற ஆபீஸ், அவனை முப்பது ரூபாய்களுக்குச் சக்கையாகப் பிழிந்தெடுத்த பிறகு, இந்த உணர்ச்சிதான் வருமாக்கும்! அதோ அந்தப் பெண்ணுடன் இருக்கும் ஒருவன் — இவனைவிட அதிகமாகக் கொழுத்த தீனியா தின்கிறான்? அவன் தன்னை மறக்க — யோகிகளைப் போல் அல்ல — குடிக்கிறான். இவனுக்கு அது தெரியாது.

ஒரு மூலை திரும்புகிறான்; சற்று ஒதுக்கமான மூலை.

அலங்கோலமான ஸ்திதியில் ஒரு பெண்! பதினாறு, பதினேழு வயது இருக்கும். காலணா அகலம் குங்குமப் பொட்டு, மல்லிகைப் பூ, இன்னும் விளம்பரத்திற்குரிய சரக்குகள்.

அவளை அவன் கவனிக்கவில்லை.

"என்னப்பா, சும்மாப் போரே? வாரியா?"

வாலிபன் திடுக்கிட்டு நிற்கிறான்.

"நீ என்னப்பா, இதான் மொதல் தரமா? பயப்படரியே?"

கையை எட்டிப் பிடித்தாள்.

"உன் பெய ரென்ன?"

"ஏம் பேரு ஓனக்கு என்னாத்தக்கு?"

இவனுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை ஒரே ஒரு வழிதான் புலப்படுகிறது.

அதற்குள் அவள் சந்திற்குள் இழுக்கிறாள்.

வாலிபன் உடனே மடியிலிருந்த சில்லறைகளையெல்லாம் அவள் கையில் திணித்துவிட்டு, "போ! போ!" என்று அவளை நெட்டித் தள்ளிவிட்டு ஓடிவிடுகிறான்.

"ஏண்டா, பேடிப் பயலே! பிச்சைக்காரின்னு நெனச்சுகினே!" என்று சில்லறைகளை விட்டெறிகிறாள்.

அவன் அதற்குள் ஓடிப் போய்விட்டான்.

இந்த அசம்பாவிதமான செய்கையினால் அவள் மலைக்கிறாள். சற்றே பயம்.

"பேடிப் பயல்! பேமானி!" என்று முணுமுணுத்துக்கொண்டே, இருட்டில் சில்லறையைத் தேடுகிறாள்.

ஆனால் அவனும் அன்று பட்டினி என்று இவளுக்குத் தெரியாது.

எக்காளச் சிரிப்பு மாதிரி, எங்கோ ஒரு பக்கத்திலிருந்து டிராமின் கணகணப்பு!



"அம்மா அ-அ-அ!"

என்ன ஜுர ஜ்வரம்! என்ன பலவீனம்!

கவிஞனின் கனவு போன்ற கண்கள் அவனைக் கவனித்துச் சிரிக்கின்றன.

திரும்புகிறான்.—மாந் தளிரின் நிறம்! மனத்தில் சாந்தியளிக்கக்கூடிய அழகு......

கூந்தல் கறுத்துச் சுருண்டு ஆடையாக முதுகுப் புறத்தை மறைக்கின்றது!

அதுதான் ஆடை!

திடுக்கிட்டு எழ முயற்சிக்கிறான்; முடியவில்லை.

அவள் கரங்கள் அவனை அணைத்துக்கொள்ளுகின்றன.

உதட்டில் அவளுடைய மெல்லிய விரல்கள் பதிந்து, அவனைத் திரும்பவேண்டாம் என்று சமிக்ஞை செய்கின்றன.

அவன் அரசன்! ராஜ மிடுக்கு! அவளோ தாதிப் பெண்!

"காலைப் பிடி!"

பதில் இல்லை. புன்சிரிப்புத்தான். தாயின் கனிவு அவனை யணைத்துக்கொள்ளுகிறது.

"நான் அரசன்! ராஜ மார்த்தாண்ட வர்மன்!...... ஹும்.........?"

பதில் இல்லை.

புன்சிரிப்புத்தான்

அவ்வளவு தைரியமா?

அவளது கேசத்தை அவள் கழுத்தில் முறுக்குகிறான். வெற்றிப் புலிக் கொடி! அவன் கண்கள் இருள்கின்றன.

"மூச்சு!"

"அம்மா! இருள்! இருள்!"

கண்களுள் நட்சத்திரங்கள் தோன்றி மறைகின்றன...

இருள்!

நீலக் கடல்!

ஒரு பிணம் குப்புற மிதக்கின்றது. அதன் முகத்தில் என்ன சாந்தி!



## கதை 17

# ஆண் சிங்கம்

'அவரைக் கண்டீர்களா? சீமாவிடம் கொண்டுவிடுங்கள்!'

'என்னைத் தெரியவில்லையா, என்ன? ருக்மிணி, நான் தான்—சீமா—வந்திருக்கிறேன்!'

'அவரைக் கண்டீர்களா? சீமாவிடம் கொண்டுவிடுங்கள்!'

---

ஸ்ரீனிவாஸனுக்குத் தன்னுடைய கலியாணத்தைப் பற்றி நினைவில் இல்லை. ஏன் என்றால், அது 'பெப்ரமின்ட்' கலியாணம். ஸ்ரீனிவாஸனின் பெற்றோர்கள் பெரியவர்களாகியும் குழந்தைப் பருவம் நீங்காததால் பொம்மைக் கலியாணம் செய்ய ஆசைப்பட்டார்கள். வெறும் மரப் பொம்மையைவிட தங்கள் நாலு வயசுக் குழந்தை சீமாச்சு மேல் என்று பட்டது. பிறகு என்ன? பெண் கிடைக்காமலா போய்விடும்? ஆத்தூர்ப் பண்ணை ஐயர் மகள் ருக்மிணிக்கு இரண்டு வயசு. கலியாணம் ஏக தடபுடல். பெற்றோர் மடியிலிருந்தபடியே சிரஞ்சீவி ஸ்ரீனிவாஸனுக்கும் சௌபாக்கியவதி ருக்மிணியம்மாளுக்கும் திருமணம் நடந்தது. அந்தச் சாக்கினால் சஷ்டியப்த பூர்த்திக்கு முன்பே, திருமண மேடையில் உட்காரும் பாக்கியம் இரு சம்பந்திகளுக்குக் கிடைத்ததுதான் மிச்சம்.

கலியாணம் என்ற பதத்திற்கு அகராதியில் ஓர் அர்த்தம் இருக்கலாம். கவிஞனது வியாக்கியானம் ஒன்று இருக்

கலாம். சட்டம், சாஸ்திரம் இவற்றில் வேறு இருக்கலாம். அதெல்லாம் எனக்குத் தெரியாது. நடைமுறை உலகத்திலே, இந்த மகத்தான கலியுகத்திலே, திருமணம் என்றால் குலப் பெருமை கிளர்த்தும் கலகாரம்பம் என்பது எனக்குத் தெரியும்.

ஸ்ரீனிவாஸன் தகப்பனாரும் தம் சம்பந்தியான ஆத்தூர்ப் பண்ணையாருக்கு இளைத்தவரல்லர். ஆத்தூர்ப் பண்ணையாரும் ஸ்ரீனிவாஸன் தகப்பனாருக்கு மசியக்கூடியவரல்லர். இப்படி இருவருக்கும் ஆரம்பித்த மௌனமான துவந்த யுத்தம், நாளுக்கு நாள் வளர்ந்தது. சீர்வரிசை, மரியாதை இத்யாதி...இத்யாதி காரணம். பரமேச்வர ஐயர் — ஸ்ரீனிவாஸன் தகப்பனார் — தமது பெருமைக் கேற்றபடி, ஆத்தூர்ப் பண்ணை ஐயர் நடந்துகொள்ளவில்லை என்று குறைப் பட்டுக்கொண்டார். அதற்கு ஆதாரமாக, "மாப்பிள்ளை யென்று துரும்பைக் கிள்ளிப் போட்டாலும் விறைத்துக் கொண்டுதான் நிற்கும்;பண்ணைப் பெருமையின் ஜம்பம்கூட அதன்முன் சாயாது!" என்பார்.

ஸ்ரீனிவாசனும் ருக்மிணியும் துவந்த யுத்தத்தில் கலந்துகொள்ளவில்லை. அதைப் பற்றி இருவருக்கும் தெரியாது. ஒவ்வொரு வருஷமும் பரமேச்வர ஐயர் தம் புத்திரனைச் சம்பந்தி வீட்டிற்கு அனுப்பி வைப்பார்; பிறகு இல்லாத கோணவட்டம் எல்லாம் சொல்லிக்கொண்டு வருஷம் பூராவும் பேச, அது ஓர் 'ஐட்டம் நியூஸ்'. ஸ்ரீனிவாசனுக்கு மாமனார் வீட்டிற்குப் போவதென்றால் ரொம்பக் குஷி. ருக்மிணி இருக்கிறாள் என்ற நினைப்பினால் அன்று — பக்ஷணம், நாலைந்து நாள் 'மாப்பிள்ளை' 'மாப்பிள்ளை' என்ற உபசாரம், விளையாட்டு, முதலியவை கிடைக்கும் இடமாயும், அப்பாவின் கோபமும் அடியும் எட்டாத இடமாயும் இருந்ததே காரணம். மேலும், விளையாடுவதற்கு நிரம்பப்

பயல்கள் இருந்தனர். இதனால்தான், மாமா வீடு என்றால் அவனுக்கு வெகு குஷி.

இப்படிப் பத்து வருஷங்கள் கழிந்தன.

சம்பந்திச் சண்டை ஓயவில்லை.

சீமாவும் சின்னப் பையனாக இருந்து மெதுவாகப் பெரிய மனிதனாகிவிட்டான். பரமேச்வர ஐயருக்குப் பையன் வளர வளரக் குதூகலம். ஆத்தூர் பண்ணைக்குப் புத்தி கற்பிக்கச் சாந்தி முகூர்த்தம் என்ற கடைசித் துருப்பை உபயோகிக்க வேண்டிய காலம் நெருங்குவதில் மிகுந்த சந்தோஷம். 'ஆத்தூர்ப் பயலை என்ன செய்கிறேன் பார்!' என்று தம் மனைவியிடம் வீரம் பேசினார். அவருடைய சகதர்மிணியும் தனது கணவன் வீர புருஷன் என்பதில் மிகுதியும் களித்தாள்.

சீமாவும் மாமனார் வீட்டுக்குச் செல்வது படிப்படியாகத் தடைப்பட்டுப் போயிற்று. முதலில் கொஞ்சம் வருத்தந்தான். ஆனால் சீமா புஸ்தகம் படித்தவன் அல்லவா ? அதில் 'தந்தை சொல் மிக்க மந்திரமில்லை' என்று படித்திருக்கிறான். தந்தையின் சொல் - மந்திரத்தைவிட, கை - மந்திரத்தில் அவனுக்கு அதிக அநுபவம் உண்டு. சீமாவும் மாமனாரை வெறுக்க ஆரம்பித்தான். காரணமும் கொஞ்சம் உண்டு. ருக்மிணி முன் போல் அவனுடன் விளையாடுவதில்லை. ஓடி ஒளிய ஆரம்பித்துவிட்டாள். ருக்மிணியின் தகப்பனாரும், அவன் அங்கு ஒரு தடவை சென்றிருந்த பொழுது அவன் தகப்பனாரைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்ததை யெல்லாம், ருக்மிணி வந்து அவனிடம் சொல்லி யழுதாள்.

அவளுக்குச் சீமாவின் தகப்பனாரை எப்படிப் பேசலாம் என்ற வருத்தம். குழந்தை யுள்ளத்தில் தன் இரகசியத்தைச் சீமாவிடம் அவன் அங்குசென்றிருக்கும்பொழுது

சொல்லிவிட்டாள். அதிலிருந்து ருக்மிணி என்றால் சிமா வுக்குத் தனது உள்ளம் என்ற ஒரு பற்றுதல். ஆனால் மாமாவின் மீதும் அத்தையின் மீதும் அடங்காத கோபம். அந்தக் கோபத்தில் ஏற்பட்ட வெறுப்பின் சாயை, சிமா வின் மனவுலகத்தில் ருக்மிணியைத் தீண்டியதும் உண்டு.

ருக்மிணி புஷ்பவதியானாள்.

சடங்குகளும் ஏகத் தடபுடலாக நடந்தன. ஆத்தூர்ப் பண்ணை ஐயர் நேரில் வந்து அழைத்தும், இங்கிருந்து ஒருவரும் போகவில்லை.

ருக்மிணிக்கு மிகுந்த வருத்தம். ஆத்தூர் ஐயரும் குழந்தை ருக்மிணிக்குச் சாந்தி முகூர்த்தம் செய்விக்க ஒரு நல்ல தினத்தைப் பார்த்துப், பரமேச்வர ஐயருக்கு ஒரு கடிதம் எழுதினார்.

பரமேச்வர ஐயருக்கு இந்தக் கடிதத்தைக் கண்டதும் உள்ளம் ஆனந்தக் கூத்தாடியது. தாம் நெடுநாள் எதிர் பார்த்திருந்த தினம் வந்த உற்சாகத்தில் அன்று விருந்து நடத்தினார். பிறகு சம்பந்திக்கு நீண்ட கடிதம் — ஏறக் குறையக் குற்றப் பத்திரிகை - ஒன்று எழுதி, அதில் 5,000 ரூ. கையில் வந்தால்தான் தம் மகன் சாந்தி முகூர்த்தம் செய்வான் என்றும், மேலும் சம்பந்தி ஐயரவர்களின் சீர் வரிசைக் குறைவுகளை யெல்லாம், இப்பொழுது சரிக் கட்டி மன்னிப்புக் கேட்டுக்கொள்ள வேண்டும் என்றும் எழுதியிருந்தார்.

இந்த விஷயத்தில் சிமாவுக்கு ஒரு சிறிது மனத்தாங் கல்தான். இவ்வளவுக்கும் ருக்மிணி, பாவம், என்ன செய் வாள் என்று நினைத்தான். ஆனால் தகப்பனுருக்கு அடங் கிய பிள்ளை; சொல்லவும் முடியவில்லை, மெல்லவும் முடிய வில்லை.

இந்த விஷயத்தைப் பற்றி ருக்மிணி தனக்குக் கடிதம் எழுதுவாள் என்று எதிர்பார்த்தான். அவள் எழுதினால் அவன் நாவல்களில் படித்த கதாநாயகி போல், ருக்மிணியும் தன்னைக் காதலிக்கிறாள் என்று அப்பாவின் கோபத்தையும் எதிர்ப்பதற்குத் தயாராகி யிருந்தான்.

ஆனால் கடிதம் வரவில்லை.

சீமாவுக்குப் பெரிய ஏமாற்றமாக இருந்தது. ஒரு வேளை, நாவல்களில் படித்த மாதிரி, வேறொருவனைக் காதலிக்கிறாளோ என்னவோ? பொம்மைக் கலியாணம் செய்யப்பட்ட பெண், நாவல் சம்பிரதாயப்படி, வேறொருவனைக் காதலித்து............ கடைசியாகப் பிரம்ம சமாஜத்தில் சேர்ந்து கலியாணம் செய்துகொள்ளுவதுதான் சுவாரஸ்யமான முடிவு. அந்தக் கட்டத்தில்தான் கதாசிரியனும், 'வாசகர்களே!' என்று ஆரம்பித்துக் குழந்தைக் கலியாணத்தின் கொடுமைகளைப்பற்றி வியாசம் எழுத முடியும். ............சீமாவின் உள்ளத்தில் என்னென்னவோ எண்ணங்களெல்லாம் குவிந்தன. ஆனால் ருக்மிணியின்மீது ஒரு பெரிய ஏமாற்றந்தான் மிச்சம்.

கடிதம் வரவில்லை.

சீமாவுக்கு ஒரு யோசனை தோன்றியது. ருக்மிணியை இரகசியமாகக் கவனித்தால், அல்லது அவளைச் சந்தித்தால், தன்னைக் காதலிக்கிறாளா இல்லையா என்று கண்டு பிடித்து விடலாமே! அப்பாவுக்குத் தெரியாமல் அங்கே போகவேண்டும்.

சீமா இப்பொழுது சென்னையில் படித்துக்கொண்டிருக்கிறான். அப்பாவுக்குத் தெரியாமல் போவது அவ்வளவு கஷ்டமில்லை. பள்ளிக்கூட மாணவனுக்கா தகப்பனாரிடமிருந்து பணம் தருவிக்க வழி தெரியாது?

## II

ஆத்தூர் ஐயரவர்களுக்குப் பணத் திமிரும் சிறிது உண்டு. பரமேச்வரன் தம் வழிக்கு வராமல் எங்கு போய் விடுவான் என்ற தைரியம். தம் சொற் சக்தியால், பரமேச்வர ஐயர் சீமாவுக்கு வேறு பெண் பார்க்க யத்தனித்தால் தடுத்துவிட முடியும் என்ற தைரியமும் இருந்தது. பயல் சீமாவும் இப்படி இருப்பானா என்றுகூடச் சில சமயம் பேசியதுண்டு. இதைக் கேட்ட சமயமெல்லாம் ருக்மிணிக்குக் கண்ணீர் வரும்.

"அவனை மறந்துவிடு, கொட்டத்தை யடக்கிவிடுகிறேன்!" என்று ருக்மிணியிடம் உபதேசித்த காலங்களும் உண்டு.

"போங்கள் அண்ணா!" என்று கண்ணீர் விட்டு உபவாசம் இருப்பதே ருக்மிணியின் வழக்க மாகிவிடும்போல் இருந்தது. அவள் கணவன் என்ற வார்த்தையின் பூரண அர்த்தத்தை அறிந்தவளல்லள். உள்ளத்திலே ஏதோ தன்னை யறியாத பக்தி, பாசம் சீமாவின்மீது வளர்ந்து கொண்டே யிருந்தது.

சிறு பருவத்தில் அவனுடன் விளையாடியதெல்லாம் ஒன்றுக்குப் பத்தாக உள்ளத்தில் விளையாட ஆரம்பித்தது. எத்தனையோ தடவை 'அவருக்குக் கடிதாசு எழுதவேண்டும்' என்று காகிதங்களை எடுத்து முன்வைத்த நேரங்கள் உண்டு. ஆனால், 'என்ன நினைத்துக் கொள்ளுவாரோ? மாமாவுக்குத் தெரிந்தால் பெரிய அவமானம்,' என்ற பயம்.

ஊர் வாயை மூட முடியுமா? ருக்மிணி வாழாவெட்டியாகிவிட்டாள் என்று ஊர்க் கிழங்களிடையே பேச்சு. ஊர்ச் சிறுமிகளுக்கும் ருக்மிணி என்றால் சிறிது இளக்காரம். ருக்மிணிக்கு ஆறுதலாக ஒருவரும் இல்லை. அவள் தாயார் அவளுடைய தகப்பனாரின் எதிரொலி.

புஷ்பங்களிலே பல வகை யுண்டு. சிலவற்றைப் பார்த்ததும் குதூகலம், விருப்பம் இவை யெல்லாம் பிறக்கும். சில சாந்தியை யளிக்கும். சில உள்ளத்தில் காரணமற்ற துக்கத்தை, சோகத்தை எழுப்பும்.

ருக்மிணி இயற்கையிலேயே நல்ல அழகி. சிறு பிராயத்திலேயே ஆளை விழுங்கும் விழிகள். அதுவும் இயற்கையின் பரிபூரணக் கிருபை இருக்கும் பொழுது! ஆனால் கூம்பிச் சாம்பிய உள்ளத்தின் உள்ளொளி, அவளுடைய துயரம் தேங்கிய கண்களில் பிரதிபலிக்கும். அவளைப் பார்க்கும் பொழுது, நம்மை யறியாது பெருமூச்சு வரும்.

ஊர்ப் பேச்சுக்கும் அவதூறுக்கும் பயந்து, அதிகாலையிலேயே அவள் ஆற்றுக்குச் சென்றுவிட்டு வந்துவிடுவது வழக்கம். ஆத்தூரில் ஊருக்குச் சற்று கூப்பிடு தூரத்தில் தான் ஆறு. ருக்மிணியும் பயமற்றவள்.

அன்று விடியற்கால நிலா பால் போல் காய்ந்து கொண் டிருக்கிறது.

ருக்மிணி குடமெடுத்துக்கொண்டு குனிந்த தலை நிமிராமல் ஆற்றுக்குச் செல்லுகிறாள்.

சற்றுக் கூர்ந்து முகத்துடன் நெருங்கி நோக்கினால் கண்களிலே சந்திரிகையில் பிரதிபலிக்கும் கண்ணீர்.

அந்த ஆறுதான் அவள் கவலையைக் கேட்கும்.

ஆத்தூர் சிறிய ஸ்டேஷன். மூன்று மணி வண்டி கொஞ்ச நேரந்தான் அங்கு நிற்கும். சோமா அதிலிருந்து இறங்கினான். எப்படியாவது ருக்மிணியை அவள் பெற்றோருக்குத் தெரியாமல் காண்பது என்ற நினைப்பு. கண்டு அவளிடம் என்ன பேசுவது, என்ன சொல்லுவது என்றெல்லாம் அவன் யோசிக்கவில்லை. அவளை எப்படித் தனியாக, இரகசியமாகச் சந்திப்பது என்றுகூட எண்ணவில்லை. வீட்டின் பக்கம் சென்றால் வெளி முற்றத்திற்கு வரமாட்டாளா?

வந்தால் தன்னை அடையாளம் கண்டுகொள்ள மாட்டாளா என்ற நம்பிக்கை; தான் அவளைச் சந்தித்து வெகு நாட்களாகிவிட்டது — ஏறக்குறைய ஐந்து வருஷத்திற்கு மேலாகி விட்டது, — என்ற நினைப்பே யில்லை.

ஸ்டேஷனிலிருந்து வந்தால் — அங்கு வண்டிகள் கிடையா; நடந்து வந்தால் — அந்த அப்பாவி ஆற்றைக் கடக்கவேண்டும்.

நடந்து வருகிறான்.

கரையேறி அக்கிரகாரத்திற்கு நேராகச் செல்லும் பாதை வழியாக நடந்து வருகிறான். மனதில் பயம் 'பட் பட்' என்று அடித்துக்கொண்டது.

எதிரே ஒரு பெண் வருகிறாள்.

அவள்தான்!

விதியும் கோழைச் சீமாவின்மீது கருணை கூர்ந்தது போல் அவளை யனுப்பியது.

பால் போன்ற நிலாதான்.

சிற்றாடை கட்டிக்கொண்டு, சில சமயம் சீமா வென்று கூப்பிட்டு, பின்னோடு அலைந்துகொண்டிருந்த ஒரு குழந்தை, திடீரென்று பதினான்கு வயது நங்கையாக, அதிலும் அழகியாக, மாறியதைக் கண்டால் யாருக்குத்தான் அந்த மங்கிய நிலவில் அடையாளம் கண்டுபிடிக்க முடியும்?

அவள் தன்னைக் கடந்து செல்லும்வரை கூர்ந்து கவனித்தான். உள்ளம் அவள்தான் என்று காரணமற்றுக் கூறியது. ஆனால் ஆள் ஜாடை யெல்லாம்.........மெதுவாகப் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டால்...........நம்பிக்கை யாரை விட்டது?

"ருக்மிணி!"

அந்தப் பெண் திடுக்கிட்டு நின்றாள்.

"ருக்மிணி!"

வந்தவள் ருக்மிணிதான். தன் பெயரைக் கூப்பிடக் கேட்டதும், பயம். வாயடைத்த பயம். ஆனால் குரல் ஜாடை எல்லாம் இரண்டாம் முறை சப்தத்தில் யாருடையது மாதிரியோ பட்டது.

"ருக்மிணி!" என்றான் மறுபடியும். சற்று தைரியமாக "யாரது?" என்றாள்.

"நான்தான் சீமா!"

வார்த்தைகளைக் கேட்டதும் அவள் உள்ளத்திலே தாங்க முடியாத குதூகலம்; அதில் பிறந்த சோகம். கண்களில் நீர் தாரை தாரையாகப் பொங்கியது. அழவேண்டுமென்றிருந்தது; சிரிக்கவேண்டுமென்று தோன்றியது. கண்டத்தில் ஏதோ ஒன்று கட்டியாக உருளுவது போல் இருந்தது. உதடுகள் அழவேண்டுமென்று துடித்தன. உதட்டை மெதுவாகக் கடித்துக்கொண்டு விழுங்கினாள்.

"ருக்மிணி, என்னை இன்னும் அடையாளம் தெரியவில்லையா? இன்னும் சந்தேகமா?"

"இல்லை, ஆத்திற்கு வாங்கோ போவோம்!" என்றாள்.

"நான் அங்கே வரவில்லை..."

ருக்மிணிக்கு ஏதோ மனத்தில் அடித்தது மாதிரி இருந்தது.

"உன்னைப் பார்க்கத்தான் வந்தேன். இங்கே வா! ஆற்றங்கரைப் பக்கம் போவோம்!" என்றான்.

"சரி!" என்றாள். சீமாவுக்கு இதில் சிறிது ஆச்சரியந்தான். வெகு துணிச்சல்காரி என்று பட்டது.

"ருக்மிணி, உன்னிடம் ஒன்று கேட்கவேண்டும். கேட்பையோ?"

"சந்தேகமா?"

"பின் ஏன் எனக்குக் கடிதம் எழுதவில்லை?......"

"நினைச்சேன்.........நீங்கள் என்னவாவது நினைச்சுப் பியளோன்னு பயம்."

"இப்படிப் பயப்பட்டா நான் சொன்னபடி எப்படி நடப்பாய்?"

"கட்டாயமாக நடக்கிறேன். சத்தியமாக நடக்கிறேன். சத்தியமா, சத்தியமா......" என்று துடிதுடித்துக்கொண்டு பேசினுள்.

"என் அப்பாவும், மாமாவும் சண்டைப் பிடிச்சுக் கிறுளே, அவர்கள் நம்மைக் கவனித்தார்களா? அவர்களுக்கு ஒரு புத்தி கற்பிக்கவேண்டும். நாம் இருவரும் அவாளுக்குத் தெரியாமல் எங்காவது போய்விட வேண்டும். நீ என்னுடன் வருகிறுயா? கட்டாயம் வருகிறுயா? கையடித்துக் கொடு!"

"வருகிறேன் சீ......" தன்னை யறியாமல் பழைய சிறு குழந்தை நினைவிலேயே முடிக்கப்போனுள். திடீரென்று கணவன் என்ற மரியாதை நினைவு அவளைக் குழப்பியடித்து விட்டது. மரியாதைக் குறைவாகப் பேசியதற்குக் கோபித்துக் கொள்ளுவாரோஎன்ற நினைவில் விம்மினுள்.

விம்மலுடன், "மன்னியுங்கோ!" என்ற வார்த்தை வெளிவந்தது.

சீமாவுக்கு ருக்மிணி தன்னை மறக்கவில்லை என்பதில் பரிபூரண ஆனந்தம்.

"ருக்மிணி, நீ என்னைச் சீமா என்று கூப்பிட்டால் தான்......!" என்று அவள் சத்தியம் செய்வதற்கு எடுத்த கையைத் தனது கரத்தில் பற்றினுன். அவள் கை எவ்வளவு மெதுவாகப் புஷ்பம் போல் இருக்கிறது என்ற உணர்ச்சியில் உள்ளத்திலிருந்து ஏதோ ஒன்று உடல் பூராவாகப் பாய்வது போல் இருந்தது.

ருக்மிணியும் கரத்தை இழுக்கவில்லை. இழுக்க இயலாதபடி வசியிழந்தாள். கூச்சமும் நாணமும் முகத்தைச் செக்கச் சிவக்கச் செய்தன.

“நீங்கள் இப்படிக் கேட்டால்

“சொன்னத்தான்......”

“சீமா!” என்று மெதுவாக அவன் காதோடு கூறினாள்......அதரங்கள் என்றும் மலராத விதம் மலர்ந்தன.

சீமாவின் கரங்கள் அவள் இடையில் மெதுவாகச் சுருண்டன.

அவள் இடையிலிருந்த குடம் கை சோர்ந்து மண்ணுக்கு நழுவியது.

“ருக்மிணி!......நான் சொன்னபடி கேட்பையோ?”

“இன்னும் சந்தேகமா?......நீங்கள் கூப்பிட்ட இடத்திற்கு வருகிறேன்.”

அவள் கண்களில் களிப்பின் வெறி துள்ளியது. ஒரு கொஞ்சுதலும் குழைவும் காணப்பட்டது.

ருக்மிணி அவனது மார்பில் சாய்ந்தாள்..............

“ருக்மிணி, நான் வந்ததாக ஒருவருக்கும் தெரியக்கூடாது. உன் அப்பாவுக்குக்கூட.........”

“ஆகட்டும்.”

இருவருக்கும் பிரிய மனம் வரவில்லை.

“ருக்மிணி!”

“சீமா!”

அவள் கரத்தில் முத்தமிட்டான்.

அவளைச் சுற்றி யிருந்த கரங்களை மீட்டான்.

குழந்தை ருக்மிணி நாணத்தினால் தழுதழுத்த குரலில் மெதுவாக “நான்...” என்றாள்.

சடக்கென்று சீமா விலகிக்கொண்டு, "போய் வருகிறேன் கண்ணே!" என்று வெகு வேகமாகச் சென்றான்.

ருக்மிணிக்குத் துக்கம் நெஞ்சை யடைத்தது. அவன் முதுகில் வைத்த கண் மாறாமல் பார்த்துக்கொண் டிருந்தாள். விம்மி விம்மி மூச்சு வந்துகொண்டிருந்தது.

ஆற்றின் அக்கரையை யடைந்ததும் சீமா திரும்பிப் பார்த்தான்.

ருக்மிணி அவன் இருந்த திக்கில் கும்பிட்டாள்.

ருக்மிணியின் நெஞ்சில் மறுபடியும் மேகம் கவிந்தது.

நடந்த கனவு மறைந்தது.

## III

ருக்மிணி கணவனுக்குக் கொடுத்த வாக்குத்தத்தத்தை மறக்கவில்லை. பெற்றோரிடம் கூறவில்லை. ஆனால் இயற்கை கூறாது விடவில்லை. ருக்மிணி தனது கணவனின் நினைவை மறவாத வண்ணம் இயற்கை கருணை புரிந்தது.

இரண்டு மாத காலத்தில் இயற்கையின் கோளாறுகள் அவள்மீது தோன்றலாயின. வீட்டிற்குத் தெரியாது போய்விடுமா?

பண்ணை ஐயர் திடுக்கிட்டுப் போய்விட்டார். சீமாவைப் பற்றி அவர் நினைக்கவே யில்லை. அவாது குற்றம் என்று உள்ளம் கூறியது. க்ஷாத்திரத்தை யெல்லாம் மகளின்மீது தாக்கினார். "யார் என்று சொல்? பயலைத் தொலைத்து விடுகிறேன்!" என்று கர்ஜித்தார். இதற்கு மேல் தாயாரின் பிடுங்கல் வேறு. ருக்மிணி ஒன்றுக்கும் பதில் சொல்லவில்லை. கணவன் இட்ட பணியை மறப்பாளா? அவர் வருவார், கடிதம் எழுதுவார் என்ற நம்பிக்கை இருக்கும்போது......

இரகசியம் என்பது சில விஷயங்களில் வெகு கஷ்டமான காரியம். ஊரில் மெதுவாகப் பரவியது. ஊர்ப் பேச்சுக்

ருக் கேட்பானேன்! ஒன்றுக்குப் பத்தாகத் திரிந்தது. எந்த ஊர்க் குருவியோ போய்ப் பரமேச்வர ஐயர் குடும்பத்திற்கும் கூறிவிட்டது. பரமேச்வர ஐயருக்கு நெஞ்சில் அடித்த மாதிரி இருந்தது. ருக்மிணியின்மீது அவருக்கு உள்ளூர ஒரு பாசம் இருந்துவந்தது. முதலில் நம்ப முடியவில்லை. சமாசாரமும் உண்மை என்ற பிறகு என்ன செய்ய முடியும்? சம்பந்தியின் மீதிருந்த க்ஷாத்திரத்தையெல்லாம் ருக்மிணியின்மீது சுமத்தி மகனுக்கு நீண்ட கடிதம் எழுதி விட்டார்.

முன்பு சீமாவுக்குப் பணம் எடுத்துக்கொண்டு ருக்மிணியுடன் ஓடிப் போகவேண்டுமென்ற ஆசை, நம்பிக்கை இரண்டும் இருந்தன. இப்பொழுது அந்த நம்பிக்கை பறந்து போய்விட்டது. தான்தான் குற்றவாளி என்று அப்பாவிடம் கூச்சமில்லாமல் எப்படிச் சொல்லுவது? மேலும் ருக்மிணியின் மீது பழி ஏற்பட்டுவிட்டதே! அவளை எப்படி ஊரார் அறியாமல் வைத்து வாழ்வது? சீமாவின் மனம் கலங்கியது.

இச்சமயம் ருக்மிணியிடமிருந்து கிளறிக் கிளறிக் கண்ணீரால் நனைந்த ஒரு கடிதம் வந்தது. அவளைக் கூட்டிக்கொண்டு போய்விட வேண்டுமாம். முன்பு சொன்னபடி சீக்கிரம் வரவேணுமாம். அப்பா வையராராம். வீடு நரகமாக இருக்காம். அப்பாவிடம் சொல்லவில்லையாம். இந்தக் குழந்தைக்குத்தான் என்ன நம்பிக்கை!

சீமாவுக்கு என்ன பதில் எழுதுவது என்று தெரியவில்லை. தைரியம் இல்லை. பேசாமல் இருந்துவிட்டான்.

ருக்மிணியைப் பற்றி இரவெல்லாம் நினைத்து அழுதான், கண்ணீர் விட்டான். அவ்வளவுதான்.

ஆனால், தகப்பனாருக்கு வேறு கலியாணம் செய்து கொள்ளப்போவதில்லை என்று மட்டுமே எழுதத் தைரியம்

இருந்தது. அப்பா இருக்கும் இடத்திற்கும் சென்னைக்கும் வெகுதூர மல்லவா? அதனால்தான் தைரிய மிருந்தது. மேல் படிப்பிற்கு அவசியம் 200 ரூ. வேண்டுமாம்......அந்தப் பொய் சொல்லியாவது......

ருக்மிணி, கடிதத்தை எதிர்பார்த்தாள். அது எப்படி வரும்?............உள்ளூர ஏற்பட்ட இந்த மன உளைச்சலாலும், ஹ்ருதய உடைவாலும் சீமா நிறுவிய இலட்சியம் சிதைந்து போயிற்று.

அந்த அதிர்ச்சியில் மூளை குழம்பிவிட்டது.

"அவர் வந்துவிட்டாரா? சீமா வந்தாச்சோ?" இது தான் புலம்பல் இரவும் பகலும்.

அவளது குழம்பிய மனத்தில், "சென்னைக்கே அவரிடம் சென்றுவிட்டால்?..." என்று பட்டது.

பித்தத்தில்தான் மூளை வெகு கூர்மையாக வேலை செய்யும். இரவு எல்லோரும் படுத்த பிறகு அப்பாவின் பெட்டியைத் திறந்து பணத்தை எடுத்துக்கொண்டாள். அன்று சீமா விடியற்காலையில் சென்ற வண்டியில் போய் விடவேண்டும் என்ற திட்டம். பித்தத்தின் கதியை என்ன சொல்வது! நினைத்தபடி செய்து முடித்தாள்.

வண்டி சாயங்காலம் சென்னையில் கொண்டுவந்து சேர்த்தது.

பிறகு.........?

அவளுக்குத் தெரியவில்லை.

பித்தத்தின் வேகம் அதிகமாயிற்று.

"அவரைக் கண்டீர்களா? சீமாவிடம் கொண்டுவிடுங்கள்!" இவைதான் வார்த்தைகள்.

சென்னையில் கேட்கவா வேண்டும், அதிலும் ஒரு அழகிய சிறு பெண் அலங்கோலமாகப் போகும்பொழுது!

அவளைத் தொடர்ந்து காலிக் கூட்டம், முக்கால்வாசி சிறுவர்கள் கும்பல், கூடித் தொடர்ந்தது.

சில விடர்களும் தொடர்ந்தார்கள்.

ருக்மிணியும் ஏகாக்கிரசிந்தையாக அதே புலம்பலுடன் சென்றாள்.

சிலர் சிரித்தார்கள். சிலர் துக்கப்பட்டார்கள். சென்னையின் அவசரத்தில் வேறு என்ன செய்ய முடியும்? மற்றவர்களுடன் வருத்தத்துடன் பேசிக்கொண்டு சென்றார்கள்.

அன்று சீமாவுக்கு உதவி செய்த குருட்டு விதி அவனை அங்கு கொண்டு தள்ளி, மறுபடியும் உதவி என்ற தனது விளையாட்டை ஆரம்பித்தது.

அவனும் அவள் வந்த தெருவில் அவளை நோக்கி வந்துகொண்டிருந்தான்.

கூட்டத்தை விலக்கிக்கொண்டு அவளிடம் சென்று, "ருக்மிணி!" என்றான்.

"அவரைக் கண்டீர்களா? சீமாவிடம் கொண்டுவிடுங்கள்!" என்றாள்.

அவள் குரலில் ஒரு சோகம் — நம்பிக்கை யிழந்த சோகம் — தொனித்தது.

கண்களில் அவனைக் கண்டுகொண்டதாகக் குறிகள் ஒன்றும் தெரியவில்லை.

"என்னைத் தெரியவில்லையா, என்ன? ருக்மிணி, நான் தான் — சீமா — வந்திருக்கிறேன்!"

"அவரைக் கண்டீர்களா ? சீமாவிடம் கொண்டுவிடுங்கள்!" என்றாள் மறுபடியும் ; குரலில் அதே தொனிப்பு.

அவளிடம் விவாதம் செய்யாமல், ஒரு வண்டி பிடித்து அவளை ஏற்றிக்கொண்டு சென்றான். துக்கம் நெஞ்சை யடைத்துக்கொண்டது. என்ன மாறுதல்? கசங்கிய மலர்!

வண்டியில் போகும்போது மறுபடியும், "அவரைக் கண்டீர்களா? சீமாவிடம் கொண்டுவிடுங்கள்!" என்றாள்.

சீமாவுக்குப் பதில் பேச முடியவில்லை.........

பிறகாவது அவள் அவனைக் கண்டுகொண்டாளோ என்னவோ? எனக்கு அது தெரியாது.



கதை 18

# இது மிஷின் யுகம்!

*கொஞ்சமாவது கலை வேண்டுமே! அதேபடி பட்டியல் ஒப்புவிக்கிறான். சிரிப்பா, பேச்சா? அதற்கு நேரம் எங்கே? அவன் மனிதனா, யந்திரமா?*

---

நான் அன்று ஒரு முழ நீளம் பெயர் கொண்ட,—ஹோட்டல்காரர்களுக்கும் நாடகக்காரர்களுக்குந்தான் வாயில் நுழையாத பெயர் வைக்க நன்றாகத் தெரியுமே—ஹோட்டலுக்குச் சென்றேன்.

உள்ளே எப்பொழுதும் போல் அமளி; கிளாஸ், ப்ளேட் மோதும் சப்தங்கள். 'அதைக் கொண்டுவா, இதைக் கொண்டுவா!' என்ற அதிகாரங்கள், இடையிலே உல்லாச சம்பாஷணை, சிரிப்பு.

போய் உட்கார்ந்தேன்.

"ஸார், என்ன வேண்டும்?"

"என்ன இருக்கிறது?" என்று ஏதோ யோசனையில் கேட்டுவிட்டேன்.

அவ்வளவுதான். கடல்மடை திறந்தது போல், பக்ஷணப் பெயர்கள் செவித் தொளைகளைத் தகர்த்தன.

"சரி, சரி, ஒரு ப்ளேட் பூரி கிழங்கு!"...அது அவன் பட்டியலில் இல்லாதது. முகத்தில் ஏதாவது குறி தோன்ற வேண்டுமே? உள்ளே போகிறான்.

"ஒரு ஐஸ் வாட்டர்!"

"என்னப்பா, எவ்வளவு நேரம் காத்திருக்கிறது?"

## இது மிஷின் யுகம்!

"என்ன கிஷ்ணு, அவர் எவ்வளவு நேரம் காத்திருக்கிறது?"

"இதோ வந்துட்டது, ஸார்!" என்று ஓர் அதிகாரக் குரல் கொஞ்சலில் முடிந்தது.

"காப்பி இரண்டு கப்!"

இவ்வளவுக்கும் இடையில் கிருஷ்ணன் ஒரு கையில் நான் கேட்டதும், மற்றதில் ஐஸ் வாட்டரும் எடுத்துவருகிறான்.

"ஸேவரி (கார பக்ஷண வகை) எதாகிலும் கொண்டா!"

"இதோ, ஸார்!"

"பில்!"

உடனே கையிலிருந்த பில் புஸ்தகத்தில், லேசாக எழுதி, மேஜையில் சிந்திய காப்பியில் ஒட்ட வைத்துவிட்டு, ஸேவரி எடுக்கப் போகிறான்.

"ஒரு கூல் டிரிங்க்!"

"ஐஸ் கிரீம்!"

பேசாமல், உள்ளே போகிறான். முகத்தில் ஒரே குறி.

அதற்குள் இன்னொரு கூட்டம் வருகிறது.

"ஹாட்டாக என்ன இருக்கிறது?"

"குஞ்சா லாடு, பாஸந்தி......"

"ஸேவரியில்?"

கொஞ்சமாவது கவலை வேண்டுமே! அதேபடி பட்டியல் ஒப்புவிக்கிறான். சிரிப்பா, பேச்சா? அதற்கு நேரம் எங்கே? அவன் மனிதனா, யந்திரமா?

"ஐஸ் வாட்டர்!"

"ஒரு கிரஷ்!"

"நாலு பிளேட் ஜாங்கிரி!"

கொஞ்சம் அதிகாரமான குரல்கள்தான். அவன் முகத்தில், அதே குறி, அதே நடை.

நான், உள்பக்கத்திற்குப் போகும் பாதையில் உட்கார்ந்திருந்தேன். என் மேஜையைக் கவனித்துக்கொண்டு உள்ளே போகிறான்.

மனத்திற்குள் "ரம ணேஸமாக மவரு" என்று கீர்த்தனம்! உள்ளத்தை விட்டு வெளியேயும் சற்று உலாவியது. அப்பா!

திரும்பி வருகிறான் கையில் பண்டங்களுடன். பரிமாறியாகிவிட்டது.

என்னிடம் வந்து பில் எழுதியாகிவிட்டது. எல்லாம் பழக்க வாசனை, யந்திரம் மாதிரி.

"ஸார், உங்கள் கைக்குட்டை கீழே விழுந்துவிட்டது, ஸார்!"

அவன் குனிகிறான் எடுக்க. நானே எடுத்துக்கொண்டேன்.

மனிதன் தான்!

"ஒரு ஐஸ்கிரீம்!"

திரும்பவும் மெஷினாகிவிட்டான்!



கதை 19

## அகல்யை

*அவர் மனத்தில் சாந்தி......*
*அவள் மனத்திலோ ஊழியின் இறுதிக் கூத்து!*

---

வேதகாலம்.

சிந்து நதி தீரத்திலே....

இப்பொழுது போல் அல்ல. செழித்த காடுகள்; புல்வெளிகள்; இடையிடையே சிறு சிறு குடிசைகளில் மனிதக் கூட்டங்கள். எங்கெங்கோ, அதிக நெருக்கமாக, ஜாஸ்தியாக மனிதக் கூட்டங்கள் வசிக்கும் இடம் நகரம் என்ற ஹோதாவில் விளங்கும் — அதில் அரசன் இருப்பான்—அதனால் அது தலை நகர்.

இவ்வளவும் தாண்டி ஜன சஞ்சாரமே இல்லாத பாகம். சிந்து நதி ஹிமயத்தின் மடியை விட்டுச் சமவெளிக்கு வர ஆரம்பிக்கும் இடம். மரமும் கொடியும் மனிதனின் வெற்றியைக் காணாதவை. சிந்துவின் கன்னிப் பருவம்— நதி களங்கமற்ற உள்ளத்தைப் போல் பாறைகளைத் தழுவிச் சுழித்துச் சிரித்துச் சென்றது.

அங்கே கௌதமருடைய வாசஸ்தலம் சற்று காட்டின் உள்ளே தள்ளி. சிந்துவின் கரைக்கும் குடிசைக்கும் கூப்பிடு தூரம்.

குடிசைக்குப் பக்கத்தில் சிறிது தள்ளி வடக்குப் புறமாகச் செழித்த புல் வெளி. தூரத்திலே ஹிமவானின்

பனிச் சிகரம், இவர்களுக்கு எப்பொழுதும் தீங்கு வராமல் கவனிப்பது போல் இருந்தது.

கௌதமர் அந்தணர், அதாவது வித்தைக்கும் கலைக்கும் தமது வாழ்க்கையை அர்ப்பணம் செய்துவிட்டவர். அது ஒரு காலம். வாலிபர்களுக்கு—சிறுவர்களுக்கு— வித்தையைப் போதிப்பதில் ஒரு பிரேமை. அதெல்லாம் பழைய கதை.

அப்பொழுது, இந்த அகண்ட உலகத்தில் உள்ள சராசரங்களின் அழகு, அதன் காரணம், அதன் மூலம் இவை யெல்லாவற்றையும் அறிய ஓர் ஆர்வம். அதனால் தான் இந்தத் தனியிடத்தில் வந்து நிம்மதியாகத் தமது ஆசையைப் பூர்த்தி செய்துகொள்ளத் தனித்திருக்கிறார். சமூகத்தை விட்டு விலகித் தமது பத்தினியுடன் இங்கு வசித்து வருகிறார்.

அவருக்கு வயது முப்பது. கறுத்து அடர்ந்த தாடி, அகன்று பிரகாசமான ஒளிவிடும் கண்கள், மெல்லிய உதடு, பரந்து விரிந்து திரண்ட மார்பு, ஒடுங்கிய வயிறு, எல்லாவற்றிலும் இயற்கையின் கனிவு பொங்கியது. மிருக அழகன்று — ஆளை மயக்காது, வசீகரிக்கும். அந்தக் கண்களில், அந்த உதடுகளில் ஒரு தெய்வீக ஒளி—தேஜஸ்— உள்ளத்தின் சாந்தியை எடுத்துக் காட்டிற்று.

அவர் மனைவி,— அவள்தான் அகலிகை. அவர் ஆணுக்கு இலட்சியம் என்றால், இவள் பெண் குலத்திற்கு வெற்றி. மருண்ட பார்வை, அவரைக் காணுந்தோறும் காதல் பொங்கும் கண்கள். அவரைத் தனது உள்ளத்தில் மட்டும் வைத்துவிடவில்லை. அவளது ஒவ்வொரு செயலும் அவரது இன்பத்திற்காகவே. 'அதிலே அவளுக்கு ஓர் இன்பம்.

கௌதமரும் இவளைக் காதலிக்கிறார். ஆனால் அவர் காதல் காட்டாறு போன்றதன்று — சாந்தியிலே பிறந்தது. அவர் மனம் இடியச் செய்ய ஒரு லேசான வழி, அவள் மேல் ஒரு துரும்பை எடுத்து வீசினாலும் போதும். அவருடைய காதலின் உயர்வை அவள் அறிந்திருந்தாள். அவள் கற்புள்ளவளாக இருந்ததில் ஆச்சரியமில்லை. அவர் அவளுடைய இலட்சியம். அதனால், அவள் கற்புடன் இருந்ததில் என்ன அதிசயம்!

## II

ஒரு நாள் சாயங்காலம். சூரியன் இன்னும் அஸ்தமிக்கவில்லை. தூரத்திலிருக்கும் பனி மலைகள் செந்தழலாகக் கனிந்தன. அகல்யை குடிசைக்குள்ளிருந்து குடத்தை இடுப்பில் ஏந்திய வண்ணம் வெளிமுற்றத்திற்கு வருகிறாள். அந்த வெளிமுற்றத்தில் கௌதமர் ஒரு கிரந்தத்தை வாசித்துக்கொண்டிருக்கிறார். பக்கத்தில் வந்து நிற்கிறாள்.

கௌதமருக்குச் சற்று நேரம் அவள் இருப்பது தெரியாது. கிரந்தத்தில் இருந்த லயிப்பு அப்படி. பிறகு வந்திருக்கிறது தெரிந்தது. அன்பு கனிந்த பார்வையுடன் சிரித்துக்கொண்டு, "என்ன அகல்யா, நேரமாகிவிட்டதா? குளிக்கவா? நான் கொஞ்சம் கழித்து வருகிறேன். கிரந்தத்தில் கொஞ்சந்தான் பாக்கி யிருக்கிறது!" என்றார்.

குடத்தைக் கீழே வைத்துவிட்டு அவர் தலையை மார்புடன் சேர்த்தணைக்கிறாள். நெற்றியில் அவள் அதரங்கள் படிந்து அப்படியே சற்று நேரம் இருக்கின்றன.

"நான் வருகிறேன்!" என்று குடத்தை எடுத்துக்கொண்டு நதிக்குச் செல்லுகிறாள். அவள் மனத்தில் ஓர் ஏமாற்றம்,—இத்தனை நேரம் எதிர்பார்த்திருந்தது நடக்கா

ததினால்,—கணவருடன் சிரித்தும் குதூகலமாக விளையாடிக்கொண்டும் நதிக்குச் செல்ல முடியாமையினால். அவர்மீது கோபமும் இல்லை.

அவள் வெகு வேகமாக நதியை யடைகிறாள். உடைகளைத் துவைப்பது, குடத்தைத் தேய்ப்பது, — எல்லாம் வெகு துரிதமாக நடக்கின்றன.

உடைகளையெல்லாம் களைந்து பாறையின்மீது வைத்து விட்டு நீரில் குதிக்கிறாள். அந்தக் குளிர்ந்த நீரில் நீந்தி விளையாடுவதில் என்ன இன்பமோ! ஆழமான சிந்துவில் முக்குளிப்பதும், மறுபடியும் பாறையில் ஏறிக் குதித்து நீந்துவதுமாக, அதிலேயே லயித்துப் போய்விட்டாள்.

அப்பொழுது எங்கிருந்தோ இந்திரன் எதிர்க் கரையில் வந்தான். அகல்யையின் கட்டழகு அவனைக் கல்லாகச் சமைத்தது; வைத்த கண் மாறாமல் பார்க்கும்படி செய்தது. அவளை எப்படியேனும் அடைய வேண்டும் என்று தீர்மானித்துக்கொண்டு, அவளை நெருங்க ஒரு பாறையில் இறங்கினான்.

இந்தச் சப்தம் அகல்யையின் காதில் விழுகிறது.

திரும்பிப் பார்க்கிறாள். ஓர் ஆடவன்! நேர்மையற்ற மிருக உணர்ச்சி பொருந்திய முகம்! அழகுதான்! நெருங்குவதின் அர்த்தம் அவளுக்குப் பட்டது. அப்படியே வெறித்து ஒரு கோபப் பார்வை பார்க்கிறாள்.

இந்திரன் நடு நடுங்கி அப்படியே நின்றுவிட்டான். இப்படி எதிர்பார்க்கவில்லை அவன்.

அகல்யா ஒரு பாறையின் பக்கத்தில் மறைந்து உடைகளைச் சீக்கிரம் அணிந்துகொண்டு, குடத்தில் தண்ணீருடன், வெகு வேகமாகக் கரையேறிச் சென்று விடுகிறாள்.

இந்திரன் மனத்தில் அவளை அடையவேண்டும், அடையவேண்டும் என்ற ஒரே எண்ணந்தான். அவன்

யார், தான் செய்யப் புகுந்தது என்ன என்று எண்ண மனத்தில் இடமில்லை.

பைத்தியம் பிடித்தவள் போல் ஒரே வெறித்த பார்வையுடன் சென்றுகொண்டிருக்கும் அவள் எதிரே கௌதமர் வருகிறார். குடம் கையிலிருந்து நழுவுகிறது. ஓரே ஓட்டமாக ஓடி அவர் மார்பில் விழுந்து கோவென்று கதறுகிறாள்.

கௌதமர் அவளை யணைத்த வண்ணம், "என்ன? என்ன?" என்றார்.

தேம்பிக்கொண்டே நடந்ததைத் தெரிவிக்கிறாள். அவளைத் தேற்றிக் குடிசைக்குக் கொண்டுவிட வேண்டியிருந்தது. அவளது உயர்ந்த காதல், அதன் முடிவாக, அதன் சிகரமாக இருக்கும் அவள் கற்பு, அவருக்கு ஒரு புதிய உண்மையைத் தெரிவிக்கிறது; அதுதான் மற்ற ஆண்களிடம் மனத்திலே ஏற்படும் அருவருப்பு.

## III

இந்திரன் ஒரே தடவையில் தனது எண்ணம் ஈடேறச் சமயம் எதிர்பார்த்திருந்தான்.

இதெல்லாம் அகல்யைக்குத் தெரியாது. ஏதோ ஒரு பெருங் குற்றத்தை, மனத்திற்கு ஓவ்வாத குற்றத்தைச் செய்தது போல் அவள் உள்ளம் கொந்தளித்துக்கொண்டிருந்தது.

கௌதமருடைய அன்பும் காதலும் அவளைத் தேற்றின. அன்று அவர்கள் தூங்க நெடு நேரம் சென்றது.

"உனக்காக எல்லாரும் குருடராக இருக்க முடியுமா?" என்றார் கௌதமர்.

"ஆனால் ஆந்தையாகவா விழிக்கவேண்டும்?" என்றாள் அகல்யை.

இந்திரன், தனது பைசாச உணர்ச்சியைப் பூர்த்தி செய்துகொள்ள எப்பொழுது சமயம் கிடைக்கும் என்று சுற்றி வருகிறான்.

விடியற்காலம் என்று கௌதமரை நினைக்கும்படி செய்து அவரை அப்புறப்படுத்திவிட்டால் ஆசை பூர்த்தியாகும்.

நடு நிசி. சந்திரனற்ற வானம். வெள்ளி மட்டும் கொஞ்சம் பிரகாசமாக, விடியற்காலம் என்று நினைக்கும்படி, மங்கிய வெளிச்சத்தைத் தருகிறது. இந்திரன் கோழி மாதிரிக் கூவுகிறான்.

குடிசையினுள் அகல்யாவைத் தழுவியும் தழுவாமலும் உறங்குகிறார் கௌதமர். அவருக்கு எப்பொழுதும் பிசாசுத் தூக்கம் கிடையாது. கோழியின் குரல் கேட்டதும் காலைக்கடனைக் கழிக்க எழுந்து சிந்துக் கரைக்குச் செல்லுகிறார்.

அன்று நெடு நேரமாகத் தூங்காததினால் அகல்யைக்கு அயர்ந்த தூக்கம்.

பாதிக் கனவு, பாதித் தூக்கம். கணவனுடன் கொஞ்சித் தழுவி அவருடனேயே இருப்பது போல் கனவு. இந்திரன் பூனை போல மெதுவாக உள்ளே வருகிறான். ஆடைகள் சற்று நெகிழ்ந்து உறங்கும் அபலையைப் பார்க்கிறான்.

ஒரு மிருகத்தின் வேட்கை அன்று பூர்த்தியாயிற்று.

பாதிக் கனவு - உலகத்திலிருந்த அகல்யை விழிக்கவில்லை. கணவர் என்று நினைத்துத் தழுவுகிறாள். ஓரளவு இயற்கையின் வெற்றி.

கணவரை முத்தமிடக் கண்களை விழிக்கிறாள்.

ஐயோ, அந்தச் சண்டாளன்!—எல்லாம் சுழலுகிறது. ஒன்றும் அர்த்தமாகவில்லை. சொந்த வீட்டிற்குள் இவன் எப்படி......?

பக்கத்திலிருந்த தடியால் அவன் மண்டையில் அடித்து உதறித் தள்ளிவிட்டு, ஒரு புறம் கிடந்து புரண்டு துடிக்கிறாள்.

இந்திரனுக்குச் சுய அறிவு வருகிறது. தன் பைத்தியக்காரத்தனம், . தன் மிருகத்தனமான கொடுமை !...... அவன் உள்ளமே வெடித்துவிடும் போல் இருக்கிறது'

நதிக்குச் சென்ற கௌதமர் இன்னும் விடியாததைக் கண்டு,ஏதோ சூது நடந்திருக்கிறதென்று விரைந்துவருகிறார்.

உள்ளே சரேலென்று நுழைந்ததும், அகல்யை கிடக்கும் கோலத்தில், காரியம் மிஞ்சிவிட்டது என்று அறிந்தார். உடனே தம் மனைவியை வாரி எடுக்கிறார். தீயில் பட்ட புழுப் போல் அவள் உடல் துடித்துப் பதறுகிறது.

குற்றத்தின் பாரமே உருவாக இந்திரன் நிற்கிறான். "அப்பா இந்திரா! உலகத்துப் பெண்களைச் சற்று சகோதரிகளாக நினைக்கக் கூடாதா ?"

"கண்ணே அகல்யா, அந்தச் சமயத்தில் உனது உடலுமா உணர்ச்சியற்ற கல்லாய்ச் சமைந்துவிட்டது ?" என்று அவள் தலையைத் தடவிக் கொடுக்கிறார்.

அவர் மனத்தில் ஒரு சாந்தி.

ஒரு புதிய உண்மை:

'உணர்ச்சி தேவனையும் மிருக மாக்கிவிடுகிறது. மனத் தூய்மையில்தான் கற்பு. சந்தர்ப்பத்தால் உடல் களங்க மானால் அபலை என்ன செய்ய முடியும் ?'

மௌனம்.

"இந்திரா! போய்வா!" என்றார் கௌதமர். அப்பொழுதும் அவர் மனத்தின் சாந்தி தெளிவாகத் தெரிந்தது.

அகல்யை ?

அவள் உள்ளத்தில் நிகழ்ந்த ஊழியின் இறுதிக் கூத்து, கணவனின் சாந்திக்குப் பகைப்புலமாக நின்றது.

## கதை 20

# சங்குத் தேவனின் தர்மம்

'ஏ ஆச்சி! இன்னு இதை வச்சுக்க! முதல் பேரனுக்கு என் பேரிடு!'

'என்ன பேரு இட?'

'சங்குத் தேவரின்னு!'

'வேண்டாம், வேண்டாம்! என்னை விட்டிடுங்க!...'

---

முறுக்குப் பாட்டி முத்தாச்சி யென்றால் சிறு குழந்தைகளுக்குத்தான் தெரியும். அவள் நாவல் உலகில் காணப்படும் மனித உருவங்கள் போல், முறுக்கு விற்ற பணத்தினாலோ, ரங்கூனிலிருந்து திடீரெனத் தோன்றும் தமயனின் ஐசுவரியத்தினாலோ, கோடீசுவரி யாகிவிடவில்லை. வறுமையில் குசேலரின் தமக்கை. சமய குரவர்கள் இயற்றும் அற்புதங்கள் என்ற செப்பிடுவித்தைகள் நடவாத இந்தக் காலத்தில், அவள் தினந் தினம் காலந்தள்ளுவது மல்லாமல், தனது ஒரே குமாரத்திக்கு விவாகம் செய்யவும் ஆரம்பித்ததுதான் அற்புதத்திலும் அற்புதம்.

நமது ஹிந்து சமூகத்தின் பழைய உலர்ந்துபோன கட்டுப்பாடுகளின் கைதிகளாக ஏழைகள்தாம் தற்போது இருந்துவருகிறார்கள். ஏழ்மை நிலைமையிலிருக்கும் பெண்கள் கொஞ்சக் காலமாவது கன்னிகையாக இருந்து காலந் தள்ள ஹிந்து சமூகம் இடந் தராது. இவ்விஷயத்தில் கைம் பெண்களின் நிலைமையைவிட கன்னியர்கள் நிலை பரிதாபகர

மானது. மிஞ்சினால் விதவையை அவமதிப்பார்கள்; ஆனால் ஒரு கன்னிகையோ வெனின், அவதூறு, உலகத்தின் நிஷ்டூரம் என்ற நிலைவையில் அறையப்படுவாள். பணக்காரர்களான பூலோகத் தெய்வங்களின் மீது சமுதாயக் கட்டுப்பாட்டின் ஜம்பம் பலிக்காது. இவ்வளவும் முத்தாச்சிக்குத் தெரியாது. ஆனால் எப்படியோ வின்டில் (Windle) துரை பங்களாவில் பங்கா இழுக்கும் மாடசாமி பிள்ளைக்குத் தன் மகளைக் கொடுக்க நிச்சயித்துவிட்டாள். நாளைக் காலையில் கலியாணம்.

சாயங்காலம் ஐந்தரை மணி யிருக்கும். முறுக்குப் பாட்டி தங்கவேலு ஆசாரியின் வீட்டுத் திண்ணையில், சுவரருகில் சாய்ந்து, காலை நீட்டி உட்கார்ந்திருக்கிறாள். செம்பாதி நரைத்த தலை, ஜீவியத்தில் பட்ட கஷ்டங்களைப் படம் (Graph) போட்டுக் காட்டுவது போல் கோடுகள் நிறைந்த முகம்,*பாம்படமில்லாது புடலங்காய்த் துண்டுகள் மாதிரித் தொங்கும் காதுகள், 'இந்திரன் கலையாய் என் மருங்கிருந்தான்' எனக் காணப்படும் சம்பிரதாயமாய்ப் புடவை என்ற இரண்டு வெள்ளைத் துண்டுகள் (ஒரு காலத்தில் வெள்ளையாயிருந்தவை) இவள் பணக்காரி யல்லள் என்பதை இடித்துக் கூறின. கையிலிருந்த உலர்ந்த வெற்றிலையை வாயில் போட்டுக்கொண்டு, அதற்குத் துணையாக ஒரு நீளத் துண்டுக் கருப்பட்டிப் புகையிலையையும் உள்ளே செலுத்தி, கைகளைத் திண்ணையில் துடைத்துவிட்டு, "ஆசாரியாரே! என்ன? வேலையெ சுருக்கா முடியும். மோசம் பண்ணிப்பிடாதீரும்!" என்றாள்.

"ஆச்சி! பயப்படாதே, பொழுது சாயிரத்துக்கு மின்னெ ஒன் வேலெ முடிஞ்சிடும்!" என்று, தன் கையி

---

*பாம்படம் என்பது திருநெல்வேலி ஜில்லாவில் பெண்கள் காதில் அணியும் ஓர் ஆபரணம்.

விருந்த பாம்படத்திற்கு மெருகிட்டுக்கொண்டே, தேற்றி ஞன் தங்கவேலு ஆசாரி. போன மூன்று மாத காலமாக மாதாந்தரம் நடந்து, அன்று விடியற்காலே முதல் உண்ணு விரத மிருந்த முறுக்குப் பாட்டிக்கு இது ஆறுதலளித் ததோ என்னவோ, — ஒரு பெருமூச்சுத்தான் வந்தது.

பிறகு சில நிமிஷங் கழித்து, புன்னகையுடன், "நான் கைலாசவரத்துக்குப் போகணும், வழி காட்டுப் பாதை, இன்னம் நான் போய்த்தான் மேலெ வேலையைப் பாக்க ணும், எல்லாம் அப்படி அப்படியே கெடக்கு," என்று பின்னும் துரிதப்படுத்தினுள்.

"ஒன் வேலெ அண்ணேக்கே முடிஞ்சிடும், அந்தச் சிறு குளம் சுப்பையர் வேலே வராட்டா. அவர்தான் விடேன் தொடேனுன்னு அலஞ்சு சாமானே நேத்துத்தான் வாங்கிக் கிட்டுப் போனுர். இல்லாட்டா ஒரு நொடிலெ; இதென்ன பெரிய காரியமா? அது சரிதான், இருக்கட்டும் ஆச்சி. ஒன் வீட்டிலெ இதுதானெ முதல் கலியாணம். செலவு என்ன ஆகும்?" என்று பேச்சை யிழுத்தான் ஆசாரி.

"என்னமோ, எனெக்கு ஏத்தாப்பிலெ. எல்லாஞ் சேர்ந்து ரெண்டு நூறு ஆகும்," என்றுள்.

"நகை எம்பிட்டு?" என்று மீண்டும் பேச்சைப் பெருக்கினுன் ஆசாரி.

"எல்லாமென்ன, அந்த எங்க வீட்டுக்காரர் போனுரே அவர் போட்டதுதான். என்ன, ரெண்டு மோருதம், இப்பொ நீர் அழிச்சுப் பண்ணற ஒரு சோடு பாம்படம், வேறு செலவு என்ன, ஒரு அம்பது. அது கெடக்கட்டும், வேலெ என்ன இப்பொ முடியுமா?" என்று மீண்டும் ஒரு முறை கேட்டாள்.

"இதோ! நீதான் பாத்துக்கொண்டிருக்கயே! ஏங் கைக்கிச் செறகா கட்டி யிருக்குது?வேலெயெ ஓட்டத்தான்

செய்யிரேன். அவசரப்படாதே... நீ இந்தச் சமுசாரத்தைக் கேட்டியா? ஊருலெ களவுங் கிளவுமா யிருக்கே? அண்ணைக்கி நம்ப மேலப் பண்ணை வீட்டிலெ 2000த்துக்குக் களவாம்! காசுக் கடெ செட்டியாரு பத்தமடைக்குப் போயிட்டு, வட்டிப் பணத்தை மடிலே முடிஞ்சுக்கிட்டு வந்தாராம்; மேலெப் பரம்பு கிட்ட வாரப்போ, பொளுது பல பல இண்ணு விடியராப்பிலே, வந்து தட்டிப் பறிச்சுக்கிட்டுப் போயிட்டான்! செட்டியாரு வயித்திலெ அடிச்சுக்கிட்டு வந்தாரு. காலங் கெட்டுப் போச்சு! இதெல்லாம் நம்ம கட்டப்ப ராசா காலத்துலெ நடக்குமா?'' என்றான் ஆசாரி.

"இம்பிட்டுஞ் சேசுபிட்டுப் போறானே அவனுரு ?'' என்றாள் கிழவி.

"அவன்தான், நம்ம சங்குத் தேவன். எல்லாம் இந்தக் கும்பினியான் வந்த பிறவுதான்! ஊர்க்காவலா ஏளவா ? எல்லாம் தொலைந்து போயுட்டதே!''

"சவத்தெ தள்ளும். எம் பாவத்துலெ வந்து விழாமெ இந்த மூங்கிலடியானும் பேராச்சித் தாயுந்தான் காப்பாத்தணும்... என்ன, ஆச்சா ?''

"இரு, இரு, ஒரு நொடி. இதெ மாத்ரம் ராவித் தாரேன்,'' என்று சொல்லி, ராவப்பட்ட பாம்படத்தையும், தங்கப் பொடியையும் இரண்டு சிவப்புக் காகிதங்களில் மடித்து மரியாதையாகக் கொடுத்தான். முத்தாச்சியும் மடியிலிருந்த முடிப்பை யவிழ்த்து ஒரு கும்பினி ரூபாயை வைக்க, "என்ன! ஒனக்காக இண்ணைக்கி முச்சோடும் கஞ்சி கூடக் குடியாமெ பண்ணித்தர, நல்ல வேலெ செஞ்சை!'' என்றான்.

"என்னெத்தான் தெரியுமே, ஏழெக்கி...''

"அப்பிடின்னா தொள்ளாளிக்கிக் கூலி குடாம முடியுமா?" என, அவனுடன் வாதாட நேரமில்லை யென்று கருதிக் கேட்டதைக் கொடுத்துவிட்டு, நகையைப் பத்திரமாக முடிந்து இடுப்பில் சொருகிக்கொண்டு, வெகு வேகமாய்க் காலாழ்வானைத் தட்டிவிட்டாள் கிழவி.

## II

எவ்வளவு வேகமாக நடந்தாலும், மனித உடல் என்ன மோட்டார் வண்டியா? அதிலும் ஒரு கிழவி! கவிஞர் வெகு உற்சாகமாக வருணிக்கும் 'அந்தி மாலை' போய்,இரவு துரிதமாக வந்தது.கிழவி போகும் பாதை ராஜபாதையானாலும், அக்காலத்தில், ஜன நடமாட்டமே யில்லாமல், மரங்கள் அடர்ந்து நெருங்கிய காட்டுப் பாதை. இருள் பரவ ஆரம்பித்தது என்றால் — வெகுவாக அர்த்த புஷ்டியுடைய வார்த்தைகள் அல்ல — கிழவி கூறிய மாதிரி 'தன் கை தெரியாத கும்மிருட்டு.'

கிழவி இதுவரை பேய்க்கும் பயப்பட்டவள் அல்லள், திருடருக்கும் பயப்பட்டவள் அல்லள். ஆனால் இன்று, ஒவ்வொரு மரத்தடியிலும் ஒவ்வொரு சங்குத் தேவன்! மரக் கிளைகள்மீது குதிக்கும் தறுவாயில் பதுங்கி யிருக்கும் சங்குத் தேவன்! இவ்வாறு ஒவ்வொரு மரத்தைத் தாண்டுவதும் ஒரு வெற்றியாக, தனது மனவுலகில் தோன்றும் சங்குத் தேவர்களிடம் தப்பித்துக்கொண்டே செல்கிறாள்.

இப்படி அவள் தவித்துத் தவித்துச் செல்லும் பொழுது, தனக்கு முன் சிறிது தூரத்தில் ஓர் இருண்ட கரிய உருவம் தோன்றலாயிற்று. கிழவியின் வாய் அவளை யறியாமலே, "சங்குத் தேவன்!" என்று குழறிற்று. கால் கைகள் வெடவெடவென்று நடுங்கின. முன் அடியெடுத்துவைக்க முடியவில்லை. மடியை இன்னொரு முறை இறுக்கிச்

சொருகிக்கொண்டு, "ஏ, மூங்கிலடியான்! நீதான் என்னைக் காப்பாத்தணும்!" என்று ஏங்கினாள். அந்தக் கரிய உருவம் தான் போகும் திசையில் இருளில் மறைவதைக் கண்டவுடன், அதுவும் தன்னைப் போன்ற பாதசாரியாக இருக்கலாம் என்று நினைத்தாள். மூங்கிலடியான்மீது பாரத்தைப் போட்டுவிட்டு, "அதாரது! ஐயா! ஐயா!" என்று கூவிக்கொண்டே நடக்கலானாள்.

"யாரங்கே கூப்பாடு போடுவது?" என்ற கனத்த ஆண் குரல் இருளோடு வந்தது.

"சித்தெ பொறுத்துக்கும், இதோ வந்தேன்!" என்று நெருங்கினாள்.

தலையில் பெருத்த முண்டாசு, நீண்ட கிருதா, வரிந்து கட்டின அரைவேஷ்டி, திடகாத்திரமான சரீரம், அக்குளில் ஒரு குறுந்தடி, — இவ்வளவும் கொஞ்சம் கொஞ்சமாகத் தெரிய வாரம்பித்தன. சரீர ஆகிருதியைப் பார்த்ததும் கிழவிக்குப் பெரிய ஆறுதல், — இனிக் கவலை யில்லாமல் வீடு போய்ச் சேரலாம் என்ற நம்பிக்கையினால்.

"ஏ கெழவி! இந்தக் கும்மிருட்டிலே நீ எங்கே கெடந்து வாரே?" என்றான் அந்த அந்நியன்.

"நான் இங்கனெ இருந்துதான். எம்பிட்டுப் பறந்து பறந்து வந்தாலும் கெழவிதானே! பொளுது சாஞ்சு எத்தினி நாளி யிருக்கும்? நான் போயித்தானே கொறெ வேலெயும் முடியணும், நாழி ரொம்ப ஆயிருக்குமா?" என்று கேட்டுக்கொண்டே பின்தொடர்ந்தாள்.

"பொழுதா? நேரம் ஒண்ணுமாகல்லெ! நீ எங்கே போரே?" என்றான் துணை நடந்த பாதசாரி.

"நான் எங்கே போறது என்ன? ஒங்க பச்சேரிலெ ஒரு பள்ளனெ பாக்கணும், அதுதான்!"

"நீ என்ன சாதி?"

“நாங்க வெள்ளாம் புள்ளெக (வேளாளர்கள்)! நீரு?”

“நான் தேவமாரு!”

“தேவமாரா! என்ன அய்யா, இப்படியும் உண்டா? ஒம்ம சாதிக்காரன் ஊரெல்லாம் இப்பிடி கொள்ளெ போடுரெப்ப, நீங்க பெரிய மனிசரெல்லாம் சும்மா இருக்கலாமா? அந்த அநியாயத்தெ நீங்க பார்த்துச் சும்மா இருக்கலாமா? கலி காலமா?” என்றாள்.

“கெழவிக்கு வாய்த்துடுக்கெப் பாரு!” என்று கோபித்தவன், கலகல வென்று சிரித்துவிட்டு, பிறகு, “அது கொலைத் தொழிலுதானே! ஆமாம், நீ சொல்லுது போலே கலி தான். நீ என்னமோ தெரியாமே பேசுறயே. அவன் வேறெ கிளை, நான் வேறெ, அந்தப் பய கொண்டையங் கோட்டையான். நான் வீரம் முடிதாங்கி...ஆமாங் கெழவி, ஏன் பதறிப் பதறிச் சாகிறெ?” என்று கேலியாகக் கேட்டான் அந்தத் தேவன்.

“ஆமாம்! எங்கிட்டெ லெச்ச லெச்சமா இருக்கு, நான் பதரறேன்!” என்று ஒரு அசட்டுச் சிரிப்புச் சிரித்தாள்.

“பொய் சொல்லாதே. மடிலே கனமிருந்தா, வழிலே பயம்,” என்று சிரித்தான் அந்த அந்நியன்.

“ஒம்ம கிட்ட உண்மையெச் சொன்ன என்ன? என் மகளுக்குக் கலியாணம். நான் போயித்தான் நாலு வேலெ பாக்கணும். ஒரு சோடு இரவல் பாம்படம் வாங்கிக்கிட்டுப் போறேன். ஏதோ பகட்டா செய்தாத்தானெ நாலு பேரு மதிப்பான்!” என்றாள் கிழவி.

“பாம்படமாவதிருக்கே!” என்று கேட்டுவிட்டு அவளைக் கூர்ந்து நோக்கினான். பிறகு, “எத்தினி மக்கள் உனக்கு? மகள் என்ன மூத்ததா?” என்று கேட்டான். அவன் கண்களும் மனமும் கிழவியைத் துருவிக்கொண்டிருந்தன.

“ எல்லாம் ஒத்தைக்கொன்னுதான்! ”

“சரி.”

பிறகு இருவரும் பேசாமல் நடந்தனர். அந்த மறவன் கிழவியை நோக்குவதும், பிறகு குனிந்து யோசிப்பதுமாக நடந்தான்.

சற்று நேரத்தில் கிழவி, “அதோ கோயில் தெரியுது. நான் இனிமெ போயிக்கிடுவேன்,” என்றாள்.

“ ஏ ஆச்சி ! நில்லு, ஒரு சமுசாரம். நீ ஏழெதானெ ? இன்னு, இதெ வச்சுக்க! மூதல் பேரனுக்கு ஏன் பேரிடு!”

“ நீங்க மகராசரா இருக்கணும். என்ன பேரு இட?” என்று சொல்லிக்கொண்டே, தனது எதிர்பாராத அதிர்ஷ்டத்தில் மதி மயங்கிக் கையை நீட்டினாள்.

“ சங்குத்தேவரின்னு!”

கையில் வாங்கிய பணப் பை பொத்தென்று விழுந்தது. “வேண்டாம், வேண்டாம் ! என்னெ விட்டிருங்க, நான் ஓடிப் போரேன்!” என்று பதறினாள்.

“இல்லெ ஆச்சி, எடுத்துக்கொ! ஒன்னெ கண்ணாணெ ஒண்ணுஞ் செய்யலெ!” என்று கையில் கொடுத்து அனுப்பினான். கிழவியும் திரும்பிப் பார்த்தபடியே இருட்டில் மறைந்தாள்.

சங்குத் தேவன் அங்கிருந்த கல்லில் சற்று உட்கார்ந்தான். குழம்பிய மூளை சரியானது போல் தெரிந்தது. “ஆமாம், கிழவி திடுக்கிட்டுப் போயிட்டா. ஒண்ணு ரெண்டா, நூறு! இதுவும் ஒரு வேடிக்கெதான்! சங்குத் தேவனெக் கெழவி......,” என்று முணகிக்கொண்டே எழுந்து ஓர் ஒற்றையடிப் பாதையில் நடந்தான்.

கதை 21

# பறிமுதல்

*அவன் பிரம்மா ! அவனை அழிக்க முடியுமா ?*

---

43 நெர். கைதி ஒரு பயங்கரப் புரட்சிக்காரன். அவன் பேரில் அரசியல் விஷயமாகக் கொலைக் குற்றம் சாட்டப் பட்டு, கோர்ட்டில் விசாரணை நடந்துகொண் டிருக்கிறது.

பயங்கரப் புரட்சிக்காரன் என்று, சமுதாயத்தின் சார் பாக அரசாங்கம் முடிவு கட்டிவிட்டது. ஆனால் அவ னைப் பார்த்தால் அப்படித் தோன்றாது. இயற்கைச் சிருஷ் டியில் வசீகரப்படுத்தும் ஒரு ஜீவன் இருந்தால் அது 43 நெர். கைதி.

அவன் இருக்கும் அறை தனி. வெளிச்சம் வருவதற் காக அல்லாமல் காற்று வருவதற்கு மட்டும் ஒரு சிறிய துவாரம். அதன் வழியாகப் பெரிய பூனை நுழையலாம். ஆனால், புரட்சிக்காரர்கள் பூனை வடிவம் எடுக்கக்கூடும் என்று பயந்தோ என்னவோ, அதிலும் இரும்புக் கம்பி.

இந்தத் தனிமையில் ஒருவனுக்குப் பித்துப் பிடிக்காம லிருந்தால், அவன் மன உறுதியை என்னவென்று கூறுவது !

வாரத்திற்கு ஒரு முறை — தவறுதலாகவோ என்ன வோ — அவனது சிநேகிதையைப் பார்க்க அனுமதித்தார் கள். அதுதான் காரணம் அவன் அந்தச் சிறையிலிருந்து ஓர் அற்புதமான கிரந்தத்தை எழுத.

தூக்குத் தண்டனை அநுபவிக்க இன்னும் பதினைந்து நாட்கள். இன்னும் ஒரு முறை வருவாள். கிரந்தம் உல

கத்திற்குப் போய்விடும். அதற்கு மேல் சாந்தி! வேறு என்ன வேண்டும்?

அந்தச் சின்ன அறையில் இரகசியங்களை மானஸீகமாக அல்லாமல் வேறு முறையில் வைத்துக் காப்பாற்ற முடியுமா?

ஜெயில் சூப்பிரண்ட் பரமேச்வரத்திற்குத் திடீரென்று சோதனை போடவேண்டும் என்று பட்டது. அவருடைய அந்தராத்மா அப்படிச் செய்யச் சொல்லியதோ, என்னவோ?

கேட்பானேன்? வெகு நுணுக்கமாக எழுதிய அந்தக் காகிதக் கத்தை அகப்பட்டுக்கொண்டது; அதைப் பறிமுதல் செய்தார்.

43 நெர். அதை எடுத்துக்கொள்ளும்பொழுது பட்ட துடிப்பைப் பார்க்க வேண்டுமே! உயிரையே வேண்டுமென்றாலும் பணயம் வைப்பது போல்—இவனைக் கேட்காமலே பிரியப்போகிற இந்தப் பொக்கான உயிரைமட்டுமா?—தனது சக்தி முழுவதையுமே—வைத்துப் போராடினன். நான்கு வார்டர்களும் ஒரு சூப்பிரண்டும் எதிர்க்கும் பொழுது, அந்தச் சின்ன அறையில், எப்படிப்பட்ட சண்டைக்கும் ஒரேவித முடிவுதான்உண்டு. அதுதான் நடந்தது.

43-ம் நெம்பருக்குப் பலத்த காயம். புற உடம்பில் மட்டுமா? அதுமட்டு மானால்தான் அதை ஒரு பொருளாக மதிக்க மாட்டானே? ஆத்மா, உலகம், இலட்சியம் எல்லாம் பறிபோனது போல் துடித்தான்; சோர்ந்தான். அந்தப் பெண்—தனது சிநேகிதை—வந்தால்... , ஐயோ!...அவனுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது.

ஜெயில் ஆஸ்பத்திரியில் மருந்து போட்டார்கள். தூக்குத் தண்டனை ஒத்திவைக்கப்பட்டது.

அன்று சிநேகிதையைக் காண அனுமதிக்கவில்லை.

II

"நல்லார்,...அவர் பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை" என்பது ஒரு தத்துவப் பிரமை. இதற்கு எதிர் மறையாக, "தீயார், அவர் பொருட்டாகச் சிலரை வலுவாகச் சிறை செய்ய வேண்டியது" என்பது ஒரு சமூக உண்மை.

பரமேச்வரம் சூப்பிரண்டாக இருந்தாலும் அவரும் ஒரு சிறை வாசிதான். அந்தச் சமூக உண்மைக்கு உதாரணம். இவரும் அந்த ஜெயில் காம்பௌண்டிற்குள்ளே தான் நாள் முழுதும் குடியிருக்கிறார். இவரும் இஷ்டம் போல் அனுவசியமாகச் சுற்ற முடியாது. கைதிகளைக் காப்பதற்கு இவரும் சிறைவாசம் செய்யவேண்டி யிருக்கிறது. இது பரமேச்வரத்திற்குத் தெரியாது; அவர் அதைப்பற்றி நினைத்ததே இல்லை.

பரமேச்வரத்திற்கும் மற்றக் கைதிகளுக்கும், இருக்கும் அறையைப் பற்றிய மட்டில், வித்தியாசமுண்டு. சிறையிலே, ஏ-கிளாஸ் பி-கிளாஸ் இல்லையா ? இதற்கெல்லாம் மேலாக ஜெயில் சூப்பிரண்ட் - கிளாஸ் என்று வைத்துக் கொண்டால் போகிறது.

அன்று இரவு சூப்பிரண்ட் பரமேச்வரம் பிள்ளை பறி முதலைப்பற்றி ரிபோர்ட் தயார் செய்துகொண்டிருக்கிறார். எழுதியவர் 43 நெர். கைதி. தலைப்பு ஒன்றும் தெரியவில்லை. படித்துத்தான் ஆகவேண்டும்!

படிக்க ஆரம்பிக்கிறார்....

"நல்ல இருள்.......

தொட்டால் கையில் கறுப்பு ஒட்டிக்கொள்ளும் மாதிரி.

அப்பொழுது நீ வந்தாய்.

இருளில் ஜோதிப் பிழம்பாக இருந்தாய்.

நீ யார்?

முகத்தை ஏன் மறைக்கவேண்டும்?

முத்தமிட்டுவிடுவேன் என்று பயமா?—ஆனால் நீ என்னைத் தழுவலாமோ?

உனது ஸ்பரிசம் என்னைப் புனிதமாக்கிவிட்டது.

நீ யார்?.........

இன்று நீ யேன் வரவில்லை? இன்று நிலவு காய்கிறது.

நிலவுக்கு நீ அவசியமில்லையா? அல்லது உனக்கு நிலவு அவசியமில்லையா?

இன்று என் மனம் தகர்ந்துவிடுகிறதே! இப்பொழுது வரமாட்டாயா?

உள்ளத்தில் ஒரு ஊழிக் கூத்து, ஊழியின் இறுதி.... உனக்கு இரக்கமில்லையா?

நீ யார்?......

இன்று நள்ளிரவு.

நீ வருவாய், வந்துவிட்டாய்! அடி, நீ யார்?

என்னை வாழ்விக்க வருகிறாயோ?

காதலா, கருணையா?

தாயின் அன்பா?

உன்னைத் தாய் என்று நினைக்க முடியவில்லை. நீ எனக்கு......

அடி, நீ யார்?

உன் முகத் திரையைக் களைந்தால் நீ என்ன செய்வாய்? அடி, நீ யார்?''

பரமேச்வரம் வாசித்து முடிக்கும்பொழுது இரவு வெகு நேரமாகிவிட்டது.

இதில் என்ன குற்றமிருக்கிறது? இருந்தால் அழித்து விடத்தான் வேண்டுமா? அழித்தால் என்ன கிடைத்து விடுகிறது? அழித்துத்தான் ஆகவேண்டுமா?

புது உலகத்தைச் சிருஷ்டிப்பவனை இன்று உடலை அழித்துவிடலாம். அவன் பிரம்மா! அவனை அழிக்க முடியுமா? சமூகம் அசட்டுத்தனம் செய்யும்.

அரசாங்கம் எப்பொழுதும் இப்படித்தான். நமது அரசாங்கமாக இருந்தால் என்ன? அந்நியனுடையதாக இருந்தால் என்ன? சரித்திரத்தில் எங்கும் இப்படித்தான்.

கடமை இருக்கிறது. கடமை அவசியந்தான். கடமைக்காக எதையும் செய்துவிடுகிறதா?

பரமேச்வரத்தின் மனது ஒரு கொந்தளிக்கும் கடல் போல் தறிகெட்டுப் புரண்டது.

வெளிக் காம்பௌண்டில் உலாவ வருகிறார்.

தம்மையறியாமல் அந்தச் சிறு காகிதக் கட்டு அவர் பைக்குள் செல்லுகிறது. அதை அழிப்பதா? வைத்துக் கொண்டால் என்ன?

நல்ல இருட்டுத்தான்.

காம்பௌண்ட் சுவரிலிருந்து ஒரு கறுத்த உருவம் குதிக்கிறது.

கடமை! வார்டர்களைக் காணோம். அந்தப் பக்கம் சற்று ஒரு மாதிரித்தான்.

ஒரே பாய்ச்சலில் எட்டிப் பிடித்துக் கொள்ளுகிறார்.

சல்லடம் தரித்த பெண்.

அவன் சிநேகிதை.

"நீ...!" என்கிறார்.

"ஆம்! அவரைப் பார்க்க வேண்டும். அனுமதி இல்லாவிட்டால் வழியுண்டு."

"பார்க்கக் கூடாது! வீணாக நீயும் அகப்பட்டுக்கொள்ளாதே! போய்விடு! நீ சிறுமி!"

"நான் பெண்ணுமல்ல, சிறுமியுமல்ல. எங்கள் சமுதாயத்தின் அடிமை; தொண்டர்."

"நம்முடைய சமுதாயமில்லையா?" என்று சிரித்தார்.

"நீ ஒரு துரோகி. உனக்கு அங்கு இடம் கிடையாது!" என்றாள்.

அவள் கையில் தொங்கிக்கொண்டிருந்த பையில், என்னமோ சிறிய கட்டு பொத்தென்று விழுந்தது.

இருவரும் மௌனமாக நிற்கின்றனர்.

"நீ!" என்றாள்.

"போ! போ!"

அவளை ஒரே தூக்காகத் தூக்கி, காம்பௌண்ட் மதில் மேல் வைத்தார். அடுத்த நிமிஷம் அந்த உருவம் மறைந்தது.

"பறிமுதல் செய்யப்பட்ட சிறு காகிதக் குப்பை, கைதி 43-ம் நெம்பரின் பைத்தியக்கார உளறல்களாக இருந்ததால் அழிக்கப்பட்டது," என்று எழுதிவிட்டு நாற்காலியில் சாய்ந்தார்.

எது பறிமுதலானது?



கதை 22

## காலனும் கிழவியும்

‘ நீ யாரப்பா ?’

‘ நான்தான் யமன் ? ’

‘ அப்படியா சேதி ! வா, இப்படி இரி !... இப்பம் எதுக்கு இங்கே வந்தே ?’

---

வெள்ளைக்கோயில் என்றால் அந்தப் பகுதியில் சுடுகாடு என்று அர்த்தம். ஆனால் அது ஒரு கிராமமும்கூட. கிராம முனிஸீபு முதலிய சம்பிரமங்கள் எல்லாம் உண்டு. ஊர் என்னமோ அப்படி அப்படித்தான்.

‘வெள்ளைக்கோயிலுக்குப் போறேன்’ என்றால், உலகத்திடம் செலவு பெற்றுக்கொள்வது என்பது அந்தப் பகுதி வாசிகளின் வியாக்கியானம். ஆனால், வெள்ளைக்கோயிலுக்குப் போய்த் திரும்பி வருகிறவர்களும் பலர் உண்டு. ஏன், சுப்பு நாடான் தினசரி காலையும் சாயங்காலமும் அங்கு போய்த்தான் ஏழை மக்களுக்குக் கஷ்டத்தை மறக்க வைக்கும் அமுதத்தை இறக்கி வருகிறான். மாடத்தி தினசரி, அங்கு போய்த்தான் சுள்ளி பொறுக்கிக்கொண்டு திரும்புகிறாள். ஆனால் இப்படித் திரும்புகிறவர்களைப் பற்றி மட்டிலும் நினைவு வருகிறதில்லை போலும் அவ்வூர் வாசிகளுக்கு.

அந்தப் பிரதேசத்திற்குச் சென்றும் வெறுங் கையுடன் திரும்பி வரும் நிலைமை ஒரே ஓர் ஆசாமிக்கு ஏற்பட்டது. அவர்தான் தர்மராஜா.

இந்தச் சமாசாரத்தைப் பற்றி வெள்ளைக்கோயில் காரருக்குத் தெரியாது. ஏனென்றால், மருதாயி, புகையும் சுடுகாட்டுக்கும் சலசலக்கும் பனைவிளைக்கும் இடையில் உள்ள ஒரு குடிசையில் வசிக்கும் கிழவி.

மருதாயிக்கு இந்த விளையில் பனைகள் சிறு விடலிக ளாக நின்றது தெரியும். அது மட்டுமா? கும்பினிக்காரன் பட்டாளம் அந்த வழியாகச் சென்றது எல்லாம் தெரியும். அந்தக் காலத்தில் மருதாயியின் பறையன் நல்ல செயலுள் ளவனாக இருந்தான். வஞ்சக மில்லாமல் குடிப்பான்.

மருதாயிக்கு அந்தக் காலத்திலே யிருந்த மிடுக்கு சொல்லி முடியாது. அறுப்புக்குச் சென்றுவிட்டு, களத்தி லிருந்து மடி நிறையக் கொண்டுவரும் நெல்லை, கள்ளாக மாற்றுவதில் நிபுணி. சதிபதிகள் இருவரும், இந்த இலட் சியத்தை நோக்கி நடந்தால், வெள்ளைக்கோயில் பக்கம் குடி யிருக்காமல் வேறு என்ன செய்ய முடியும்?

மருதாயிக்குப் பிள்ளைகள் பிறந்தன. அவையெல்லாம் எப்பவோ ஒரு காலத்தில் நடந்த சமாசாரம்—கனவு போல. இப்பொழுது பேரன் மாடசாமியும், எருமைக்கிடா வுந்தான் அவளுடைய மங்கிய கண்கள் கண்ட உண்மை கள். கிடாவை வெளியில் மேயவிட்டுக்கொண்டு வருவான் பேரன். கிடாவும் நன்றாகக் கருகருவென்று ஊரார் வயலை மேய்ந்து கொழுத்து வளர்ந்திருந்தது. வாங்குவதற்கு ஆள் வருவதை மாடசாமி எதிர்பார்த்திருந்தான்.

மாடசாமி அவளுடைய கடைக்குட்டிப் பெண்வழிப் பேரன். கொஞ்சம் துடியான பயல். பாட்டனின் ரத்தம் கொஞ்சம் ஜாஸ்தி. அதனால்தான் மாடு மேய்க்கிற 'சாக் கில்' கிழவியைக் குடிசையில் போட்டுவிட்டுப் போய்விடு வான். அவனுக்கு ஒருபெண்ணைக் கட்டிவைத்து விட்டால், தனக்கு இந்தக் குடிசைக் காவல் ஓயும் என்று நினைப்பாள்

கிழவி. தன் கைக்கு ஒரு கோல் போல அவளுக்கும் ஒரு உதவிக் கட்டை தேவை என்று நினைத்தாள்.

காலத்தின் வாசனை படாத யமபுரியில் சிறிது பரபரப்பு. யமதர்ம ராஜா நேரிலேயே சென்று அழைத்து வரவேண்டிய ஒரு புள்ளியின் சீட்டுக் கிழிந்துவிட்டது என்பதைச் சித்திர புத்திரன் மகாராஜாவிடம் அறிவித்தான். சித்திரபுத்திர னுக்கு, ஓலைச் சுவடிகளைப் பார்த்துப் பார்த்தோ என்னவோ, சிறிது காலமாகப் பார்வை அவ்வளவு தெளிவில்லை.

நேற்றும் இன்றும் அற்ற லோகத்தில் மாறுதல் ஏற் படுவது ஆச்சரியந்தான். இருந்தாலும் உண்மையை மறைக்க முடியவில்லையே!

தர்மராஜாவின் சிங்காதனத்தின் மேல், அந்தரத்தில் தொங்கும் ஒளி வாளின் மீது மாசு படர்ந்துவிட்டது— காரணம், மகாராஜனின் தொழிலிலும் மனத்திலும் மாசு படர்ந்ததால் என்று கிங்கரர்களுக்குள் ஒரு வதந்தி. மகா ராஜாவும், தம் முன் வரும் உயிர்களுக்கு நியாயம் வழங் கும்போ தெல்லாம், அடிக்கடி உயர அண்ணாந்து வாளைப் பார்த்துக் கொள்வாராம்.

போருக்கு முதல்வனையும், ஊருக்கு முதல்வரையும் மகாராஜாவே நேரில் சென்று அழைத்து வரவேண்டும் என் பது சம்பிரதாயம். காலத்திற்கு அதிபதியான மன்னன் அந்தக் கைங்கரியத்தைச் செய்வதில் மனக் குழப்பம் ஏற் பட்டது.

பூலோகத்திலே, குறிப்பாக வெள்ளைக்கோயிலிலே, அப்போது அஸ்தமன சமயம். பேய்க்காற்று யமதர்ம ராஜனின் வருகையை அலறி அறிவித்தது. பனைமரங்கள் தங்கள் ஓலைச் சிரங்களைச் சலசலத்துச் சிரக்கம்பம் செய் தன. சுடுகாட்டுச் சிதையில் வெந்து நீறும் வாத்தியார் உடல் ஒன்று, கிழவிக்குக் கிடைக்கப் போகும் பெருமை

யைக் கண்டு, பொறுமைப் புகையைக் கக்கித் தன்னையழித்துக் கொண்டது. எங்கிருந்தோ ஒரு கூகையின் அலறல்.

ஓடிப் போய்ப் பேயாக மாறியாவது தனக்குக் கிடைக்கப் போகும் சித்திரவதைகளிலிருந்து தப்ப முயலும் வாத்தியார் உயிரை மறித்து, தூண்டிலில் மாட்டி, மேல் நோக்கிப் பறக்கும் கிங்கரர்கள், மகாராஜா தூரத்திலே வருவதைக் கண்டு, வேகமாக யமபுரியை நோக்கிச் செல்லலானார்கள்.

எங்கிருந்தோ ஒரு நாய் தர்மராஜனின் வருகையை அறிந்துகொண்டு அழுது ஓலமிட்டது.

கிழவி, குடிசைக் கதவை இழுத்துச் சாத்திவிட்டு, இடுக்கான நடையில் வந்து உட்கார்ந்து, வெற்றிலைக் குழவியை எடுக்கத் தடவினாள். கை கொஞ்சம் நடுங்கியது. என்றுமில்லாமல் கொஞ்சம் நாவரட்சி ஏற்பட்டது. 'சவத்துப் பயலெ அந்திலெ சந்திலெ தங்காதே, மாட்டெ ஓட்டிக்கிட்டு வந்திருன்னு சொன்னா, மூதி......' என்று சொல்லிக்கொண்டே தண்ணீர்க் கலயத்தை எடுத்தாள்.

புறக்கடையில் திடுதிடுவென்று எருமைக் கிடா வந்து நின்றது. அதன் மேலிருந்த கறுத்த யுவன் குதித்தான்.

"ஏலே மாடா, எத்தினி தெறவெதான் ஒன்கிட்டச் சொல்லி மாரடிக்க. மூதி, தொளுவிலெ கட்டி, பருத்தி விதையெ அள்ளி வய்யி, பாளையங்கோட்டை எசமா வந்திருந்தாவ. நாளைக்கி கடாவெ கொண்டாரச் சொன்னாவ!" என்றாள் வந்தவனைப் பார்த்து.

வந்தவன்தான் எமதர்ம ராஜா.

"பாவம் கிழவிக்கு அவ்வளவு கண் பஞ்சடைந்து போய்விட்டதா?" என்று அவன் மனம் இளகியது. கிழவியின் கடைசி விருப்பத்திற்குத் தடையாக ஏன் இருக்கவேண்டும் என்று எருமையைத் தொழுவில் கட்டிவிட்டு, பருத்தி

விதையை அள்ளி வைத்தான். பூலோகத் தீனியைக் கண்டிராத எருமை திருதிருவென்று விழித்தது.

கிழவி திடுக்கிட்டுவிடாமல், இதமாக வந்த காரியத்தைத் தெரிவிக்க வேண்டும் என்று நினைத்துக்கொண்டு, குனிந்து குடிசைக்குள் நுழைந்தான் யமன்.

"ஏலே அய்யா, அந்த வெத்திலைச் சருகை இப்பிடித் தள்ளிப் போடு!" என்றாள் கிழவி.

வெற்றிலையை எடுத்துக் கொடுத்துவிட்டு, "அதிருக்கட்டும் கிழவி, நான் யார் தெரியுமா? என்னை நல்லாப் பாரு! நான்தான்..." என்று ஆரம்பித்தான் எமன்.

"என்ன குடிச்சுப்பிட்டு வந்தியாலே! எனக்கென்ன கண்ணு பொட்டையாப் போச்சுன்னு நினச்சிக்கிட்டியாலே!" கிழவிக்கு அவன் நின்ற நிலையைப் பார்த்ததும், மத்தியானச் சம்பவம் ஏதோ நினைவுக்கு வந்தது.

"சிங்கிகொளத்தா மவளே, அவதான் சொக்கி, அவளைப் பார்த்திருக்கியாலே..........நேத்துக்கூடச் சுள்ளி பொறுக்க வந்தாளே... அவ அப்பங்காரன் வந்திருந்தான்...உனக்கு அவளெப் புடிச்சுக் கட்டிப் போட்டுட்டா நல்லதுன்னான். என்ன சொல்றே?......"

காலத்தின் அதிபனை, காலத்தின் எல்லைக்கு அப்பாற்பட்ட, யமதர்மராஜன் நடுநடுங்கினான்.

"நான்தான் யமதர்மராஜன்!" என்று அவனது வாய் உளறியது. பயப்பிராந்தியில் வாய் உண்மையைக் கக்கியது. ஆனால் அந்த உண்மை கிழவியின் உள்ளத்தில் பயத்தை ஏற்படுத்தவில்லை.

"குடிச்சுப்பிட்டுத்தான் வந்திருக்கே.......ஒங்க பாட்டன் குடிச்சுக் குடிச்சுத்தான் தொலைஞ்சான்......அதான் வெள்ளக்கோயில் குடிசை! நாசமாப் போரத்துக்கு நாலு வழி வேணுமா? விதி யாரை விட்டுது......?" என்றாள்.

விதியைப் பற்றி நினைத்ததும் கிழவிக்கு என்றுமில்லாத தளர்வு தட்டியது...மூச்சுத் திணறியது...யமனுக்குக் கால்களில் தெம்பு தட்டியது...விதிக்கோலைப் பற்றித் தன் ஆட்சியை நிலைநாட்ட நிமிர்ந்தான்......

"ஏலே, ஒன் வக்கணை யெல்லாம் இருக்கட்டுமிலே, என்னு, எருமை அத்துக்கிட்டு ஓடுது? மறிச்சுப் பிடிச்சா?" என்றாள் கிழவி.

"ஏதேச்சையாக அலைந்த வாகனத்தைக் கட்டிப்போட்டுப் பருத்திவிதை வைத்தால் நிற்குமா?" என்று நினைத்துக் கொண்டே, வெளியேறி வந்து சமிக்ஞை செய்தான் யமன். வாகனம் வந்து மறைவில் அவன் சொற்படி நின்றது.

எருமையின் முதுகில் போட்டிருக்கிற பாசக் கயிற்றை எடுத்துக்கொண்டு மறுபடியும் உள்ளே நுழைந்தான் யமன். பாசத்தால் அவளைக் கட்டிவிடலாம் என்று நம்பினான். பாவம்!

"ஏலே, கயிறு நல்லா உறுதியா இருக்கே, எங்கலெ வாங்கினெ? ஒங்க பாட்டனிருந்தாருல்ல, அவருக்கு அப்பங் காலத்துலேதான் இது மாதிரி கெடைக்கும். அங்கெனெ சுத்தி ஒரு கொடியாக் கட்டிப் போட்டு வய்யி, ஒண்ணுக்குமில்லாட்டா நாலு ஓலையையாவது சேத்துக் கட்டிக்கிட்டு வரலாம்!" என்றாள்.

பாசக் கயிற்றின் நுனியைக் கூரையைத் தாங்கும் விட்டத்தில் கட்டிக்கொண்டே, தான் அவள் பேரன் அல்லன் என்பதை இந்தக் கிழவிக்கு எப்படித் தெளிவுபடுத்துவது என்று எண்ணி யெண்ணிப் பார்த்தான். தனது சுய உருவைக் காண்பித்தால் — பயந்து விட்டால் என்ன செய்வது என்ற நினைப்பு......வேறு வழியில்லை......

"ஏ கிழவி, என்னை இப்படித் திரும்பிப் பார்!" என்று அதிகாரத் தொனியில் ஒரு குரல் எழுந்தது.

கிழவி திரும்பிப் பார்த்தாள். கூரையின் முகட்டையும் தாண்டி, ஸ்தூலத் தடையால் மறையாமல், யமன் தன் சுய உருவில் கம்பீரமாக நிற்பதைக் கண்டாள்.

"நீ யாரப்பா! இங்னெ ஏம் பேரன் நிண்டுகிட்டிருந் தானே, அவனெங்கே?" என்றாள்.

"நான்தான் யமன்! நான்தான் அவன்; உன் பேர னில்லை!" என்றான் யமன்.

"அப்படியா சேதி! வா இப்படி இரி," என்றுகொண் டே, வெற்றிலையைத் தட்டத் தொடங்கினாள் கிழவி. "இப் பம் எதுக்கு இங்கெ வந்தே?"

யமன் அவள் அருகில் வந்து உட்கார்ந்தான். அதனால், நின்றதன் காம்பீரியம் மறைந்துவிட்டது.

"போருக்கு முதல்வனையும் ஊருக்கு மூத்தவரையும் நான்தான் அழைத்துக்கொண்டு போகவேண்டும்!" என் றான்.

"அப்பிடின்னா?"

"நீ என்கூட வரவேண்டும். நீ அப்பொழுது கட்டிப் போடச் சொன்னாயே அது உன் எருமையல்ல, என் வாக னம்..."

"நான் ஒன்கூட வரணுமாக்கும்! என்னெ கூட்டிக் கிட்டுப் போவ ஒனக்குத் தெறமை யிருக்கா? ஒனக்குப் பாதி வேலெகூட சரியாச் செய்யத் தெரியாதே. என்னெக் கட்டோடெ கூட்டிக்கிட்டுப் போவ ஒனக்கு முடியுமா?"

"எனக்கு முடியாத ஒன்று இருக்கிறதா? நான் இதுவரை எத்தனை பேரை அழைத்துச் சென்றிருக் கிறேன்—அது உனக்கெப்படித் தெரியும்? நீ என்ன புராணம் இதிகாசம் படிக்கக் கூடிய ஜாதியில் பிறந்திருக் கிறாயா?......" இப்படிச் சொல்லிக்கொண்டு போகும் பொழுதே, யமனுக்குத் தானே தனக்குப் பொய் சொல்லிக்

கொள்கிறது போலப் பட்டது; ஏனென்றால் அவனுக்கு மார்க்கண்டன் சமாசாரமும் நினைவுக்கு வந்துவிட்டது.

"அதெல்லாம் இருக்கட்டும், நீ என்னெக் கூட்டிக் கிட்டுப் போய்த்தின்னு, நான் இருந்தெ நெனப்பெ, என்னெப் பத்தின நெனப்பெ, நான் வச்சிருந்த பொளங்கின சாமானெல்லாம் ஒன்னோடெ எடுத்துக்கிட்டுப் போவ முடியுமா ? என்னமோ எமன் கிமன் இன்னு பயமுறுத் திரியே, ஒன் தொழிலே ஒனக்குச் செய்யத் தெரியலியே! அதெத் தெரிஞ்சிக்கிட்டு எங்கிட்ட வா!" என்று காலை நீட்டிக்கொண்டு முழங்காலைத் தடவினாள் கிழவி.

"என்ன சொன்னாய் ! எனக்கா தெரியாது ? இதோ பார், உன்னை என்ன செய்கிறேன்!" என்று உறுமிக் கொண்டு எழுந்தான் யமன். அந்தோ ! அவன் வீசவேண் டிய பாசக் கயிறு அவனே கட்டிய கொடியாகத் தொங்கி யது !

"உன்னாலெ என் உசிரெத்தானே எடுத்துக்கிட்டுப் போவ முடியும் ? இந்த உடலைக் கூடத் தூக்கிட்டுப் போவ உனக்குத் தெறமை இருக்கா ? யோசிச்சுப் பாரு. ஒண்ணெ வேறயா மாத்த முடியும்;உன்னாலே அழிக்க முடியுமா? அடி யோட இல்லாமே ஆக்க முடியுமா? அதெ உன்னைப் படைச்ச கடவுளாலேயே செய்ய முடியாதே! அப்பறமில்ல உனக்கு? பழசுன்னு அவ்வளவு கிள்ளுக் கீரேன்னு நெனச்சே?" என்று பொக்கை வாயைத் திறந்துகாட்டிச் சிரித்தாள் கிழவி.

கையைப் பிசைந்துகொண்டே வெளியேறினான் யமன். அன்றுதான் அவனுக்கு உண்மையான தோல்வி. மார்க் கண்டேயன் சமாசாரம்கூட அவனுக்கு அன்று வெற்றி மாதிரியே புலப்பட்டது.

யமராஜனின் தோல்வியைக் கண்டு தன்னைக் காப்பாற்றிக்கொள்ளப் போய்ப் பதுங்கியது போலப் பேய்க் காற்றும் ஓய்ந்து நின்றது. மாடசாமி எருமையை ஓட்டிக்கொண்டு வந்து சேர்ந்தான். கட்டுத்தறியில் தீனி போட்டுப் பருத்தி விதை வைத்துத் தயாராக இருந்ததைக் கண்டான். குருட்டுக் கிழவிக்கு வெறும் இடத்தில் எருமை யிருப்பதாகத் தோன்றியதால் எல்லாம் தானாகத் தடவித் தடவிச் செய்திருக்கிறாள் என்று அவனுக்குத் தோன்றியது.

உள்ளே நுழைந்தான். வாயில்வெற்றிலையைக் குதப்பிக் கொண்டே கிழவி யமதேவனின் விஜயத்தையும், தோல்வியையும் பற்றிச் சொன்னாள். மாடசாமி வாலிபத்தின் அவநம்பிக்கையுடன் சிரித்தான். "குருட்டு மூதி என்னவோ ஒளருது!" என்று முணுமுணுத்தான்.

இருந்தாலும், "நல்ல கெட்டிக் கயிறு; காஞ்ச சருகாவது சட்டலாம். கைக்கு வந்தது தவறிவிட்டதே!" யென்று அவள் ஏங்கியது அவனுக்கும் கொஞ்சம் நம்பும் படிதான் இருந்தது.



கதை 23

# கோபாலபுரம்

*கண்கள் எரிக்குமானால் அவள் என்னை அன்று தீய்த்து விட்டிருப்பாள். என் மனம் அவளை நோக்கித் தகித்தது. அவள் உள்ளம் எனது செய்கையின் மீது கனன்றது.*

---

கோபாலபுரம் ஒரு சிற்றூர்.

சிறிது இடிந்த சிவன் கோயிலின் கோபுரம் ஊரின் கீழ்ப்புறத்திலிருக்கும் மாந்தோப்பின் மீது ரஸ்தாவின் திருப்பத்திலிருந்து பார்த்தால் தெரியும். சாயங்காலத்தில், அதாவது அஸ்தமிக்கும் செங்கோளமான சூரியனின் கிரணங்கள் மொட்டைக் கோபுரத்தின் மீதும் மாந்தோப்பின் மீதும் விழுந்து பளபளக்கும் சமயத்தில், நான் ஏன் சைத்ரிகனாகப் பிறந்திருக்கக் கூடாது என்று படும்.

ஊருக்கும் அந்த ரஸ்தாவுக்கும் ஏறக்குறைய அரை மைல் தூரம் இருக்கும். கோபுரத்தைத் தவிர அங்கு மனித வாழ்வின் சின்னங்களைக் காண்பதே அருமை. தூரத்து மைதானத்தில் இரண்டு மூன்று எருமையோ, ஆட்டுக் குட்டியோ மேய்வதைப் பார்ப்பதும், மாட்டுக்காரனின் குரல் கேட்பதும் விதிவிலக்கு.

வாழ்க்கையில் கசப்புற்றவர்களுக்கும், தனிமை என்றும், காதல் என்றும், அழகு என்றும் அர்த்தமில்லாமல் பேசும் கவிஞர்களுக்கும் அவ்விடத்தில் மன நிம்மதி கிடைக்கும்.

நானும் அவ்வூரில் தங்கியவன்தான். அதாவது ஒரு காலத்தில் என்னை அவ்வூர்க்காரர்கள் தெரிந்துகொள்ளு வார்கள். ஆனால் இப்பொழுது...............

அது பெருங்கதை.

மனிதன் தெய்வ சிருஷ்டியின் சிகரம் என்பது சாஸ்தி ரக்காரரும் விஞ்ஞானிகளும் ஏகோபித்துப் பாடும் முடிவு.

நான் கவனித்த வரை, அந்த மாதிரிக் கேவலமான சிருஷ்டியைப் படைத்த பிறகு, கடவுளுக்கு உணர்ச்சி ஏதாவது இருந்தால், வெட்கத்தினால் தூக்குப் போட்டுக் கொண்டிருக்க வேண்டும் என்றுதான் கூறுவேன்.

மனிதனாவது! கடவுளாவது! சீச்சீ! சுத்த அபத்தம்! இதில் தெய்வம் தன்னை வழிபட வேண்டும் என்று மனிதனை எதிர்பார்க்கிறதே அதைப் போல் முட்டாள்தனம் வேறு உண்டா? நான் மட்டும் கடவுளாக இருந்தால், கட்டாயம் இந்தச் சிருஷ்டித் தொழிலை நெடுங்காலத்திற்கு முன்பே விட்டுவிட்டுத் தூக்குப் போட்டுக்கொண்டிருப்பேன்.

என்ன மனிதன், சீ!

அன்றைக்கு நடந்தது எல்லாம் நேற்று நடந்த மாதிரி இருக்கிறது.

அதற்கு முன்பு கோபாலபுரம் என்னமாக இருந்தது!

லக்ஷ்மி ஒருத்தியே போதுமே ஊர் நிறைந்தாற்போல் இருக்க! சாயங்காலத்திலே சிவன்கோயில் கிணற்றில் ஜலமெடுக்க வரும்போது தமிழ்ப் பெண்மையின் இலட்சியம்... ......சீச்சீ, அவளும் நாற்றமெடுக்கும் தசைக்கூட்டம் தானே! பெண்மையாவது இலட்சியமாவது! அவள் என்ன செய்வாள்?...எப்பொழுதும் சிரித்த கண்கள், புன்னகை ஒளிந்த அதரங்கள். பண்ணை ஐயரின் மகள் என்றால் கவலை என்னத்திற் கிருக்கிறது? மாமரத்து மோட்டுக் கிளைக்

குயில்கள் போல் குதூகலமாக இருந்தாள். குயில்களுக்குத் தம் மோகனக் குரல் - இன்பத்தால் மற்றவரைத் துன்பப் படுத்துவது தெரியுமா? அப்படித்தான் அவளுக்கும். வாழ்க்கை, இன்பம் என்ற பெருங் களியாட்டமாகச் சென்றது.

அப்பொழுது நான் அங்கே போய்த் தொலைந்தேன். வேறு எந்த ஊராவது என் மனத்தில் தோன்றக் கூடாதா? எவனோ ஒரு முட்டாள், "வாழ்க்கை இன்பத்தின் சிகரத்தை அனுபவிக்க வேண்டுமானால் திருநெல்வேலி ஜில்லாவில் தாமிரவருணிக் கரையிலிருக்கும் சிற்றூர்களில் தங்க வேண்டும், அதிலும் முக்கியமாகக் கோபாலபுரத்தில் வாழ வேண்டும்,'' என்று எழுதிவைத்தான். நானும் முட்டாள் தனமாக அங்கே சென்றேன். போன ஒரு மாசம், கொஞ்சங்கூடத் தலைகால் தெரியவில்லை. கோபாலபுரம் மோட்சமாக இருந்தது. எத்தனை கதைகள் எழுதினேன், எத்தனை கனவுகள் கண்டேன்! கோபாலபுரம்...அப்பப்பா, அதை நினைக்கும் பொழுதே......சீச்சீ! என்ன முட்டாள்தனம்!...

.........

பண்ணை ஐயரைப் போல சிநேகத்திற்கு நல்ல மனிதர் கிடையாது. அவருடன் பேசிக்கொண்டிருந்தால் என்ன சுவாரஸ்யம்! ஆனால், ஒவ்வொரு மனிதனிலும் ஒரு பேய் ஒளிந்துகொண்டிருக்கிறது என்பது சுவாரஸ்யமாகப் பேசிக்கொண்டிருக்கும் பொழுது தெரியுமா? எவனொருவனைக் கீறினாலும் இரத்தந்தான் வரும், உள்ளிருக்கும் தீமையைக் காண்பிக்கும் சிவப்பு வெளிச்சம் மாதிரி! மனிதன், அதற்கப்புறம் அவன் சுவாரஸ்யமாகப் புளுகும் விதி, அதைப் பற்றி அதிகமாகக் கூற வேண்டுமானால், வைத்தியக்கார ஆஸ்பத்திரிக்குச் சரியான வேதாந்தம். அதிலிருந்துதான் அம்மாதிரியான அசட்டுத்தனம் வர முடியும். மனித

னுக்கும் தெய்வத்திற்கும் என்ன சம்பந்தம்? விதியாம் விதி!

நான் உட்கார்ந்து எழுதும் அறையிலிருந்து பார்த்தால், லக்ஷ்மி ஜலமெடுக்கப் போவது தெரியும். அவளது களங்கமற்ற சிரிப்பு உள்ளத்தை எவ்வாறு தீய்த்தது என்று யாருக்குத் தெரியும்? நான் மனிதன், கண்டவிடத்தில் எனது உள்ளத்தின் கொதிப்பைத் திறந்து காண்பிக்க முடியுமா? அதிலும் லக்ஷ்மியிடம்? மனிதனும் குரங்கு தான். எதை எடுத்தாலும் பிய்த்து முகரத்தான் தெரியும்.

அவள் எனது இலட்சியம். வேறு ஒருவனைக் கலியாணம் செய்துகொண்டு அவனைக் காதலித்திருப்பவளைக் காதலிக்க எனக்கு உரிமையுண்டா? உணர்ச்சி, உரிமையைத் தான் கவனிக்கிறதாக்கும்! நட்சத்திரம் வேண்டுமென்று அழுகிற குழந்தைக்கு எதைக் கொடுத்து ஆற்ற முடியும்?

எனது காதல் பாபம். எனக்கும் தெரியத்தான் செய்யும். ஆனால் இம்மாதிரியான பாபங்கள் எத்தனை வேண்டுமானாலும் செய்யலாம், செய்ய வேண்டும்! பாபந்தான் மனிதனது உடலைப் புனிதமாக்குகிறது.

மனிதன்.........அவனைப் போல் அசட்டுத்தனமான பிரகிருதிகள் கிடையா. மனிதன் புழு!

அவளுக்கு என் உள்ளத்து எரிமலையின் கொந்தளிப்புத் தெரியாது.

கோபாலபுர மோகத்தில் நாவல் எழுதவேண்டும் என்ற பைத்தியம் பிடித்தது. கோபாலபுரத்தில் வாழ்க்கையைச் சித்திரிப்பது இலக்கியத்தின் வெற்றி என்று நினைந்தேன். படமும் படிப்படியாக வளர ஆரம்பித்தது. அதில் லக்ஷ்மியும் இடம் பெற்றது அதிசயமன்று. சன்னலிலிருந்து பார்க்கும் பொழுது லக்ஷ்மியின் களங்கமற்ற சிரிப்பு எனது நாவலின் வளர்ச்சிக்கு ஊக்கமளித்தது.

அன்று தீபாவளிக்கு முதல் நாள். அவளுடைய புருஷனும் பட்டணத்திலிருந்து வந்திருந்தான். பண்ணையார் வீட்டில் ஏகத் தடபுடல் என்று நான் சொல்லவேண்டுமா? மறு நாள் இந்தப் புழுக்களின் தன்மையைக் காண்பிக்கும் நாள் என்று யார் கண்டார்கள்?

மத்தியானம் நான் அவர்கள் வீட்டிற்குள் போனேன். வாசற்படியில் ஏறினதும் எனக்கு என்னமோ ஒரு மாதிரியாக இருந்தது. எல்லோரும் கூடத்தில் உட்கார்ந்திருந்தார்கள். பண்ணையார் ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருந்தார். எதிரில் ஒரு ஸோபாவில் லக்ஷ்மியும் அவள் கணவனும் உட்கார்ந்திருந்தார்கள். மூவருக்கும் எதிரில் அவள் தம்பி சுந்து, பெரிய மனிதன் போல், உட்கார்ந்திருந்தான். லக்ஷ்மியின் முகம் குன்றிப்போய் வெளிறியிருந்தது. அவள் கணவன் சித்திரப் பதுமை மாதிரி திருதிருவென்று விழித்துக்கொண்டிருந்தான். "அம்பி அவரிடம் ஒரு கடிதம் கொடுத்தான். உமது மேஜையில் இருந்ததாம். அதை எழுதியது நீர்தானா பாரும்!" என்றார் பண்ணையார். எனது மனம் களங்கமற்றிருந்தால்தானே! கடிதம் நான்தான் எழுதினது. ஆனால் அது எனது நாவலின் ஒரு பகுதி. அப்படிச் சொன்னால் நம்புவார்களா? அவள் பெயரும் லக்ஷ்மி. நானும் என்னால் இயன்ற வரை சொன்னேன். மனம் களங்கமாக இருக்கும் பொழுது என்னதான் சொல்ல முடியும்? எனக்குச் சுந்துவின் மீது கோபம் வந்தது. ஆனால் பண்ணையாருக்கும் அவருடைய மாப்பிள்ளைக்கும் லக்ஷ்மியின் மீது சந்தேகம். என் முன்பே நாக்கில் நரம்பில்லாமல் பேசினார்கள். கண்கள் எரிக்குமானால் அவள் என்னை அன்று தீய்த்துவிட்டிருப்பாள். என் மனம் அவளை நோக்கித் தவித்தது. அவள் உள்ளம் எனது செய்கையின் மீது கனன்றது. அவள் மீது அபவாதம்! காரணம் நான்! —அதாவது ஓரளவில் நான்!

மறுநாள் அவள் பிரேதம் கிணற்றில் மிதந்தது. அவளது அசட்டுத்தனம்.

பிறகு அங்கிருக்க முடியுமா? உலகமே எனக்கு எரிமலையாக இருக்கிறதே! ஓரிடத்திலும் தலை வைத்துத் தூங்க முடியவில்லை. மறுபடியும் வந்தாகிவிட்டது.

கோபாலபுரத்துக் கோபுரம் மாந்தோப்பிற்கு மேல் தெரிகிறது. ஊருக்குள் போக முடியுமா? அவளுடைய எண்ணம், மனம், எல்லாம் உடலைப் போல் மறைந்தன. நான் மட்டும் ஏன் பேய் போல் அலையவேண்டும்? அதுதான் விதி என்று சமாதானப்பட்டுக்கொள்ள வேண்டிய விஷயமாம். மனிதன், விதி, தெய்வம்: தள்ளு,—வெறும் குப்பை, புழு, கனவுகள்!

கோபாலபுரம்! இப்பொழுது பெயரைக் கேட்டாலே நடுங்குகிறதே! மறக்க முடியாத மனத்தின் பாறுங்கல் கோபாலபுரம்.



கதை 24

# கொன்ற சிரிப்பு

*கம்பீரமான, மோகனமான குரலிலே பாடுகிறான் கானப்பிரியன்.*

*அங்கிருக்கும் சிங்காதனம் கூட உருகிச் சிரக்கம்பம் செய்யும் போலிருக்கிறது!.........*

*திடீரென்று, ஆஸ்தான மண்டபமே எதிரொலிக்கும் படி எக்காளச் சிரிப்பு!*

---

சோழ சாம்ராஜ்யத்தின் கடைசி உயிர்ப்பு. அந்தகன் என்ற சோழன் பழைய வீர வம்சத்தின் கனவுகளை யெல்லாம் பாழாக்கி, — படாடோபத்திற்கும் வீண் மிடுக்கிற்கும் மட்டும் குறைவில்லை — பொம்மை யரசனாக அந்த வீரர்களின் சிங்காதனத்தை அபசாரம் செய்துகொண் டிருக்கிறான். தெற்கே பாண்டியர்கள் இவன் நாடுகளைக் கபளீகரித்துவிட்டனர். மேற்கே சேரர்கள்....அவர்கள் எந்த நிமிஷத்தில் இவன் சிங்காதனத்தையே காலிசெய்துவிடுவார்களோ! வடக்கே, அம்மம்ம! எத்தனையோ பெயர் தெரியாத அரசர்கள்! அவர்களில் புதிதாக என்னமோ மிலேச்சராம், துருக்கராம், இன்னும் எத்தனையோ பேர்! அந்தகன், மனிதன் தனக்கு நித்திய வாழ்வு என்று மனப்பால் குடிப்பதுபோல், கவலையின்றி அரசாண்டு கொண்டிருக்கிறான். அதுவும், சம்பிரதாயமாக அவன் ஆட்சி செய்துகொண் டிருப்பதாகப் பாவனைதான்...

மருதனூர் என்பது ஒரு சிறு கிராமம். இயற்கையின் எழில் கொழிக்கும் ஒரு தனி...என்ன சொல்வது? வனப்பை வருணிக்க அந்தக் கிராமத்தின் தவப் புதல்வன், அந்த இயற்கை யன்னையின் தாய்ப்பால் பருகிய கானப் பிரியன்தான் பாடவேண்டும். என்னால் கூற முடியுமா? அவன் அங்கு யாருக்குப் பிறந்தான் என்று ஊராருக்குத் தெரியாது.

ஒரு நாள் இரவு குழந்தை யொன்று காளிதேவியின் கோயில் வாசலில் தாயை நோக்கி யழுதது. எந்தத் தாயை நோக்கியோ, அந்தத் தேவிதான் அருளினளோ என்னவோ! அதிலிருந்து காளி கோயில் பூசாரி எடுத்து வளர்த்தான். காளியின் புத்திரன், பூசாரியின் வளர்ப்புப் பிள்ளை...இது தான் கானப்பிரியனின் இளமைச் சரிதம்.

அந்த மோகனமான பொழுதிலே இயற்கைத் தாயின், காளியின் கோர ஸ்வரூபத்திலே, குதூகலித்துக் குர லெழுப்பும் பறவைகளிடத்திலே அவன் கல்வி கற்றான். அது கானமாகக் கவிதையாக எழுந்தது. எல்லோரும் கானப்பிரியன் என்றார்கள். அவனும் கானப்பிரியன் என்று தன்னை யழைத்துக்கொண்டான்.

எப்பொழுதும் அந்தத் தடாகத் துறையிலே என்ன அதிசயமோ! கானப்பிரியனை அங்கு காணாமல் இருக்க முடியாது. இல்லாவிட்டால் குரலெழுப்பும் குயில் கிளைகளின் அடியில் அவன் நின்று கவனித்துக்கொண்டிருப்பதைக் காணலாம். அப்பொழுது அவன் கண்கள்—அவை என்ன தெய்வ தரிசனத்தைக் கண்டனவோ? அவற்றில் என்ன கனவு, எவ்வளவு உற்சாகம்! என்ன என்ன என்று என் னால் சொல்ல முடியுமா? கவிஞனைக் கேட்டுப் பார்க்கவும்.

கானப்பிரியன் சந்தோசப் பிராணி. மனிதர்கள் என்றால் அவன் உற்சாகம் எல்லாம் எங்கோ பதுங்கி

ஒடுங்கிவிடும். அதிலும் பெண்கள்...கேட்கவே வேண்டாம். அவனிடம் பேசுவது என்றால் எல்லாருக்கும் ஆசை; அவனுக்கு மட்டும் கூச்சம். அவனைப் பார்ப்பதிலே ஒரு தனிப் பெருமை.

ஊர் அம்பலகாரரின் மகள் பெண்களின் இலட்சியமா யும் ஆண்களின் கனவாயும் இருந்தாள். அவள்தான் அவனை எப்படியோ பேசவைத்துவிட்டாள். அவன் உள்ளத்தை யறிந்தவள் அவள் ஒருத்திதான். அவன் கவிதையின் கனி வைக் கண்டவள் அவளே.

அவளைச் சாயங்காலம்சந்தித்தால் கானப்பிரியனுக்குப் புதிய பாட்டுக்கள் தேவி அருள் புரிவாள். நாவில் ஸரஸ்வதி நர்த்தனம் செய்வாள். இவர்கள் கூட்டுக் களியிலே, தனிப் பட்ட கனவிலே, தேவியின் பாதுகாப்பிலே, உலகத்தின் இலட்சியம் மறைந்து வாழும்.

அவள் பெயர் காவேரி. அன்று காவேரியின் கன்னி எழில் கம்பனை வளர்த்தது. அது பழைய கதை. இப் பொழுது காவேரி, இந்தக் காவேரி...

அன்று காவேரி ஜலம் எடுத்துவரச் சற்றுத் தாமதம். கானப்பிரியனுக்குக் குயில் சொன்ன கதையையும், மலர் பாடிய பாட்டையும் அவளுக்குச் சொல்ல ஆவல். அந்தச் சூரியாஸ்தமனத்தை அவளிடம் காண்பிக்க...

அதோ அவள் வருகிறாள், ஆசைக் காவேரி!

"கானா? வா, வா!" என்று குடத்தை ஜலத்தில் நழுவவிட்டு அவன்மீது சாய்கிறாள்.

"இன்று ஏன் இவ்வளவு நேரம், போ! அந்தக் குயில்......"

"கானு, இன்று உனக்கு ஒரு சமாசாரம், நீ ஏன் உன் கவியைக் கொண்டு மன்னனிடம் பரிசு பெறக் கூடாது?

இன்று யாரோ ஒரு கவியாம், போகிறானும்,—அதைக் கேட்டுக்கொண்டிருந்தேன். நீ பாடுவதில் நூற்றில் ஒன்றுகூட இல்லை. வெறும் வார்த்தைக் குப்பை, நீயேன்...''

''நானு! அரசனிடமா? நானு!''

''ஏன், கானு? நாம் இருவரும்......'' என்று தழுவிக் குழைந்து அவன் கண்களில் உற்று நோக்கினாள். இருவரும் ஐக்கியப்பட்ட வாழ்க்கையின் கனவு அவள் கண்களில் தவழ்ந்தது.

''காவேரி! உனக்காக நான் போகிறேன்......''

''என்ன, கானு, எனக்காகவா?''

''இல்லை கண்ணே, நமக்காக.''...சற்று மௌனம்.

இருவரும் தழுவி நிற்கின்றனர்.

அந்த மௌனத்தில் அவர்கள் அறிந்தது எவ்வளவோ.

## II

சோழ சமஸ்தானம்.

அந்தகன் கொலுவில் உல்லாசமாக இருக்கிறான். பக்கத்தில் அவனது பிரியை—அதாவது, மரியாதையாக வைப்பு—வாஸந்திகை என்ற ஆந்திரப் பெண். மற்றப் பக்கத்தில் அடைப்பைத் தொழில் புரியும் பணிப் பெண்கள். இடையில் மெல்லிய கலிங்கம், மேலே முத்து வடக் கச்சு.

சற்றுக் கீழே இவனுக்கு ஏற்ற மந்திரி, பிரதானிகள். அவன் நாட்டிலே மாதம் மூன்று மழை பெய்து வருகிறதா, திருடர்கள் கொஞ்சமாகக் கொள்ளை யடிக்கிறார்களா, அந்நியர் வசமாகாமல் இன்னும் எத்தனை பிரதேசங்கள் வரி வசூலிக்க இருக்கின்றன என்பதைப் படாடோபத்துடனும் கூழைக் கும்பிடுடனும் சமூகத்தில் தெரிவித்துக்கொள்ளும் மந்திரிகள்!

சேவகன் ஒருவன் ஓர் ஓலையைக் கொண்டுவந்து அடி பணிந்து நிற்கிறான். அரசன் அதைத் தொட்டுக் கொடுக்க, கற்றுச்சொல்லி பிரித்து, "ராஜாதி ராஜ ராஜ கம்பீர அந்தகச் சோழ மண்டலாதிபதி சமஸ்தானத்திற்குக் கானப் பிரியன் எழுதிக் கொண்டது: எனது கவியைச் சமுகத்தில் அரங்கேற்ற ஆசை.—கானப்பிரியன்," என்று படித்தான்.

"என்ன வாஸந்திகா ?"

"வரட்டுமே !"

"இந்த நடிகைகள் கொஞ்சம் நன்றாகப் பாடி ஆடு கிறார்களே!"

"அவன் தான் வரட்டுமே!"

"சரி, சேவகா, வரச் சொல் !"

கானப்பிரியன் உள்ளே வருகிறான். இயற்கையின் நிமிர்ந்த நடை, நேர் நோக்கு, - கண்களிலே ஏதோ தோன்றி மறைந்து ஒரு கனவு. சபையைப் பார்க்கிறான். செயற் கையின் திறன், பெருமிதம், இறுமாப்பு,—எல்லாம் சற்று மலைப்பை உண்டுபண்ணுகின்றன.

கவிஞன் அரசனைப் பார்க்கிறான். அந்தகன் கானப் பிரியனைப் பார்க்கிறான். வாஸந்திகை இருவரையும் நோக்கு கிறாள். இருவரையும் வெல்ல ஒரு வலை வீச்சு, உலகத்தின் சக்தி அவள் காலின் கீழ். ஏன் உலகத்தின் இலட்சியம் அத்துடன் இருக்கக் கூடாது ?

கானப்பிரியன் அவளைக் கவனிக்கவில்லை.

அரசனை நோக்கிப் பாடுகிறான்.

ஒரு காதற் பாட்டு.

அந்தக் காலத்திலே பாட்டுடைத்தலைவன் பரிசில் கொடுக்கவேண்டிய அரசனாக இருக்க வேண்டியது மரபு.

அதெல்லாம் நினைவில்லை. ஏன் ? தெரியாது.

அவனது காவேரியின் காதல், அவள் கன்னி எழில், வாழ்க்கைக் கனவு எல்லாம் கவிதையாக வடிவெடுத்துட் பொங்குகிறது. கம்பீரமான, மோகனமான குரலிலே பாடுகிறான்.

அங்கிருக்கும் சிங்காதனம்கூட உருகிச் சிரக்கம்பம் செய்யும் போலிருக்கிறது. ஏன்? கம்பன் குரலைக் கேட்டதுதானே!

அங்கு இரண்டு உள்ளங்களை அது தொடவில்லை. ஒன்று வெற்றியை நினைத்து வலை வீசிய கண்களையுடையது. இன்னொன்று, அவளைக் குறித்துப் பாடுவதாக, அவள் மீது அநாவசியமாகக் காதல் கொண்டுவிட்டதாக நினைத்த நெஞ்சம்.

பாட்டு முடிந்தது!

எங்கும் நிசப்தம்.

திடீரென்று, ஆஸ்தான மண்டபமே எதிரொலிக்கும்படி எக்காளச் சிரிப்பு!

ஏளனத்திலே, பொருளற்ற கேலிக் கூத்திலே, கீழ்த்தரக் காமச் சுவையிலே தோன்றி அலைமேல் அலையாயெழுந்த அந்தகனின் எக்காளச் சிரிப்பு!

"சபாஷ், வென்றுவிட்டாயடி வாஸந்திகா!" என்று அவளுக்குச் சீச்சங் காட்டிக்கொண்டு, அவசரத்தில் எச்சிலை ஸ்படிகத்திற்குப் பதில் யார் முகத்திலோ உமிழ்ந்துவிட்டான். இருந்தாலும் உற்சாகம் ஓயக் காணோம். "என்ன, இருந்தால் உன் அழகு இப்படியல்லவா சபையில் இருக்கவேண்டும்! நூற்றில் ஒரு பெண்! நீதான் என் அரசி!" என்று இன்னும் இடியிடி என்று ஒரு சிரிப்பு!

இது ஓயுமுன் கர்ணப்பிரியன் அங்கு இல்லை.

## III

**கா**னப்பிரியனுக்கு உடலெல்லாம் குன்றி உயிர், உற்சாகம், கவிதை, யாவும் குவிந்தன.

நெஞ்சில் இந்திர தனுசால் அடிபட்ட மாதிரி !

பொருளற்ற, அர்த்தமற்ற மிடுக்கு, படாடோபம்! அரசியலாம், பரிசிலாம்...சீச்சீ......

அன்று இருட்டிய பின்...

காளி கோயிலின் முன் கானப்பிரியன் தலைவிரி கோலமாகக் கிடக்கிறான். வெளியே இருந்த இருள் அவன் உள்ளத்தைக் கவ்வியது.

இருளில் ஓர் உருவம்.

" காவேரி !"

" கானப்பிரியா ?"

பதில் இல்லை.

ஓடிவந்து தரைமீது கிடந்த தனது......எடுத்து மடிமீது கிடத்துகிறாள், மார்புடன் அணைக்கிறாள்.

"கானு ! பிரியா !"

" உன் அன்பிலே, தேவி அருளிலே......" அவ்வளவு தான். கானப்பிரியனின் உயிர் தேவியின் திருவருளை நாடிச் சென்றுவிட்டது.

" அடி காவேரி!" உனக்கு வேண்டும். கம்பனையே பாடு படுத்திய சோழ பாரம்பரை யல்லவா! உனக்கு வேணும்! ஏன் உன் பிரியனை யனுப்பினாய் ?

"அடி காவேரி......!"



கதை 25

# பொன்னகரம்

*அது வேறு உலகம், ஐயா!*

---

**பொ**ன்னகரத்தைப் பற்றிக் கேட்டிருக்கிறீர்களா? நமது பௌராணிகர்களின் கனவைப் போல் அங்கு ஒன்றுமில்லை. பூர்வ புண்ணியம் என்று சொல்லுகிறார்களே, அந்தத் தத்துவத்தைக் கொண்டு, நியாயம் என்று சமாதானப் படவேண்டிய விதிதான். ஒரு சில 'மகராஜர்களுக்காக' இம்மையின் பயனைத் தேடிக் கொடுக்கக் கடமைப் பட்டு வசிக்கும் மனிதத் தேனீக்களுக்கு, உண்மையில் ஒரு பொன் நகரந்தான் அது.

ரயில்வே தண்டவாளத்தின் பக்கமாக, சாராய டிப் போவுக்குப் போகிறதே ஒரு சந்து, அதுதான் அங்கு 'மெயின்' ரஸ்தா. கைகோத்த நான்கு பேர் வரிசை தாராளமாகப் போகலாம், — எதிரே வண்டிகள் வராவிட்டால். இதற்குக் கிளையாக உள் வளைவுகள் உண்டு, முயல் வளைகள் போல்.

இந்தத் திவ்வியப் பிரதேசத்தைத் தரிசிக்க வேண்டுமானால், சிறு தூறலாக மழை சிணுசிணுத்துக்கொண்டிருக்கும்பொழுது சென்றால்தான் கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். வழி நெடுகச் சேற்றுக் குழம்புகள். சாலையோரமாக 'முனிசிபல் கங்கை'—அல்ல, யமுனைதானே கறுப்பாக இருக்கும்?—அதுதான். பிறகு ஓர் இரும்பு வேலி,

அதற்குச் சற்று உயரத் தள்ளி அந்த ரயில்வே தண்ட வாளம்.

மறுபக்கம், வரிசையாக மனிதக்-கூடுகள்—ஆமாம், வசிப்பதற்குத்தான் !

தண்ணீர்க் குழாய்கள் ? இருக்கின்றன. மின்சார விளக்கு ? ஞாபகமில்லை — சாதாரண எண்ணெய் விளக்கு, அதாவது சந்திரன் இல்லாத காலங்களில் (கிருஷ்ண பட்சத்தில்) ஏற்றிவைத்தால் போதாதா ?

பொன்னகரத்துக் குழந்தைகளுக்கு 'மீன் பிடித்து' விளையாடுவதில் வெகு பிரியம். அந்த முனிசிபல் தீர்த்தத்தில், மீன் ஏது ? எங்கிருந்த பணக்கார வீடுகளிலிருந்தோ, சில சமயம், அழுகிய பழம், ஊசிய வடை, இத்யாதி உருண்டு வரும். அது அந்த ஊர்க் குழந்தைகளின் ரகசியம்.

ரயில்வே தண்டவாளத்தின் பக்கத்தில் விளையாடுவதில் என்ன ஆனந்தமோ ? வேலி இருக்கத்தான் செய்கிறது. போகக் கூடாது என்ற சட்டம் குழந்தைகளுக்குத் தெரியுமா ? 'போனால்' பெற்றோருக்குத்தான் கொஞ்சம் பாரம் ஒழிந்ததே ! குழந்தைகள்தான் என்ன, 'கிளாக்ஸோ' 'மெல்லின்ஸ் பூட்' குழந்தைகளா, கம்பி இடையில் போக முடியாமலிருக்க ? புகைந்தோடும் அந்த இரும்பு நாகரிகத்திற்கு, வரிசையாக நின்று "குட்மார்னி' சார் !" என்று கத்துவதில் ரொம்ப ஆனந்தம் அவர்களுக்கு. அதுதான், அவர்களுக்குக் கிடைக்கும் ஆரம்ப ஆங்கிலக் கல்வி.

ஐந்து மணிக்கு அப்புறந்தான் ஊர் கலகல வென்று உயிர் பெற்று இருக்கும். அப்பொழுதிருந்துதான் அவ்வூர்ப் பெண்கள் தங்கள் வேலையைச் செய்வார்கள். சாராய வண்டிகள், தண்ணீர் எடுக்க வரும் பெண்கள் ! அங்கு தண்ணீர் எடுப்பது என்றால் ஒரு பாரதப் போர்.

இள வயதில் நரைத்தது போல் பஞ்சு படிந்த தலை, மாசடைந்த கண்கள்,—விடிய விடிய மின்சார 'ஸ்பின்டிலை'ப் (கதிர்) பார்த்துக்கொண்டு இருந்தால், பிறகு கண் என்னமாக இருக்கும்? கண்கள்தாம் என்ன இரும்பா? உழைப்பின் ஆரோக்கியத்தால் ஏற்பட்ட கட்டமைந்த அழகு. ஆரோக்கியமா? அது எங்கிருந்து வந்தது? பாக்டீரியா, விஷக் கிருமிகள், காலரா இத்யாதி அங்கிருந்துதானே உற்பத்தி செய்யப்படுகின்றன! எப்படியாவது உயிர் வாழ வேண்டும் என்று ஆசையிருந்தால் எல்லாம் நடக்கும். பழைய கற்-காலத்து மனிதன், புலி சிங்கங்களுடன் குகையில் வாழ்ந்து வந்தான்; அவைகளும் அவனைக் கொன்றன; அவனும் அவைகளைக் கொன்றான். அதற்காக வலிமையற்று, வம்சத்தை விருத்தி செய்யாமல் செத்தொழிந்தா போனான்? வாழ்க்கையே ஒரு பெரிய வேட்டை, அதற்கென்ன?

கழுத்தில் ஒரு கறுப்புக் கயிறு — வாழ்க்கைத் தொழுவின் அறிகுறி. அதைப் பற்றி அங்கு அதிகக் கவலையில்லை. அது வேறு உலகம், ஐயா, அதன் தர்மங்களும் வேறு.

அம்மாளு ஒரு மில் கூலி. வயது இருபது அல்லது இருபத்திரண்டிற்கு மேல் போகாது. புருஷன் 'ஜட்கா' வைத்திருக்கிறான், சொந்த வண்டிதான். அம்மாளு, முருகேசன் (அவள் புருஷன்), அவன் தாயார், தம்பி, முருகேசன் குதிரை—ஆக நபர் ஐந்து சேர்ந்து அவர்கள் குடும்பம். இருவருடைய வரும்படியில்தான், இவர்கள் சாப்பாடு—(குதிரை உள்பட), வீட்டு வாடகை, போலீஸ் 'மாமூல்', முருகேசன் தம்பி திருட்டுத்தனமாகக் கஞ்சா அடிக்கக் காசு,—எல்லாம் இதற்குள்தான். எல்லாரும் ஏகதேசக் குடியர்கள்தான். 'டல் ஸீஸனில்' பசியை மறக்க வேறு வழி? பசி, ஐயா, பசி! 'பத்தும் பசி வந்திடப் பறந்து

போம்' என்று வெகு ஒய்யாரமாக, உடம்பில் பிடிக்காமல் பாடுகிறீரே, அங்கு நீர் ஒரு நாள் இருந்தால், உமக்கு அடி வயிற்றிலிருந்து வரும் அதன் அர்த்தம்!

அன்றைக்கு முருகேசனுக்குக் குஷி. அவனும், அவன் குதிரையும் 'தண்ணி போட்டு'விட்டு ரேஸ் விட்டார்கள். வண்டி 'டோக்கர்' அடித்தது. ஏர்க்கால் ஒடிந்தது. குதிரைக்குப் பலமான காயம். முருகேசனுக்கு ஊமையடி. வீட்டில் கொண்டுவந்து போடும் பொழுது பேச்சு மூச்சில்லை. நல்ல காலம் குடித்திருந்தான், இந்த மாதிரி வலி தெரியாமலாவது கிடக்க. வீக்கத்திற்கு என்னத்தையோ அரைத்துப் பூசினாள் அம்மாளு. அப்பொழுதுதான் சற்றுப் பேசினான். அவனுக்குப் பால் கஞ்சி வேண்டுமாம்! அம்மாளுவுக்குக் கூலிபோட இன்னும் இரண்டு நாள் இருக்கிறது. வீட்டில் காசேது?

அம்மாளு தண்ணீர் எடுக்க வருகிறாள்.

'கும்'மிருட்டு. பஞ்சாங்கத்தின்படி இன்றைக்குச் சந்திரன் வரவேண்டும். ஆனால் அது மேகத்தில் மறைந்து கொண்டால், முனிசிபாலிடி என்ன செய்ய முடியும்?

எப்பொழுதும் போல் இரைச்சல்தான். ஒருவாறு தண்ணீர் பிடித்தாய்விட்டது. திரும்பி வருகிறாள்.

சந்தின் பக்கத்தில் ஒருவன், — அம்மாளுவின் மேல் ரொம்ப நாளாகக் 'கண்' வைத்திருந்தவன்.

இருவரும் இருளில் மறைகிறார்கள். அம்மாளு முக்கால் ரூபாய் சம்பாதித்துவிட்டாள். ஆம், புருஷனுக்குப் பால் கஞ்சி வார்க்கத்தான்!

என்னமோ கற்பு, கற்பு என்று கதைக்கிறீர்களே? இதுதான், ஐயா, பொன்னகரம்!

கதை 26

# சாயங்கால மயக்கம்

*அந்தச் சண்டைதான் வாழ்க்கையின்*
*ரகசியம், தத்துவம்.*

---

எனது சொந்த ஊரிலிருந்து வந்து வெகு நாட்களாகி விட்டது.

ஊர் ஆசை என்பது, கட்குடி மாதிரி, ஒரு போதை வஸ்து. அந்த ஆசை வந்துவிட்டால், அதற்கு மாற்றுக் கிடையாது, போய்த்தான் தீரவேண்டும். இந்த ஊர்ப்-பித்தம், காதலைப் பார்க்கினும், தேசபக்தி, கடவுள் பக்திகளைப் பார்க்கினும் மிகக் கொடூரமானது. அதன் ஏகச் சக்ராதிபத்தியம் மனத்தில் என்னென்ன கனவுகளை யெல்லாம் எழுப்பும், தெரியுமா ?

அன்று சின்னப் பையனாக இருக்கும் பொழுது தோழனுடன் ஆற்றங்கரையில் சண்டை போட்டது முதல், நான் முதலில் விடியற்கால ஸ்நானத்திற்குச் செல்லும் இன்பம் முதல், எல்லாச் சிறு அற்பச் சம்பவங்களும்,—அடே, அதில் என்ன மோகம் !

ஊருக்குப் போனேன்.

திருநெல்வேலி ஜில்லாவில் தாமிரவருணி நதிக்கரையில் ஒரு சிறு கிராமம். சென்னையில் வசிப்பதால், ராஜீயக் கைதி சிறையில் அநுபவிக்கும் சிரமத்தை யெல்லாம், தியாகம் செய்யாமல் அநுபவித்துவிடலாம். அதிலே ஊருக்குப் போக வசதி கிடைத்தது, இந்த உலகத்திலே கிறிஸ்து

சொன்ன மோக்ஷ சாம்ராஜ்யம் கிடைத்துவிட்ட மாதிரியே இருந்தது.

ரயில் ஏறுவதும், வண்டி போவதும், ஸ்தூலத்தில் நான் ஊரை அநுபவிப்பதும் நடப்பதற்குப் பல மணி நேரத்திற்கு முன்னமேயே, நான் ஊருக்குப் போய்விட்டேன்.

ரயில், கடகட, குப்குப் என்று எனது தியானத்தைக் கலைக்க முயன்றது.

ரயில் செல்லச் செல்ல, சென்னையின் இரைச்சல், ஓம் என்ற ஹுங்காரம், நாகரிக யக்ஷனின் திருக்கண் நாட்டங்கள் — எல்லாம் மெதுவாக மறைந்தன. ஏன்? வேகமாகவே நான் ரயிலில் செல்லவில்லை.

வெளியே நிலா......ஆனால்......

ஆற்றங்கரை மணல்...கரையில் பேராய்ச்சி கோயில்... கண் பொட்டையாக்கும் மாலை மயக்கத்தில் இதன் கோபுரத் தளத்தில், எத்தனை நாவல்கள் எனது மன உலகத்தில் ஒரு வாழ்க்கையைச் சிருஷ்டித்தன!

அப்பொழுது, எங்கெங்கோ வாரி யிறைத்த பிரம்மதேவனின் சிதறுண்ட நம்பிக்கைகள் போல, வாழ்க்கை எரியிட்ட கனல்கள் போன்ற நட்சத்திரங்கள்!

மேல் வானத்திலே அந்த மரமடர்ந்த இருட்டுத் திரைக்கு மேல் செவ்விருள்! அந்தித் தேவனின் சோக நாடகம்!

அந்தச் சாயங்காலம், சீதையின் சோகத்தையும், கதேயின் பாஸ்டையுமே எப்பொழுதும் என் நினைவிற்குக் கொண்டுவருகிறது.

பேராய்ச்சி கோயில் உச்சித் தளத்தில் கையில் புஸ்தகத்துடன் நான்!

நிசப்தம்......

பேராய்ச்சி, காளியின் ஸ்வரூபம்......எங்கள் பெரியண்ணத் தேவருக்குக் குடும்பத் தெய்வம் - தலைமுறை தலைமுறையாகக் காத்துவந்த பேராய்ச்சி...

பேராய்ச்சி! அதில் என்ன தொனி! எவ்வளவு அர்த்த புஷ்டி!

இருண்ட வெளிச்சத்தில் இருண்ட கோரமான சிலை...

தாயின் கருணை. என்ன நம்பிக்கை!

நாளைக்கு அம்மனுக்குக் கொடை.

நாளைக்கு இவ்வளவு நேரத்தில் இங்கு எப்படி யிருக்கும்!

இந்த மௌன சுகம் மருந்திற்காவது கிடைக்குமா?

என் கண்கள் இருட்டில் அசட்டையாகத் துழாவுகின்றன.

கோயில் வாசலில் இரண்டு ஆட்டுக் கிடா.

பெரியண்ணத் தேவருடையவைதான்......அம்மனுக்கு வளர்த்து விடப்பட்டவை.

வாழ்வு நாளை வரைதான் என்று அவற்றிற்குத் தெரியுமா? சித்திரபுத்திரன் மாதிரி, எனக்குத் தெரியும்.

எங்கெங்கோ புல்லையும் பூண்டையும் தின்ற கொழுப்பு-முட்டி விளையாடுகின்றன..."டபார்!"

மண்டை வெடித்துவிடும் போலிருக்கிறது!

பின்னுக்குச் சென்று மறுபடியும் ஓடிவந்து...... "டபார்!"

ரத்தங் கண்டாகிவிட்டது! என்ன கொள்கைப் பிணக்கோ?

நாளைக்கு இரண்டினுடைய இரத்தமும் அந்தப் பலி பீடத்தில் கலக்குமுன், அதற்குள் என்ன அவசரம்?

அதுதான் சுவாரஸ்யம்!

அந்தச் சண்டைதான் வாழ்க்கையின் ரகசியம், தத்துவம். அதிலேதான் நம்பிக்கை வைத்து மனித நாகரிகம் இதுவரை வளர்ந்து வந்திருக்கிறது. இனி !............ அதைப்பற்றி எனக்குத் தெரியாது. 'நாளைக்குப் பலியாகப் போகிறோம்!' என்று தெரிந்தால், இந்த மாதிரி முட்டிக் கொள்ள மனம் வருமா ? வந்தால், முட்டிக்கொள்வதில், வாழ்க்கைப் போட்டியில், சுவாரஸ்யம் ஏற்படுமா ?.........

"ஸார் ! கொஞ்சம் நகர்ந்து உட்காருங்கள் !"

நான் ரயிலில்தான் உட்கார்ந்திருந்தேன். அந்த மாலை மயக்கந்தான்....அந்த ஊர்ப் பைத்தியந்தான் !



கதை 27

# நினைவுப் பாதை

*வீட்டின் பக்கத்தில் நின்று குடிமகன் சுடலை ஊதிய இரட்டைச் சங்கின் அலறல், மறுநாள் வந்ததைப் பிள்ளையவர்கள் பிரக்ஞைக்குக் கொணர்ந்தது...*

---

மேலச் சேவல் வைரவன்பிள்ளை என்ற பாலசுப்பிரமணிய பிள்ளையின் மனைவி வள்ளியம்மை யாச்சி நேற்றுத் தான் இறந்துபோனாள். தம்பதிகள் இருவரும், ஏறக் குறைய அரை நூற்றாண்டுக்கு மேல், வாழ்க்கையின் மேடு பள்ளங்களை யெல்லாம் ஒன்றாகவே கடந்து வந்திருக்கின்றனர். வள்ளியம்மை யாச்சி இறந்துபோனாள். ஏதோ தெய்வ சங்கற்பம் அப்படி. இன்று காடேற்று (இரண்டாம் நாள் கிரியை). நீண்ட நாள் வியாதி ஒன்றுமில்லை. போன சனிக்கிழமை புழக்கடையில் கால் வழுக்கி விழுந்தாள். இடுப்பிலும் விலாவிலும் ஊமையடி. அதில் படுத்தவள்தான் எழுந்திருக்கவே யில்லை.

வயதில் மூத்தவர் இறந்தால், அழுகைக்கும் ஓலத்திற்கும் குறைவில்லாவிட்டாலும், வருத்த மிருக்காது. பெண்கள் ரஸித்து அழுவார்கள்;—வார்த்தைகள் முத்து முத்தாய்க் கோவையாக வந்து விழும். அத்துடன் ஓரிரண்டு துளி கண்ணீரும் கலந்திருக்கலாம். ஆனால் அது அழுகிறவர்களின் சொந்த அந்தரங்க வருத்தத்தைப் பற்றியதாகவே யிருக்கும்.

அன்று இன்னும் விடியவில்லை. விடிவெள்ளி எதிர் வீட்டுக் கூரைக்கு ஒரு முழ உயரத்தில் தொங்குவது

போல் தெரிகிறது. வாசல் தெளிக்கும் சப்தங்கூடக் காலை யின் வரவை எதிரேற்க வில்லை. ஏன், 'துஷ்டிக்காக' (இழவுக்காக) அழுகிறவர்கள் கூட எழுந்திருக்கவில்லை என்றால்...........

வைரவன் பிள்ளை வளைவின் வெளிக் குறட்டில், கோரைப் பாயின்மீது முழங்காலைக் கட்டிக்கொண்டு ஓர் உருவம் உட்கார்ந்திருக்கிறது. வேறு யாருமில்லை. அவர் தான். அன்று அவ்வீட்டில் தூங்காதவர் அவர் ஒருவர் தான். முழங்காலைக் கட்டியபடி, மேலே பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருக்கிறார். குறிப்பாக எதன்மீதும் பார்வையை உபயோகிக்கவில்லை. வெளியே, வாசலில், விசிப் பலகையின் மேல் முழுதும் போர்த்த உடலங்கள், சமயா சமயங் களில் குறட்டை விட்டு, உயிர் இருப்பதைத் தெரிவித்துக் கொள்ளுகின்றன.

வைரவன் பிள்ளை மனது, அண்ட சராசரங்கள் எல்லா வற்றையும் பார்வையிட்டுவிட்டு, மறுபடியும் மறுபடியும் வள்ளியம்மை யாச்சியின் கிடத்தப்பட்ட கற்பனைப் பிரேதத்தின்மீது வந்து கவிகிறது.........

ஏறக்குறைய இந்த ஐம்பது வருஷ காலத்தில் அவர் வள்ளியம்மை யாச்சியைப் பற்றி அவ்வளவாக — முதல் பிரசவத்தில் தவிர—பிரமாதமாக நினைத்தது கிடையாது... மனைவி என்பது நூதன வஸ்துவாக இருந்து, பழகிய பொருளாகி, உடலோடு ஒட்டின உறுப்பாகிவிட்டது. ஒவ் வொருவரும் தமக்கு ஐந்து விரல் இருப்பதை ஒவ்வொரு நிமிஷமும் நினைத்துக்கொண்டா இருக்கிறார்கள் ?......... விரல் ஒன்று போனால் ஐந்தென்ற நினைப்புப் பிறக்கும்... அப்பொழுது அவர் மனக்கண் முன் வள்ளியம்மை யாச்சி புதுப் பெண் கோலத்தில் தம் கைபிடித்து வந்த காட்சி நின்று தேங்கியது......

வைரவன் பிள்ளை தூங்குவதற்காக உட்கார்ந்த இடத்தருகில் ஒரு சிறு ஜன்னல்—பனங் கம்பு 'அழி' வைத்தது. உள்ளிருந்து குசுகுசு என்ற சப்தம்.........

"ஏட்டி, அஞ்சு கொத்துச் சவடி (சங்கிலி) உனக்குன்னு தானேட்டி சொன்ன, பேச்சியம்மை கேக்கதுக்கு மின்னெ நீ போய் உங்க தாத்தாக்கிட்ட கேட்டு வாங்கிக்க!"......

"ஆமாம்......எனக்குத் தூக்கம் வருதுங்கே,—என்னைப் போட்டுப் படுத்தாதே!"......என்று வெடுக்கென்னும் ஓர் இளம் பெண் குரல்......

உடனே 'வீல்' என்று தொட்டிலில் அழும் குழந்தைக் குரல்......

"சவமெ நீயும் ஆரம்பிச்சிட்டியா?......ஒன் வாய் ஓயாதா?......செத்த ஒரு நிமிட்டு சும்ம இரியாதா? எனக்குன்னுதான் வந்திட்டுதம்மா...!" என்ற அங்கலாய்ப்பு...

"அதாரது பாப்பாத்தியா......!" என்று நினைத்தார் வைரவன் பிள்ளை. அவள்தான் பிள்ளையின் நாற்பது வயதான முதல் புத்திரி பாப்பாத்தி யம்மாள். அவளுக்கு, வயது வந்த ஒரு பெண்ணும், நான்கு வயதுச் சிறுவனும், பத்து மாதக் கைக்குழந்தையும் உண்டு......

இதைக் கேட்ட வைரவன் பிள்ளைக்குக் கைக்குழந்தை பாப்பாத்தி, சமைந்து (பருவமெய்தி) சடங்கு நடக்கும் போது அவள் நின்ற கோலம்......அப்புறம் மணப் பந்தலில் அவள் நின்ற காட்சி......எல்லாம் அவர் மனக்கண் முன் சலனப் படமாக விரிந்தது. பாப்பாத்தி எப்பொழுதும் அப்படித்தான்......ஆமாம், அவள் பிறக்கும்போதுதானே கடை முறிந்து நாலு பக்கமும் பணமுடை......கஷ்டத்தில் வளர்ந்த பெண்—காசில் இருந்த கருத்து அளவுக்கு மீறி வளர்ந்துவிட்டது......அவள் மகளுக் கென்று சொல்லியிருந்தால், அவள் மகளுக்குத்தானே......அதற்குள் எதற்கு

இந்தச் சின்னப் புத்தி......"ஏட்டி, இந்த வெத்திலையைத் தட்டு" என்று எடுத்த வாய், — அதி காலையில் எழுந்திருந் ததும் அவர் போட்டுக்கொள்வதற்காகத் தயாராக வெற் றிலையை இடித்து வைத்தல் அவாது பல் போனதி லிருந்து தட்டாது நடந்துவரும் பழக்கம் — சடக்கென்று நின்றது......உள்ளத்தின் குழப்பம் புதிய மாறுபாட்டில் மேலும் குழம்பியது.........

வீட்டின் பக்கத்தில் நின்று குடிமகன் சட்டை ஊதிய இரட்டைச் சங்கின் அலறல் மறுநாள் வந்ததைப் பிள்ளை யவர்கள் பிரக்ஞைக்குக் கொணர்ந்தது... ..அதே சமயத் தில், உள்ளிருந்து பெண்களின் அழுகைக் குரல், சங்கத்தின் ஏக்க அலைகளுடன் தொடர்ந்து மனப் பாரத்தை அதிகப் படுத்தியது......வைரவன் பிள்ளையின் பார்வை விடிவெள் ளியை நாடியது...அது அவர் கண்ணில் தென்படவில்லை... எதிர் வீட்டுக் கூரை, முன்பே அதை விழுங்கிவிட்டது...... கூரையின் உச்சிக்கோடுதான் வானத்திற்கு ஓர் எல்லை காட்டியது...

தெருக் கோடி மூலையில் 'ஜல் ஜல்' என்ற மாட்டுச் சலங்கைகளின் சப்தம்......சிறிது நின்றது. யாரோ இறங்கி னர்......தெருக் கோடியிலிருந்தே......"என்னைப் பெத்த தாயாரே!"......என்ற பிலாக்கணம்......பார்வதியும் வந்து சேர்ந்துவிட்டாள் என்ற திருப்தி வைரவன் பிள்ளைக்கு... பார்வதி கடைக்குட்டிப் பெண்......தூரத்தில் வாழ்க் கைப்பட்டிருக்கிறாள்......

அப்பொழுது விசிப்பலகை ஒன்றிலிருந்த உருவம், எழுந்து, சட சடவென்று சோம்பல் முறித்தவண்ணம், "சம்போ மகாதேவா!" என்று கொட்டாவிவிட்டுக் கொண்டே, "பாட்டையா, நல்லாத் தூங்கினியளா? அதா

ரது ?" என்று சொல்லிக்கொண்டே, வண்டி வந்த திசையை நோக்கியது...

அதற்குள் வண்டியும் மெதுவாக வாசற்படியில் நின்றது......முன்னால் பார்வதி நெஞ்சி லடித்துக்கொண்டே உள்ளே நுழைந்தாள்......உள்ளே அழுகைக் குரல் பலமாயிற்று......

"கரிசங்கொளத்து மாப்பிள்ளை வாராஹ!" என்று சொல்லிக்கொண்டே பக்கத்து வீட்டுக் கள்ளர்பிரான் பிள்ளை—அவர்தான் மற்றொரு பலகையில் படுத்திருந்தவர்—எழுந்திருந்தார்.

மாப்பிள்ளை மௌனமாக வந்து பிள்ளையவர்கள் பக்கத்தில் உட்கார்ந்தார்...தலை குனிந்த வண்ணம் கேட்டார்: "அத்தைக்கு என்ன செஞ்சது? லெட்டர்லெ கூட ஒண்ணையும் குறிப்பிடலியே!..." வைரவன் பிள்ளை பதில் பேசவில்லை.

"ஆச்சிக்கி என்ன? கெடப்பிலே கெடந்தாளா என்ன? ...அண்ணைக்கி என்ன, கால் கொஞ்சம் தவறிச்சு...நல்ல ஊமையடி...இப்படி வரும்னு யார் நெனச்சா...வயசாச் சில்லியா? எல்லாம் தெய்வ சங்கல்பம். அதுக்கு நாம் என்ன பண்ணமுடியும்!...ஆச்சி திரேகம் கல்லுன்னு கல்லுத்தான். ...எண்ணைக்காவது ஒருநா மண்டையிடிண்ணு தலையெ சாச்சிருக்காளா?...அந்தப் பெரிய டாக்டரு இருக்கானே—அவன் எமன்தான்!...அவனே அவ்வளவுதான்னுட்டான்!" என்று வாசாமகோசரமாக விஷயத்தைச் சொல்லி, தேறுதலும் சொல்ல ஆரம்பித்தார் முதலில் எழுந்தவர்...

அப்பொழுதுதான் எழுந்த சுந்தரம் பிள்ளை, நெற்றியில் விபூதியை எடுத்துப் பூசிக்கொண்டே, "போன மாசமேதான் சுப்புபிள்ளை அண்ணாச்சி சொல்லலே, ஆச்சிக்கு ஒரு கண்டமிருக்குன்னு!...நாலும் அண்ணைக்கி விளை

(விளையுமிடம்)யைப் பாத்துட்டு வரப்போ பேசிகிட்டுத் தானே வந்தேன்...எல்லாம் வெள்ளிக்கிளமை களிஞ்சாத் தானின்னார்...காலன் வாரதுக்கு கணக்கிண்ணும், நேரமிண்ணும் உண்டுமா?"...என்று சொன்னார்...

வைரவன் பிள்ளை யோசனையைச் சுடலையின் மற்றொரு சங்கொலி கலைத்துக் குழப்பி அதனுடன் ஒன்றுபட்டது.

அதற்குள் நன்றாய் விடிந்துவிட்டது...

வீட்டினுள்ளிருந்த நான்கு வயதுப் பையனொருவன், இடை அரைஞாண் கயிற்றில் மூலை மட்டும் சொருகிய பட்டுக் கரைத் துண்டு ஒன்றைப் பிரம்மப் பிரயத்தனம் செய்து மேலே இழுத்துப் போட்டும் முக்கால்வாசிப் பாகம் புழுதியில் புரள, வெளியே வந்து குறட்டின் மேல் ஏறினான்.

வைரவன் பிள்ளை, உணர்வற்ற நிலையிலே, அவனை ஒரு கையால் அணைத்தார்.........

அவர் பக்கம் ஒண்டிக்கொண்டு அவரை அண்ணாந்து ஏறிட்டுப் பார்த்த வண்ணம், "நாந்தான் ஆச்சிக்கு நெய்ப் பந்தம் பிடிச்சேனே!" என்று தன் திறமையை விளக்கிக் கொண்டான் சிறுவன்.

"பயலெப் பாருங்களேன்!......ஏலே, ஒங்க ஆச்சியெ எங்கடா?" என்றார் சுந்தரம் பிள்ளை.

"செத்துப் போயிட்டா!" என்று அர்த்தமில்லாமல் சொன்னான் சிறுவன்.

"அது பசலெ, அதுக்கென்ன தெரியும்?" என்றார் வைரவன் பிள்ளை.

"அவனா? வலுப் பயல்லெ, அவனுக்கா தெரியாது!... ஏலே, ஒங்க ஆச்சியை—" என்பதற்குள், உள்ளிருந்து தாம்பாளத்தில் இளநீர் பால் முதலிய கிரியைக்கு வேண்டியவற்றையும், குடம் சொம்பு முதலியவற்றையும் எடுத்து வந்து வைத்த கள்ளர்பிரான் பிள்ளை, "எல்லாம் காலா காலத்

திலே போயிட்டு வந்திட்டா நல்லதுதானே! நீங்க மேல வீட்டு அண்ணாச்சியைச் சத்தங் காட்டுங்க!..." என்றார்.

சுடலை மறுபடியும் மெழுகு வைத்த இரட்டைச் சங்கை முழக்கினான். எல்லோரும் துண்டை உதறித் தோள் மேல் போட்டுக்கொண்டு எழுந்தனர்.........சுடலை முன்னால் முழக்கிக்கொண்டே நடந்தான்.

வைரவன் பிள்ளை கைத்தடியை ஊன்றிக்கொண்டு தள்ளாடி நடந்தார். அவருக்கு முன்னால், தலை முண்டிதமான அவருடைய ஒரே மகன் செல்லுகிறான்...மனசிலோ, நடையிலோ கவலை தள்ளாடவில்லை.

வைரவன் பிள்ளை மனக் கண்முன், மணக் கோலத்தில் பதினாறு வயதில் பார்த்த வள்ளியம்மை யாச்சியின் உருவம் நின்றது......

சுடலை சங்கை முழக்கினான்....

இனிப் பார்க்கப் போவதை வைரவன் பிள்ளை மனது நினைக்க மறுத்தது......

"ஏலே, நீயுமா? திரும்பலியா!" என்ற சுந்தரம் பிள்ளையின் குரல்...பேரன் தொடர்வதைத் திரும்பிப் பார்த்தார்.

மறுபடியும் சுடலை சங்கை முழக்கிக்கொண்டே சந்து திரும்பினான்...



கதை 28

## மனக் குகை ஓவியங்கள்

'சிற்றம்பலமான அவனது உள்ளத்திலே,
தேவரீர் கழலொலி என்ன நாதத்தை
எழுப்புகிறது, தெரியுமா?.........'

---

கர்த்தராகிய பிதா, பரமண்டலத்தின் சாளரங்களில் ஒன்றைத் திறந்து, எட்டிப் பார்த்தார்.

கீழே, பல யோஜனைகளுக்கு அப்பால், அவர் கற்பித்த பூமண்டலமும், அதன்மீது ஊர்ந்து திரியும் சகல ஜீவராசிகளும், அவர் தமது சாயையில் சிருஷ்டித்து மகிழ்ச்சியுற்ற ஆதாம் ஏவாளின் வாரிசுகளும் தென்பட்டன.

ஒரு தாயின் பெருமிதத்துடன், ஒரு சிருஷ்டிகர்த்தரின் கம்பீர மகிழ்ச்சியுடன், அப் பூமண்டலத்தைக் கவனித்தார்.

அன்று ஏழாம் நாள். தொழிலை (விளையாட்டை?) முடித்துக் கை கழுவிவிட்டுச் சிரமபரிகாரம் செய்துகொண்டிருந்த பொழுது எந்த நிலையில் இருந்தனவோ அதே நிலையில், மனிதனைத் தவிர்த்துப் பூமண்டலத்தின் மற்றைய ஜீவராசிகளெல்லாம், அவருக்குத் தென்பட்டன.

மனிதன் மட்டிலும், ஏக்கத்தாற் குழிந்த கண்களோடு, விலாவெலும்பெடுத்த கூனல் உடலை வளைத்து, நெற்றி வியர்வை நிலத்தில் சொட்டச் சொட்ட, எதையோ குகையொன்றில் வைத்து ஊதி ஊதி உருக்கிக்கொண்டிருந்தான்.

பிதாவின் களங்கமற்ற நெற்றியில், கண்ணாடியில் கலந்த ஆவிபோல், சோர்வு போர்த்திய துயரக் களை தோன்றி மறைந்தது.

தம் இரத்தத்தின் இரத்தமான, கனவின் கனவான, லட்சியத்தின் லட்சியமான, புதல்வனின் நினைவு தட்டியது போலும் !

இன்னுமா ?

"ஹே! மானுடா, ஏனப்பா உன் பார்வை குனிந்தே போய்விட்டது?" என்ற குரல், பல யோஜனைகளுக்கு அப்பால் உள்ள மனிதனுடைய உள்ளத்தில் ஒலித்தது.

மனிதன், தன்னுடைய நம்பிக்கை வறண்ட கண்களைக் கொண்டு வானத்தை அண்ணாந்து பார்த்தான்.

"நீர் எப்பொழுதும் அங்கேயே இருக்கிறீரே?" என்று பதில் கேள்வி கேட்டான்.

"நான் என்ன செய்யட்டும்! உன்னை மாசு படுத்தும் அந்தப் புழுதி தோய்ந்த கரங்களுடன், மார்புடன், என்னைக் கட்டித் தழுவ முயலுகிறாயே ?"

" என்னைச் சிருஷ்டிக்க நீர் உபயோகித்த புழுதியை விட்டு நான் எப்படி விலக முடியும்? அதை விட்டு விலகி நான் உம்மை எப்படி வரவேற்க முடியும்? நான் நிமிர்ந்து நேராக நிற்பதற்கே இந்தப் புழுதிதானே ஆதாரம்? புழுதியைக் கண்டு அஞ்சும் உமக்கு, அதன்மீது நிற்கும் என்னை அறிந்துகொள்ளச் சக்தி உண்டா? நீர் அந்தச் சக்தி பெற்றுக் கீழே வரும் வரை, நான் இந்தப் புழுதியில் கண்டெடுத்த—அதில் என்னோடு பிறந்த, என் சகோதரனை—இந்த இரும்புத் துண்டை வைத்து, என்னைப் பாது காத்துக் கொள்ளுகிறேன்!" என்று குனிந்து நெருப்பை ஊதலானான். குகையுள் பளபள வென்று மின்ன ஆரம்பித்தது.

## II

உத்தானபாதனது குழந்தை தெய்வத்திடம் வரம் கேட்பதற்காகத் தபஸ் செய்யக் கானகத்திற்கு ஓடிற்று.

மகாவிஷ்ணுவும் ஸ்ரீதேவியும் ஆகாய மார்க்கமாகச் செல்லும்பொழுது இக்குழந்தையைக் கண்டுவிட்டார்கள்.

ஸ்ரீதேவிக்குப் பசலைக் குழந்தையின் உறுதியைக் கண்டு பரிவு ஏற்பட்டுவிட்டது. தன் கணவருக்கு இருக்கும் அந்தக் 'காத்து அளிக்கும்' சக்தியை விவரம் தெரியாத குழந்தைகள் கூட அறிந்திருக்கின்றனவே என்பதில் ஒரு பூரிப்பு! கணவரைப் பார்த்துக்கொண்டாள்.

ஸ்ரீ தேவியின் கடைக்கண் வீச்சுக் கிணங்கி, வரங்களை வாரிச் சொரியக் குழந்தையை அணுகினார் மகாவிஷ்ணு.

குழந்தை ஓடிக்கொண்டிருந்தது.

பகற் கனவை ரஸித்துப் பல முறை ஏமாந்த குழந்தை அது. அதற்கு எதிலும் சர்வ சந்தேகம். மனத்தின் பேரில் அதற்கு அசைக்க முடியாத, நிரந்தரமான சந்தேகம்.

உத்தானபாதனது மடியில் உட்கார்ந்து விளையாடுவதாக, கொஞ்சுவதாக, நம்பி எத்தனையோ முறை முன் ஏமாந்திருக்கிறதல்லவா?

மகாவிஷ்ணு சங்கு சக்கராயுதராக, அதனை வழி மறித்து நின்று, "குழந்தாய்!" என்று அழைத்தார்.

"நீ யார்?" என்று கேட்டது குழந்தை.

"குழந்தாய், என்னைத் தெரியாதா? நான்தான் மகாவிஷ்ணு!" என்று புன்சிரிப்புடன் தம்மை அறிவித்துக் கொண்டார்.

"பொய்! நான் என்ன கனவு காண்கிறேனா?" என்று தன்னைக் கிள்ளிப் பார்த்துக்கொண்டது குழந்தை.

"நிஜந்தான். இந்தா, இந்த வரத்தைக் கொடுக்கிறேன்! இதிலிருந்து தெரிந்துகொள்!"

"ஓஹோ, செப்பிடுவித்தைக்காரனா?"

"நான்தான் மகாவிஷ்ணு; என் பக்கத்திலிருக்கும் ஸ்ரீதேவியைப் பார்!"

"பகல் வேஷக்காரனும் கூடவா! எங்கப்பா கிட்டப் போ! சம்மானம் குடுப்பார்—என்னை ஏமாத்த முடியாது!" என்று சிரித்துக்கொண்டே, "நேரமாகிறது; தபஸ் பண்ணப் போறேன்!" என்று காட்டிற்குள் ஓடிவிட்டது அக் குழந்தை.

கொடுக்க விரும்பிய வரத்தை ஒரு நட்சத்திரத்தின் மீது வீசி எறிந்துவிட்டு, ஆகாச கங்கையில் ஒரு முழுக்குப் போட்டார் பகவான்.

பசியால் தவிக்கும் 'கல்லினுள் சிறு தேரை' தென் பட்டது. அதை நோக்கி விரைந்து சென்றார்.

## III

யமபுரி.

மார்க்கண்டச் சிறுவனுக்காகப் பரிந்துகொண்டு வந்த சிவபிரான் கையில் தோல்வியுற்று, தர்மராஜன் அப் பொழுதுதான் திரும்பி வந்திருக்கிறான்.

தனது தர்மாசனத்தில் உட்காரவும் அவனுக்கு அச்சம்—தயங்குகிறான்.

ஆசனத்தடியில் விடாப்பிடியாக உட்கார்ந்துகொண்டு முரண்டு செய்துகொண்டிருந்த நசிகேதக் குழந்தை, "மரணம் என்றால் என்ன?" என்று மறுபடியும் தன் மழலை வாயால் கேட்டது.

எத்தனையோ தத்துவங்களைச் சொல்லிப் பார்த்தான். குழந்தையை ஏமாற்ற முடியவில்லை. தன் ஒற்றைக் கேள்வியை வைத்துக்கொண்டு அவனை யுகம் யுகமாக மிரட்டி வருகிறது, அக்குழந்தை.

தோல்வியின் சுபாவமோ என்னவோ!

"மனிதர்கள் என்னைக் கண்டு ஏன் மிரளுகிறார்கள்? அஞ்சுகிறார்கள்? நான் உதவி செய்யத்தானே செல்லு

கிறேன்? எனக்குப் பயந்து என்னையும்விடப் பெரிய எமனை சங்கரனிடம் சரண் புகுந்தாவது என்னை விரட்டப் பார்க்கிறார்களே! இது என்ன புதிர்? என்னைக் கண்டு பயப்படுவதற்கு என்ன இருக்கிறது?'' என்று அவனது ஏக்கப் படுதாவில் நினைவு - அலைகள் தோன்றி விரிந்தன.

அன்றுதான் அவன் தன் தனிமையை முழுதும் அறிந்தான்.

அப்பொழுதுதான் கிங்கரர் இருவர் தன்முன் கொண்டு நிறுத்திய மனித உயிரைப் பார்த்துத் தன் அந்தரங்கக் கேள்வியை வாய் குழறிக் கேட்டுவிட்டான்.

“அதோ கிடக்கிறது பார், நான் போட்டுவிட்டு வந்த உடல்; அதில் போய் உட்கார்ந்துகொள். அப்புறம் உன் கிங்கரர்களை ஏவி, உன்னை அழைத்து வரும்படி உத்தரவு செய். அப்பொழுது தெரியும் உனக்கு!'' என்று சொல்லிச் சிரித்தது அந்த மனித உயிர்.

## IV

பர வெளியிலே, பேரம்பலத்திலே நின்று, தன்னையே மறந்த லயத்தில், ஆனந்தக் கூத்திட்டுப் பிரபஞ்சத்தை நடத்துகிறான் சிவபிரான்.

ஒரு கால் தூக்கி உலகுய்ய நின்று ஆடுகிறான்.

பக்கத்தில் வந்து நின்றார் நாரதர்.

“அம்மையப்பா! எட்ட உருளும் மண்ணுலகத்தைப் பார்த்தருள்க!.........அதோ கூனிக் குறுகி மண்ணில் உட்கார்ந்து, ரசவாதம் செய்கிறானே! சிற்றம்பலமான அவனது உள்ளத்திலே, தேவரீர் கழலொலி என்ன நாதத்தை எழுப்புகிறது, தெரியுமா?......துன்பம், நம்பிக்கை—வறட்சி, முடிவற்ற சோகம்....''

தன்னை மறந்த வெறியில் கூத்தாடும் பித்தனுக்கா இவ் வார்த்தைகள் செவியில் விழப்போகின்றன!

வீணையை மீட்டிக்கொண்டு வேறு திசை பார்த்து நடந்தார் நாரதர்.

## V

கைலயங்கிரியிலே, கண்ணைப் பறிக்கும் தூய வெண் பனிமலை யடுக்குகள் சிவந்த தீ நாக்குகளைக் கக்குகின்றன.

திசையும் திசைத் தேவர்களும், யாவரும் யாவையும் எரிந்து மடிந்து ஒன்றுமற்ற பாழாக, சூன்யமாகப் போகும் படி, பிரான், கோரச் சுடரான நெற்றிக் கண்ணைத் திறந்து, தன் தொழில் திறமையில் பெருமிதம் கொண்டு புன்னகை செய்கிறான்! கண்ணில் வெறியின் பார்வை!

பார்த்த இடங்களில் எல்லாம் தீ நாக்கு நக்கி நிமிர் கிறது!

இடியும் மின்னலும், இருளும் ஒளியும் குழம்பித் தறி கெட்டு நசிக்கின்றன.

இக்குழப்பங்களையும் மீறி ஒரு சிறு குழந்தை அவ னது காலடியை நோக்கி ஓடி வருகிறது.

தோலாடையைத் தன் தளிர் விரல்களால் பற்றி இழுக்கிறது.

பிரான் குனிந்து பார்க்கிறான், புன்சிரிப்போடு.

"அழிப்பதற்குச் சர்வ வல்லமை இருக்கிற தெம்பில் வந்த பூரிப்போ இது?" என்கிறது குழந்தை.

"சந்தேகமா! நீதான் பார்க்கிறாயே!" என்கிறான் பரமன்.

"உமக்கு எல்லாவற்றையும் அழிக்க முடியும். உம்மை அழித்துக்கொள்ள முடியுமா? நீர் மட்டும் மிஞ்சுவதுதான் சூன்யம் என்று அர்த்தமா? உம்மையும் அழித்துக் கொள்ளும்படி நீர் தொழிலை நன்றாகக் கற்றுவந்த பின்பு, நெஞ்சைத் தட்டிப் பார்த்துக்கொள்ளும்!" என்று சொல் லிக்கொண்டே கருகி நசித்தது அக்குழந்தை.

## கதை 29

# ?

*'வான் முகட்டில் தெரிகிறதே ஒரு நட்சத்திரம்,*
*அதைப் போலத்தான் இலட்சியம், தெய்வம்!'*

---

அதுவரை மனிதன் காலடிச் சுவடே படாத பிரதேசங்கள் வழியாகக் குருவும் சிஷ்யனுமாக இருவர் சென்றுகொண் டிருக்கின்றனர். இருவரும் நடந்துகொள்ளும் மாதிரியைத் தவிர, மற்றப்படி வித்தியாசம் தெரியவில்லை. இருவரும் ஒரே வயதினர்; ஒரே விதமான நரை திரை; ரொம்ப நெருங்கிக் கவனித்தால் ஒருவர், சொல்லளவில், சிறிது இளையவர் மாதிரித் தெரியும். ஆனால், முகத்தில் சிந்தனையின் அசைவு ஏற்படும் பொழுதெல்லாம், மூப்பு தானே வெளிப்படும்.

இருவரும் ஹிமய சிகரப் பிரதேசங்களில் உள்ள பனிப் பாலைவனம் வழியாகச் செல்லுகின்றனர். உயிரைக் கருவறுக்கும் குளிர். தூரத்திலே எட்டாத இலட்சியம் போல நிற்கிறது கைலயங்கிரி.

கால்கள் அப்பொழுதுதான் விழுந்த பனிச் சகதிகளில் அழுந்துகின்றன; சில இடங்களில் பனிப் பாறைகளில் வழுக்குகின்றன.

பார்வையின் கோணம் கதிக்க விழத்தக்க ஒரு திருப்பத்தில் வந்து நின்றார் குரு.

"அதோ தெரிகிறது பார்த்தாயா கைலயங்கிரி, உயர்ந்து நிமிர்ந்து கம்பீரமாக வானைக் கிழித்துக்கொண்டு! சிகரத் திலகம் போல அதன் உச்சியில் வான்முகட்டில் தெரிகிறதே ஒரு நட்சத்திரம்,—பிரகாசமாக,—அதைப் போலத்தான்

இலட்சியம், தெய்வம்!" என்று சுட்டிக் காட்டினார் குரு. கண்களில் சத்தியத்தைக் கரைகண்ட வெறி ததும்பி வழி கிறது.

"பிரபோ! நிமிர்ந்து நின்று என்ன பயன்? உயிரற்றுக் கிடக்கிறதே! பிரகாசமாக இருந்தால் மட்டும் போதுமா? ஒருவன் எட்டிப் பிடிப்பதற்காக அது இருந்தென்ன, அல்லது கண்ணுக்குத் தெரியாமல் போய என்ன?"

"ஒருவன் தொட்டால் உலகம் தொட்ட மாதிரி!"

"உலகம் அவனை இழந்துவிடுவதனாலா?"

"இல்லை, உலகத்தை அவன் இழப்பதனால்........."

இருவரும் தலை நிமிர்ந்து நின்று சிகரத்தைப் பார்த்தபடி யோசனையி லாழ்கின்றனர்.

"இல்லை, நான் சொன்னது பிசகு!" என்று தலை குனிகிறார் குரு.

